## A

**Aaraamthinai - ஆறாம்திணை** : ஆசிரியர் அப்பண்ணசாமி. 1999-இல் தொடங்கப் பட்டு நன்கு நடந்துவரும் மின்னிதழ். அனைத்துச் செய்திகளும் இடம் பெறுகின்றன. இதிலிருந்து சில பகுதிகள் எடுக்கப் பட்டு நூலாகவும் வெளிவந்துள்ளன. இதழியலை இது ஆறாம் திணையாகக் கருதுகிறது. சென்னையிலிருந்து வருவது. சென்னை இண்டர் ஆக்டிவ் சர்வீஸ் வெளியிடுகிறது.

**Abacus** - the counting frame having beads, the forerunner of computer and developed 2000 years ago. மணிச்சட்டம்: மணிகள் கொண்ட எண்ணும் சட்டம். 2000 ஆண்டுகளுக்கு முன் புனையப்பட்டது. கணிப்பொறியின் முன்னோடி.

**Abend** - terminating a computer programme early due to an error. **முடித்தல்** : பிழை காரணமாகக் கணிப்பொறி நிகழ்நிரலை முன்கூட்டியே நிறுத்தல்.

**Abort** - to cancel deliberately a procedure in progress **நிறுத்து** : இயக்கத்தில் இருக்கும் ஒரு நடைமுறையைக் கட்டாயம் காரணமாக நீக்குதல்.

**Absolute address** - the actual location in storage for a piece of data. **தனிமுகவரி** : ஒரு தகவல் துணுக்கிற்குரிய சேமிப்பிடம். தனி இனவரி என்றும் கூறலாம்.

**Absolute cell addressing** - cell referencing, kinds of.

**Absolute code** - a programming code using absolute address and operator. **தனிக்குறிமுறை** : தனி முகவரி யையும் செயலியையும் பயன் படுத்தும் நிகழ்நிரலாக்கும் குறிமுறை.

**Absolute error** - the magnitude of deviation of a computation. தனிப்பிழை : ஒரு கணிப்பீட்டின் திரிபளவு.

**Absolute maximum rating** - the machine's maximum working limit as mentioned in it.
**தனிப்பெரும அளவிடல் :** ஓர் எந்திரத்தின் உயர்வரை வேலை செய்யும் எல்லை. இது அதில் குறிக்கப்பட்டிருக்கும்.

**Acceleration time -** the time taken between the interpretation of an instruction and its transfer for storage.
**முடுக்க நேரம் :** ஓர் ஆணைக் குறிப்பை விளக்குவதற்கும் அது சேமிப்பதற்காக மாற்றப் படுவதற்கும் இடையிலுள்ள நேரம்.

**Access -** the ability either to get data or to store it.
**அணுக்கம் :** தகவலைப் பெறுவதற்கு அல்லது சேமிப்பதற்குரிய திறன்.

**Access control register -** this is used to record the access level assigned to an active procedure.
**அணுக்கக் கட்டுப்பாட்டுப் பதிவகம் :** ஒரு வினையுறு நடைமுறைக்கு ஒதுக்கப்பட்ட அணுக்க மட்டத்தைப் பதிவு செய்ய இது பயன்படுவது.

**Access control words -** permanently wired instructions sending transmitted words into reserved locations.
**அணுக்கக் கட்டுப்பாட்டுச் சொற்கள் :** நிலையாக அனுப்பப்படும் ஆணைக்குறிப்புகள் ஒதுக்கப்பட்ட இடங்களுக்குச் சொற்களைச் செல்லுமாறு செய்தல்.

**Access level -** the number of levels at which control mechanisms disallowing interference between modules of software.
**அணுக்க மட்டம் :** மென் பொருள் தொகுதிகளுக்கிடையே குறுக்கீட்டை அனுமதியாது இருக்கும் கட்டுப்பாட்டுப்பொறி நுட்பங்கள். இவை குறிப்பிட்ட எண்ணிக்கையில் இருக்கும்.

**Access time -** the time interval between presenting information for storage in a computer memory device and the instant this information is stored.
**அணுக்க நேரம் :** ஒரு கணிப்பொறி நினைவகக் கருவியமைப்பில் சேமிப்பதற்காகச் செய்தி அனுப்பப்படுவதற்கும் உடன் அது சேமிக்கப்படுவதற்கும் இடையிலுள்ள நேரம்.

**Accumulator -** a register in a microprocessor for storing binary numbers to be used for arithmetic logical and input s output operations.
**சேமகம் :** நுண்முறையாக்கியிலுள்ள பதிவகம் எண் கணிதம், முறைமை மற்றும் உட்பலன் / வெளிப்புலன் செயல்களுக்கு இரும எண்களைச் சேமித்து வைப்பது.

**Accuracy -** nearness of a measured value to its trueness. **துல்லியம் :** நுட்பம்,அளக்கப்பட்ட மதிப்பு கிட்டத்தட்ட உண்மைத் தன்மையை பெற்றிருத்தல்.

**Accurating control character -** a character showing if any data is incorrect for manipulation.
**துல்லியக் கட்டுப்பாட்டு உரு :** கையாள்வதற்கு ஒரு தகவல் தவறானதா என்பதைக்காட்டும் உரு.

**Acknowledge, ack -** a control signal checking if transmitted data has been accepted by the receiver.
**ஒப்புகை :** ஒரு கட்டுப்பாட்டுக் குறிகை செலுத்தப்பட்ட தகவல். பெறுங்கருவியினால் ஏற்றுக்கொள்ளப்பட்டதா என்பதைச் சரிபார்ப்பது.

**Acoustic compiler -** a device in a modem allowing a telephone to transmit digital data over an ordinary telephone line.
**ஒலி இணைப்பி :** இருதிலைச் செயலியில் உள்ளது. பொதுவாக உள்ள தொலைபேசிக் கம்பி வழியாக இலக்கத்தகவலைச் செல்லச் செய்யுமாறு தொலைபேசியை அனுமதிப்பது.

**Active element -** the part of the computer, carrying operations.
**வினையுறுகூறு :** செயல்களைச் செய்யும் கணிப்பொறியின் பகுதி.

**Active master file -** the computer master file as determined by usage data.
**வினையுறு முதன்மைக் கோப்பு :** வழக்காற்றுத் தகவலினால் உறுதிசெய்யப்படும் கணிப்பொறியின் முதன்மைக் கோப்பு.

**Active server pages -**
**வினையுறு பயனாளிப் பக்கங்கள், விபப.**

**Activity level -** the value assumed by a structural variable during solving a problem.
**செயற்பாட்டு மட்டம் :** ஒரு சிக்கலைத் தீர்க்கும் பொழுது, ஓர் அமைப்பு மாறித், தான் கொள்ளும் மதிப்பு.

**Activity ratio -** the ratio between the number of records moved in an updating file and the total number of records in that file.
**செயற்பாட்டு வீதம் :** உயர்த்த வேண்டி, ஒரு கோப்பில் செலுத்தப்படும் பதிவகங்களின் எண்ணிக்கைக்கும் அக்கோப்பிலுள்ள மொத்த பதிவகங்களின் எண்ணிக்கைக்கும் உள்ள தகவு.

**Actuator -** any device under a signal control to do a mechanical action.
**வினையாற்றி :** ஓர் எந்திரச்செயலைக் கட்டுபாட்டுக்குறிகை வழிச் செல்லுமாறு செய்யும் கருவியமைப்பு. **Ada -**
**அடா :** அமெரிக்கப் பாதுகாப்புத்துறை உருவாக்கிய உயர்நிலை மொழி. அறிவியல், தொழில், போர் ஆகிய துறைகளில் பயன்படுவது. **கவுண்ட்லஸ் அடா ல்வ்லாஸ்** பெயரால் அமைந்தது. இவர் சார்லஸ் பாபேஜின் நண்பர்.

**Adapter -** a device in the inquiry buffer unit converting bits of receiving information serially into parallel bit form for use.
**இணைப்பி :** ஆய்வுதாங்கு அலகில் உள்ள கருவியமைப்பு. பெறும் செய்தித் துணுக்குகளைத் தொடர்ச்சியாக ஒரு போகு துணுக்காக நாம் பயன்படுத்துவதற்காக மாற்றுவது.

**Adapter card -** this is a special circuit determining the capability of a monitor.
**இணைப்பி அட்டை :** இது ஒரு மின்சுற்று. கண்காணிப்பியின் திறன்களை உறுதிசெய்வது.

**Adapter card, kinds of -**
**இணைப்பி அட்டை வகைகள் :** 1) வண்ண வரைகலை இணைப்பி, சி.ஜி.ஏ. 2) விரிவு வரைகலை இணைப்பி, ஈ.ஜி.ஏ. 3) திசைச்சாரி வரைகலை இணைப்பி, விஜிஏ. 4) மீத் திசைச்சாரி வரைகலை இணைப்பி, எஸ்.விஜிஏ.

**Adder -** a digital circuit used in calculators and computers. It adds together two binary numbers.
**கூட்டி :** கணிப்பான்களிலும் கணிப்பொறிகளிலும் பயன்படும் இலக்க மின்சுற்று. இரண்டு இரும எண்களைக் கூட்டுவது.

**Adding -**
**கூட்டல் :** நிறம்,படம் முதலியவற்றை ஆவணத்தோடு சேர்த்தல்.

**Add-on -** the ability to increase memory capacity by attaching circuitry.
**மேல்சேர் :** மின்சுற்றை இணைத்து நினைவகத்திறனை உயர்த்தும் திறன்.

**Address -** a number in binary code identifying a particular location where data is stored in a computer memory.
**முகவரி :** இனவரி. இருமக்குறிமுறையிலுள்ள எண். குறிப்பிட்ட இடத்தை இனங் காண்பது. இந்த இடம் கணிப்பொறியில் தகவல் சேமித்து வைக்கப்படுவது.

**Address bus -** an electrical pathway between the micro processor and memory in a computer.
**முகவரிவாய் :** இனவரிவாய். ஒரு கணிப்பொறியில் நினைவகத்திற்கும் நுண்முறையாக்கிக்கும் இடையிலுள்ள மின்வழி.

**Address field -** the part of a computer programme instruction. Here a particular piece of information is located in the computer memory.

**முகவரிப் புலம்** : இனவரிப்புலம் கணிப்பொறி நிகழ்நிரல் ஆணைக்குறிப்பின் பகுதி. இங்குக் கணிப்பொறி நினைவகத்தில் குறிப்பிட்ட தகவல் துணுக்கு அமைந்திருக்கும்.

**Address format -** the description of the member of addresses included in a computer instruction.
**முகவரிப் படிவமைப்பு** : இன வரிப் படிவமைப்பு. கணிப் பொறி ஆணைக் குறிப்பில் உள்ள முகவரி எண்ணின் வண்ணனை.

**Address instruction -** the address of a location having an instruction.
**முகவரி ஆணைக்குறிப்பு** : ஒரிடத்தின் முகவரி, ஆணைக் குறிப்பைக் கொண்டுள்ளது.

**Address register -** here the address part of an instruction is stored by a computer.
**முகவரிப் பதிவகம்** : இங்கு ஆணைக்குறிப்பின் முகவரிப் பகுதி கணிப்பொறியால் சேமித்து வைக்கப்படுகிறது.

**Address space -** the range of address used by a computer for storing programme instructions.
**முகவரி இடம்** : இனவரி எல்லை. நிகழ்நிரல் ஆணைக் குறிப்புகளைச் சேமித்து வைக்கக் கணிப்பொறி பயன்படுவது.

**Add time -** the time required to do an addition or subtraction.
**கூட்டல்நேரம் -** கூட்டல் அல்லது கழித்தலைச் செய்ய ஆகும் நேரம்.

**Ado, activex data objects -**
**அடு** : வினையுறுகொள் தகவல் பொருள்கள் விதபொ. இது மைக்ரோசாஃப்ட் நிறுவனம் அமைத்தது. தகவல் மூலத்துடன் கட்டுப்பாடுகளை இணைக்கப் பயன்படுவது.

**Ado data control -**
**அடு தகவல் கட்டுப்பாடு** : இது ஒரு வரை கலைக் கட்டுப்பாடு. இதில் அடிப்படைச் செலுத்து இயல்புகள் அமைக்கப்பட்டடுள்ளன. இதைக்கொண்டு பல கட்டுப்பாடுகளைப் பின்வருமாறு தகவல் தளத்தோடு இணைக்கலாம். அக்கட்டுப் பாடுகள் பின்வருமாறு. 1) சரிபார்ப்புப் பெட்டி 2) கூடுகைப் பெட்டி 3) உருவம் அல்லது படம் 4) குறியம் 5) பட்டிப்பெட்டி 6) படப் பெட்டி 7) பாடப் பெட்டி

**Adsl, asynchronous digital subscriber line -**
ஏடிஎஸ்எல் ஒத்திசையா இலக்க உறுப்பினர் வழி.

**Advanced option -** an option helping us to find files based on file type.
**முன்னேறிய விருப்பம் :** கோப்பு வகை அடிப்படையில் அமைந்த கோப்புகளைக் காண நமக்கு உதவும் விருப்பம்.

**Adventure -** a popular computer game.
**பரபரப்பு விளையாட்டு :** அனைவரும் விரும்பும் கணிப்பொறி விளையாட்டு.

**Agenda -** the sequence of control statements required for the solution of a computer problem.
**செயல்நிரல் :** கட்டுப்பாட்டுக் கூற்றுகளின் தொடர்; கணிப்பொறிச் சிக்கலைத் தீர்க்கப் பயன்படுவது.

**Algebraic manipulation language -** a programming language used to solve analytic problems.
**இயற்கணிதக் கையாளல் மொழி :** பகுப்புச் சிக்கல்களுக்குத் தீர்வு காணப் பயன்படும் நிகழ்நிரல் மொழி.

**Algol, algorithmic language -** a high level language used mainly for mathematical and scientific applications.
**ஆல்கால், விதிமுறை மொழி :** கணித மற்றும் அறிவியல் பயன்பாடுகளுக்கு உதவும் உயர் நிலை மொழி. வழிமுறை மொழி என்றுங் கூறலாம்.

**Algorithm -** in computer programming it is a list of instructions to solve a problem. **விதிமுறை :** கணிப்பொறி நிரலாக்கலில் ஒரு சிக்கலைத் தீர்ப்பதற்குரிய ஆணைக் குறிப்புப் பட்டியல்

**Algorithm, properties of - விதிமுறைப்பண்புகள் :**1)குறிப்பிட்ட எண்ணிக்கையில் இருத்தல். 2) ஒவ்வொரு வழியும் குழப்பத்திற்கு இடமில்லாமல் நிறைவேற்றப்பட வேண்டும்.3) குறிப்பிட்ட நேரத்தில் ஒவ்வொரு வழியும் நிறைவேற்றப்படவேண்டும். இதற்கு குறிப்பிட்ட அளவு நினைவக இடத்தைப் பயன்படுத்தவேண்டும்.4) குறிப்பிட்ட அளவு நேரத்தில் முழு நிகழ்நிரலும் முடிக்கப்பட வேண்டும்.

**Alignment -** the process of adjusting components of a system for proper interrelationship.
வரிசையாக்கம் : உரிய இடைத்தொடர்புக்கு ஒரு தொகுதியின் பகுதிகளைச் சரிசெய்யும் முறை.

**Align attribute -**
**வரிசையாக்க இயல்பு :** ஒரு பக்கத்தில் பாடத் தொடர்பாகப்

படம் எங்கு இருக்க வேண்டும் என்பதை இது மேய்விக்குக் கூறுவது, இடப்பக்கமாக அமைவது.

**Alink attribute -**
**வினையுறு இணைப்பு இயல்பு :** சுட்டெலியை இணைப்பில் தட்டும்பொழுது, அது வினையுறு இணைப்பு ஆகிறது. தவறு என்பதன் மூலம் இணைய ஆராய்வியும் வலைய நோக்கு செலுத்தியும் இந்த இணைப்புகளைச் சிவப்பாகக் காட்டும். இந்த இயல்பு இந்நிறத்தை மாற்ற உதவும்.**alink-active link.**

**Allocation - earmarking complete programmes to a storage system.**
**ஒதுக்கீடு:**ஒரு சேமிப்புத் தொகுதிக்குரிய முழு நிகழ்நிரல்களைக் குறித்தல்.

**Alphabetic string-**பா.**character string.**

**Alphanumeric-எண்ணெழுத்து :** எழுத்து,எண்,குறி,உரு முதலியவற்றைக் கொண்டது.

**Alphascope-**an interactive device.
**அல்பாநோக்கி:**ஓர் இடை வினைப்படும் கருவியமைப்பு.

**Alternate method of formatting-**
**படிவமைப்பு மாற்று முறை :**ஒரு குறிப்பிட்ட பாணியை உருவாக்கி, அதை ஓர் ஆவணத்திற்குப் பயன்படுத்தல். வரி இடை வெளிவிடல், பத்தி வரிசையாக்கம், ஒதுக்கிச் செய்தல் முதலியவை இதில் தேவைப்படா.

**Alteration switch-** sense switch
**மாற்றுச் சொடுக்கி :**நுண்ணுணர் சொடுக்கி

**Aiter clause-**
**மாற்று உட்பிரிவு:**உட்பிரிவுகளில் ஒருவகை.

**Alu,arithmetic and logic unit -**
**ஏஎல்யூ:**எண்கணித மற்றும் முறைமை அலகு.

**Ambalam-**
**அம்பலம்:** ஒரு மின்னிதழ்.1999 ஏப்ரலில் தொடங்கப்பட்டது. சென்னை டிஷ் நெட்டிலிருந்து வருவது.பா.**minambalam.**

**Ambiguity error-** an error in reading a number in two ways,eg 699-799.
**இருமைப்பிழை:**ஓர் எண்ணை இருவழிகளில் படிப்பதிலுள்ள பிழை. எ-டு 699-799.

**Amplitude-**the magnitude of a variable.
**வீச்சு:**ஒரு மாறியின் அளவு.

**Analogue-** 1.having a continuous range of values.
2.things in the real world.
**1)ஒப்புமை:**தொடர் மதிப்பு எல்லைகளைக் கொண்ட
**2)மெய்ப்புமை:**உண்மை உலகப்பொருள்கள்.

**Analogue computer-**that which produces continuously varying signals. **ஒப்புமைக் கணிப்பொறி:** தொடர்ந்து மாறுபடும் குறிகளை உண்டாக்குவது.

**Analogue signal-**an electronic signal got by variations in the signal voltage; a continuous wave on like digital signal.

**ஒப்புமைக் குறிகை:** குறிகை மின்னழுத்தத்தால் ஏற்படும் மாறுபாடுகளால் பெறப்படும் மின்னணுக் குறிகை; இலக்கக் குறிகை போல் அல்லாமல் தொடர்ச்சியான அலை.

**Analytical engine** - **பகுப்பு எந்திரம்**: சார்லஸ் பாபேஜ் என்பவரால் அமைக்கப்பட்டது. தற்கால இலக்கக் கணிப்பொறிக்கு அடிப்படையாக அமைந்தது. நீராவியாற்றலால் இயங்கியது.

**Analogue-to-digital converter, adc- digitizer** - a device converting an analogue signal into a coded digital signal. **ஒப்புமை-இலக்கமாற்றி, ஏடிசி** : இலக்கமாற்றி, ஒப்புமைக்குறிகையை குறிமுறையுள்ள இலக்கக் குறிகையாக மாற்றும் கருவியமைப்பு.

**Ananthakrishnan m. Dr.** - **முனைவர் மு. அனந்த கிருஷ்ணன்** (1928-): தமிழக அரசு முதல்வர் கலைஞருக்குத் தகவல் தொழில் நுட்பவியல் அறிவுரையாளர். கணிப்பொறி அறிவைத் தமிழ்நாடு மின்னாட்சி மூலம் முழுதும் பெற முயன்று கொண்டிருப்பவர். அண்ணாப் பல்கலைகழக முன்னாள் துணைவேந்தர்.

**Anchor tag** - one of the tags used to create link in connection with documents. **நங்கூர ஒட்டு** : ஒட்டுகளில் ஒன்று. ஆவணங்களை இணைக்கப் பயன்படுவது.

**And gate** - a decision making building block in digital circuits producing an output of binary 1. **உம்வாயில்** : இலக்க மின்சுற்றுகளில் உள்ள முடிவுசெய்யும் தொகுதி, இரும 1 என்னும் வெளிப்பலனை உண்டாக்குவது.

**And operaion** - alogical operation. **உம் செயல்** : ஒரு முறைமைச் செயல்.

**And operator** - this operator returns a true value only when both operands are true. In other cases it returns a false value. **உம் செயலி** : இரு செயலிடங்களும் உண்மையாக இருக்கும் பொழுது, செயலி உண்மை மதிப்பையே தரும். ஏனைய நிலைகளில் அது தவறான மதிப்பையே கொடுக்கும்.

**Animated graphics** - pictures moving across a screen under the control of a programme. **எழுச்சியூட்டும் வரைகலை** : ஒரு நிகழ்நிரல் கட்டுப்பாட்டில் படங்கள் திரையில் ஒடுதல்.

**Animation control** - it enables the user to display avi chips, miniature movies sequentially to create the animation. **எழுச்சியூட்டும் கட்டுப்பாடு:** இதைக்கொண்டு பயனாளி வரிசையாக ஏவிஜ நறுவல்கள், சிறுபடங்கள் ஆகியவற்றைத் திரையில் காட்ட இயலும், எழுச்சியூட்டலை உருவாக்க இயலும்.

**Animation control, optional parameters of-**
**எழுச்சியூட்டும் கட்டுப்பாட்டின் தெரிவுச் சுட்டளவுகள்:** இவை மூன்று. 1) திரும்பச்செய், 2) தொடங்கு 3) நிறுத்து.

**Animatronics -**
**எழுச்சிமிகு மின்னணுத்தொலைஇயல் :** இச்சொல் **animation, electronics, robotics** ஆகிய மூன்று சொற்களின் தொகுப்பு. தவிர, இது ஒரு தொகுப்புத் தொழில் துட்பம், இறப்பு,நிகழ்வு,எதிர்வு ஆகிய மூன்று காலங்களிலும் கற்பனை உண்மையைக் காட்டுவது. மிகப்புதிய அறிவியல் துறை (17-10-2000).

**Anjal** -
**அஞ்சல்:** தமிழ் மின் னஞ்சல் பணி, பதிவுபெற்ற பயனாளிகள் 25,000.

**Annotation -** explanation added to a programme to help the reader. **விளக்கவுரை:** வாசகருக்கு உதவ ஒரு நிகழ்நிரலோடு சேர்க்கப்படும் விளக்கம்.

**Ansi, american standards institute -** a committee designing standards for data processing.
**ஆன்சி, அமெரிக்கத் தர நிலையம்:** தகவல் முறையாக்கலை வரையறைப்படுத்தும் குழு.

**Anti piracy software-**
**கள்ள எதிர்ப்பு மென்பொருள்:** மென்பொருள்கள் கள்ளத்தனமாகக் கையாளப்படுகிறது. இதைத் தடுக்க இம்மென்பொருள் பயன்படுகிறது. இது ஒரு பாதுகாப்புமுறை.

யாரும் உரிமையில்லாமல் இதை அணுக இயலாது. டில்லி, உற்பத்தித் திறன் மன்றம் உருவாக்கியுள்ள எண் சுருள் சுற்று **(dsw-digital spring winding)** என்னும் கருவியமைப்பைக் கொண்டு இத்திருட்டை தடுக்கலாம்.

**Anto peter.m-**
**எம்.ஆண்டோ பீட்டர்:**துத்துக்குடியைச் சார்ந்தவர். தமிழில் தணியா ஆர்வங்கொண்டு கணிப்பொறித் தமிழை நாளும் வளர்த்து வருபவர். இவர் தொடங்கிய தமிழ் சினிமா முதல் தமிழ் இணைய இதழ் என்று சொல்லலாம். இவரிடம் 300 வகைத் தமிழ் அச்செழுத்துகளும் 1500 கேளிக்கைக் கலைகளும் உள்ளன. கணிப்பொறித்தமிழ் உலகில் இவருக்கு நல்ல பெயர்.

**Anugraphics-**
**அனுவரைகலை :** உரிமையாளர் முரளிகிருட்டினன் இந்திய மொழிகளில் கணிப்பொறி அச்செழுத்துகளை உருவாக்கி வருகிறார். அனு எழுத்துகள் அனைவரும் அறிந்த தமிழ் அச்செழுத்துகள்.

**Apple-**
**ஆப்பிள்:**இது ஒரு தனியாள் கணிப்பொறி, 1975இல் ஸ்டீவ் ஜான், ஸ்டீபன் வோஸ்னியக் ஆகிய இருவரும் இதைப்புனைந்தனர்.

**Apl-** a high level language meant for mathematical operations.
**ஏபில்:** ஓர் உயர்நிலை மொழி. கணிதச் செயல்களுக்காக உள்ளது.

**Application -** a programme doing some useful task. It has a large number of objects like form, controls, and menus. The small sections of code control these objects.
**பயன்பாடு:** இது பயனுள்ள பணியைச் செய்யும் நிகழ்நிரல்,படிவங்கள், கட்டுப்பாடுகள்,பட்டிகள் முதலிய பல பொருள்களைக் கொண்டது. குறிமுறையின் சிறு பகுதிகள் இப்பொருள்களைக் கட்டுப்படுத்துபவை.

**Application file -**
**பயன்பாட்டுக் கோப்பு :** வேறுபெயர் நிகழ் நிரல் கோப்பு. ஏதாவது ஒன்றை நாம் செய்ய உதவுவது. எ-டு விளையாட கணக்கீடுகள் செய்ய.

**Application programme-**
**பயன்பாட்டு நிகழ்நிரல்:** குறிப்பிட்ட சிக்கலைத் தீர்க்க

எழுதப்படும் நிகழ்நிரல். குறிப்பிட்ட அறிக்கையை உருவாக்கலாம். ஒரு குறிப்பிட்ட கோப்பை மேம்படுத்தலாம்.

**Application project-**the organization of different files making up the application.
**பயன்பாட்டுத்திட்டம் :** பயன்பாட்டை உருவாக்கும் வேறுபட்ட கோப்புகளின் தொகுதி.

**Application project, starting of-**
**பயன்பாட்டுத் திட்டத்தைத் தொடங்கல்:** ஒரு புதிய பயன்பாட்டுத் திட்டத்தைத் தொடங்கப் பின்வரும் படி நிலைகள் உள்ளன. 1) திட்ட மடிப்பட்டையைத் தட்டு. இது திட்ட ஆராய்விச்சாளரத்தில் உள்ளது. 2) பண்புச்சாளரத்திலுள்ள (பெயர்) வரிசையின் வலப்பத்தியைத் தட்டு. திட்டம் 1 லிருந்து திட்ட முதல் பயிற்சிக்குத் திட்டத்தின் பெயர்ப் பண்பை மாற்ற இது பயன்படும். 3) படிவச்சாளரத்திலுள்ள படிவத்தைத் தட்டு. இது தவறான படிவத்தை நடப்புப் பொருளாக மாற்றும். 4) பண்புச் சாளரத்திலுள்ள பெயர் வரிசையின் வலப்பகுதியைத் தட்டு. தவறான படிவப் பெயர்ப் பண்பை மாற்ற இது பயன்படும். கூட்டுவட்டி போல, தலைப்புப் பண்பையும் மாற்று. இப்பொழுது படிவம் தயாராகும். படிவத்தையும் திட்டத்தையும் மறுபெயரிடு. தொடர்வதற்கு முன் திட்டம் சேமிப்புக்குள்ளாகும்.

**Application software-**
**பயன்பாட்டு மென்பொருள்:** ஒரு குறிப்பிட்ட பயன்பாட்டுக்குரிய செயல்களை நிறைவேற்றப் பயன்படும் நிகழ்நிரல்களின் தொகுப்பு. மென்பொருளில் ஒருவகை. எ-டு சமன்பாடுகளைத் தீர்க்க, தேர்வு முடிவுகளை முறையாக்க, சம்பளப் பட்டியல் தயார்செய்ய, மாத மின் பட்டியல் தயார் செய்ய பா. System software.

**Architecture** - the arrangement, design and interconnection of components within the system.
**கட்டமைப்பு :** ஒரு தொகுதியில் பல பகுதிகள் அமைந்திருக்கும் முறை, மற்றும் வடிவமைப்பு ஆகியவற்றைக் குறிப்பது.

**Arithmetic and logic unit, alu - an essential hardware component of cpu doing arithmetic(addition, subtraction)and logical(and, or...)Operations on data.**

**எண்கணித மற்றும் முறைமை அலகு,ஏஎல்யு:** ஓர் இன்றியமையா வன்பொருள், கூட்டல் கழித்தல் முதலிய எண் கணிதச்செயல்களையும் உம், அல்லது முதலிய முறைமைச்

செயல்களையும் தகவல்களைக் கொண்டுசெய்வது. மையச் செயலகத்தின் ஒருபகுதி.

**Arithmetic operation- - எண் கணிதச் செயல்:** 3+4+5 இதில் படிநிலை வரிசை உண்டு.

**Arithmetic operator** - this operator returns numerical results: eg operator:+ name:addition,example 1 + 1.

**எண்கணிதச் செயலி:** எண் பலன்களைத் தருவது.எடு செயலி பெயர் கூட்டல், எ-டு. 1+1.

**Arithmetic statement- - எண் கணிதக் கூற்று:** இது சி மொழி தொடர்பானது. பொதுவாகச் சி மொழி எண்கணிதக் கூற்று. செல்லத்தக்க சி கோவையை மதிப்பிடப் பயன்படுவது. வேண்டிய மாறிலியாக விளை பயனைச் சேமிப்பது இதன் பொது படிவமைப்பு பின்வருமாறு.

**Variable = expression**
மாறிலி = கோவை

எ-டு.

**I = j + k3**
**x = y + 2**
**z = a + 2**
**I = k**

**Arpanet- - ஆர்பா இணையம்:** 1967-68 ல் உருவாகியது. இணையத்தின் வடிவமைப்பை பற்றியது. அணுப்போர் ஏற்பட்டால் கூட. இது அழியாது.

**Array-a collection of memory locations in a computer.**

**நெடுவரிசை:** ஒரு கணிப் பொறியிலுள்ள நினைவக இடங்களின் தொகுப்பு.

**Array declaration-**
**நெடுவரிசை அறுதியீடு:**ஏனைய மாறிலிகளைப்போல,அறுதியிடப்பட வேண்டும். இண்ட் புளோட் சார் முதலிய வகைகளில் ஏதாவது ஒன்று இருக்கலாம். ஒரு பரும நெடுவரிசையை அறுதியிடுவதற்குரிய பொதுப்படிவமைப்பு பின்வருமாறு.

**Data type array-**name(n)
**தகவல் வகை நெடுவரிசை :** பெயர் (என்).

**Array,kinds of-**
**நெடுவரிசை வகைகள்:**
**1.இரு பரும வரிசை:** இரு ஒரு பரும வரிசைகளைக் கொண்டது.
**2.முப்பரும வரிசை:** இது இரு பரும வரிசைகளைக் கொண்டது.
**3.கே பருமவரிசை:**கே பரும வரிசைகளைக் கொண்டது.
**4.பன்மப் பரும வரிசை:** ஒரு பரும வரிசையை ஒத்தது.

**Array, multidimensional-**
**பன்மப் பரும நெடுவரிசை:**இது சி மொழியில் இயலக் கூடியது. இதில் தகவல்கள் வரிசையாகச் செல்லும்

**Array processing-**
**நெடுவரிசை முறையாக்கல்:** ஒரு தனிச்செயலில் முழு நெடுவரிசையையும் முறையாக்க இயலாது. இதன் ஒவ்வொரு கூறும் தனித் தனியே பார்க்கப்பட வேண்டும். இதற்கு வளையங்கள் பயன்படும். சி மொழியில் பல வளையங்கள் இருந்த போதிலும்,மிகப்பரவலான வளையம் பாஃர் லூப் என்பதாகும்.

**Array processor-a high speed computer.**
**நெடுவரிசை முறையாக்கி:**ஓர் உயர்விரைவு கணிப்பொறி.

**Artificial intelligence, al-**
**செயற்கை நுண்ணறிவு, ஏஐ:** கணிப்பொறி அறிவியலின் ஒரு பிரிவு. மனித அறிவு நடத் தையை ஒத்த எந்திரங்களை உருவாக்க முயல்வது. 1950 களில் உருவானது.

**Ascii, american standard code for information interchange-**
**அசைய், அமெரிக்கத் தகவல் இடைமாற்ற தரக் குறிமுறை:**தகவல் செலுத்து வதற்குரியது. இதில் 7 பிட் குறிமுறைகள் உள்ளன. இது ஒரு வகைக் கோப்பே. படிக்கக் கூடிய பாடத்தை மட்டுமே கொண்டிருக்கும்.

**Asdl, asynchronous subscriber digital line-**
**ஏஎஸ்டிஎல், ஒத்திசையா உறுப்பினர் இலக்க வரி.**

**Asp -**
**ஏஎஸ்பி:**பயனுள்ள இடையப் பக்கங்களை அமைப்பதற்குரிய தொழில் நுட்பம் இது 1966 ஜூலை 6. இல் அமெரிக்க மைக்ரோ சாப்ட் நிறுவனத்தால் அறிவிக்கப்பட்டது.

**Assembler-**
**கோவையாக்கி:**
மற்றொரு மொழிபெயர்ப்பு நிகழ்நிரல். கோவை மொழி நிகழ்நிரலை எந்திர மொழியாக்குவது.

**Assembly language-**
**கோவைமொழி:**இதில் நினைவுக் குறிப்பு முறை பயன்படுத்தப் படுகிறது. சிக்கலுக்குத் தீர்வு காணுவதற்குரிய நிகழ்நிரல் களை அமைக்க இக்குறி முறை கள் பயன்படும்.
**A,b** என்னும் இரு எண்களைக் கூட்டுவதற்குரிய நிகழ்நிரல் பின்வருமாறு:
நிகழ்நிரல் வண்ணனை குறிமுறை
aஐப்படி aமதிப்பு படிக்கப்படுகிறது.
Bஐச்சேர் aயுடன்bஇன்மதிப்புசேர்க்கப்படுகிறது.
Cஐச்சேமி c இல் விளைபயன் சேமிக்கப்படுகிறது.
Cஐ அச்சிடு சி.இல் விளைபயன் அச்சிடப்படுகிறது.
நிறுத்து செயலை முடி.

**Assign clause-**
**ஒதுக்கு உட்பிரிவு:**உட்பிரிவுகளில் ஒரு வகை

**Assignment operator-**
**ஒதுக்கு செயலி:**சி மொழியிலுள்ள இன்றியமையாச் செயலி, எ-டு சமக்குறி = இதற்குரிய படிவமைப்பு. மாறி = கோவை

**Associative memory-**a data storage device.
**இயைபு நினைவுகம்:**ஒரு தகவல் சேமிப்புக் கருவியமைப்பு.

**Associative processor-**a digital computer
**இயைபு முறையாக்கி:**ஓர் எண்ணிலக்கக் கணிப்பொறி.

**Asynchronous computer-**
**ஒத்திசையாக் கணிப்பொறி:**இதில் ஒவ்வொரு தகவலுக்கும் தொடங்கு பிட்டும் முடியும் பிட்டும் தேவை. குறிகை முதன்மைக் கடிகையிலிருந்து வருவதில்லை.

**Asynchronous data-**
**ஒத்திசையாத் தகவல்:**தகவல் ஒழுங்கற்ற இடைவெளிகள் செல்லுமாறு அமையும்.

**Attack director-**an electro mechanical analogue computer.
**தாக்குஇயக்கி:**மின் எந்திர முறையில் இயங்கும் ஒப்பு மைக் கணிப்பொறி,

**Attenuation equalizer-**a corrective network.
**செறிவொடுங்குசமனாக்கி:**ஒரு திருத்தும் வலையமைவு.

**Attribute-**a data item having extra information about a variable: eg action attribute. This information modifies the function of the tag. **இயல்பு** : ஒரு மாறிக்குரிய செய்தியைக் கொண்டுள்ள தகவல் இனம்: எ.டு செயல்இயல்பு, முக இயல்பு, இத்தகவல் ஒட்டின் வேலையை மாற்றவல்லது.

**Attribute, kinds of -**
**பண்பு வகைகள் :** 1. அகலப்பண்பு, 2. கரைப்பண்பு, 3. அனைத்து இடைவெளிப்பண்பு, 4. நுண்ணறைத்திண்டுப் பண்பு.

**Audio cassette recording -** a common serial access mass storage method
**கேட்புப் பேழைப்பதிவு** : ஒரு பொதுவான தொடர் பேரளவுச் சேமிப்புமுறை.

**Audio conferencing -**
**கேட்புக்கூட்டம் :** வேறுபட்ட இடங்களிலுள்ள மக்களுக்கிடையே நடைபெறும் கூட்டம்; தொலைபேசி மூலம் தொடர்பு கொள்ளுதல்.

**Audit -** the operations developed to confirm the evidence regarding authenticity and validity of the data in a system.
**தணிக்கை :** ஒரு தொகுதியி லுள்ள தகவலின் நம்புகை முறைமை பற்றிய சான்றை உறுதி செய்யும் செயல்கள்.

**Augment -** to increase a quantity so as to bring it to a required value.
**உயர்த்தல் :** வேண்டிய மதிப்புக்கு ஓர் அளவின் மதிப்பை மேம்படுத்தல்.

**Authoring language -** a programming language used for authors of computer based learning materials.
**ஆசிரிய மொழி** : நிகழ்நிரலாக்கும் மொழி. கணிப்பொறிப் பொருள்களை அறிய ஆசிரியர்களுக்குப் பயன்படுவது.

**Auto answer -** the ability of a modem to answer automatically incoming phone calls.
**தன்விடை**: உள்வரும் அழைப்புகளுக்குத் தானாக விடையளிக்கும் இருபண்புச் செயலியின் திறன்

**Autocode -** the processing of using a computer to convert automatically a symbolic code into a machine code.
**தற்குறிமுறை :** குறிபாடுள்ள ஒரு குறிமுறையை எந்திரக்குறி ,

முறையாகத் தானாக மாற்றும் முறை. இதைக் கணிப்பொறி செய்யும்.

**Auto-correct option -**
**தானே திருத்தும் விருப்பம் :** இது மிகவும் பயனுள்ளது.பொதுவாக நிகழும் எழுத்துப் பிழைகளை நீக்குவது.

**Auto format sheet -** a facility of starcalc keeping to format the worksheet with different predefined styles and colours.
**தன் படிவமைப்புத் தாள் :** ஸ்டார்கால்கின் வசதியகம். முன்னரே உறுதிசெய்த வேறுபட்ட பாணிகளையும் நிறங் களையும் கொண்டு வேலைத்தாளைப் படிவமைக்க உதவுவது.

**Automatic carriage -** a mechanism to feed continuous paper thro a printing device.
**தானியங்கு உருளை :** அச்சியற்றும் கருவியமைப்பு வழியாகத் தொடர்ச்சியாகத் தாளைச் செலுத்தும் பொறிநுட்பம்.

**Automatic character recognition -**
**தானியங்கு உரு அறிதல் :** எண்ணெழுத்துத் தகவல்களை அறிவதற்குரிய தொழில்நுட்பம்.

**Automatic data processing -**
**தானியங்கு தகவல் முறையாக்கல் :** தானியங்கு கருவியினால் நடைபெறுவது.

**Automatic indexing -** a selection of keywords from a document by computer as index entries.
**தானியங்கு பொருளடைவு :** கணிப்பொறி ஓர் ஆவணத்திலிருந்து திறவுச்சொற்களைப் பொருளடைவுப் பதிவுகளாகத் தேர்ந்தெடுத்தல்.

**Automatic programming -** preparation of machine language instructions by means of a computer.
**தானியங்குநிகழ் நிரலாக்கல் :** கணிப்பொறி மூலம் எந்திர மொழி ஆணைக் குறிப்புகளைத் தயாரித்தல்.

**Automatic semantics -** a technique of describing a particular programme; the description is an attempt to prove that a programme is fault free.
**தானியங்கு சொற்பொருளியல் :** குறிப்பிட்ட திகழ்நிரல் கூற்றை வண்ணனை செய்யும் நுட்பம். ஒரு நிகழ்நிரல் தவறு. நீங்கியது என்பதை மெய்ப்பிக்கும் முயற்சியே இது.

**Auto monitor -** a debugging computer program instructing a computer to make a record of its own operations.
**தானியங்கு கண்காணிப்பி :** பிழை நீக்கும் கணிப்பொறி நிகழ்நிரலாக்கல். இதில் கணிப்பொறி தன் செயல்களைத் தானே செய்யுமாறு ஆணைக் குறிப்பு வழங்கப்படும்.

**Auto-spelling correction -**
**தானியங்கு எழுத்துப் பிழை திருத்தம் :** இது தவறான எழுத்துப் பிழைகளை நீக்கும் முறை.

**Auxiliary devices - துணைக் கருவியமைப்புகள் :** இவை காந்தப் பரப்புள்ள பதிவு செய்யும் கருவியமைப்புகள். அவை பின்வருமாறு 1) வன்வட்டுகள், எச்.டி.டி. 2) மென்வட்டுகள், எஃப்.டி.டி. 3) நெருக்க வட்டுகள், சி.டி.டி. விரிவு அவ்வப்பதிவுகளில் காண்க. **Availability -** the computer devices being ready for use.
**பயனுடைமை :** பயன்படுத்துவதற்குக் கணிப்பொறிக் கருவிகள் அணியமாய் இருத்தல்.

**Avl tree -** a binary research tree.
**ஏவிஎல் மரம் :** இரும ஆராய்வு மரம்.

B

**Back button -**
**பின் பொத்தான் :** ஒரு செலுத்தும் பொத்தான்.

**Backing -**
**வளை பொருள் :**ஆக்சைடு பூச்சைச் சுமந்து செல்லக் காந்த நாடாவிலுள்ள நெகிழ்பொருள்.

**Backing storage -**
**வளை சேமிப்பு :** பருமச் சேமிப்பு.

**Background attribute -**
**பின்னணி இயல்பு :** ஒரு பக்கத்தின் பின்னணியாக ஒரு படத்தை இதன்மூலம் காட்டலாம்.

**Background noise -**
**பின்னணி இரைச்சல் :** நுண் முறையாக்கி செயல்படும் பொழுது, குறுக்கிடும் அலைக்கழிவு. வழக்கமாக இது புறத்திலிருந்து வரும் தகவல்.

**Band -**
**பட்டை :** 1) வட்டப் பதிவுத்தட்டைத் தொகுதி. எ-டு காந்த உருளை வட்டு. 2) அலை வரிசை.

**Bandwidth -**
**அலை வரிசை :** செலுத்து வழியில் உண்டாகும் தகவல்களின் அதிர்வெண் எல்லை. இது அதிகமாக அதிக மாகத் தகவல் தொடர்புத் திறனும் அதிகமாகும். அலகு ஒரு வினாடிக்கு இத்தனை மெகாபிட்டுகள் **(mbps)**

**Barcoding -**
**பட்டைக்குறி முறை :** இதில் வேறுபட்ட தடிமனும் இடமும் உள்ள சிறு பட்டைகள், அடைப்பங்கள், வில்லைகள் முதலியவை அச்சிடப்படும். இவை ஒளிப் படிப்பானால் படிக்கப்பட்டு மின்துடிப்புகளாக மாற்றப்படும். படைக் கோலங்கள் தனித்தன்மை வாய்ந்தவை. நன்கு திட்டப்படுத்தப்பட்டிருக்கும். எ.டு மளிகைப் பொருள். இது 10 இலக்கக் குறிமை கொடுக்கப்பட்டிருக்கும்; பொருளின் ஒவ்வொரு கொள்கலத்திலும் இருக்கும்.

**Barrel printer -**
**உருளை அச்சியற்றி :** கணிப்பொறி அச்சியற்றி இதில் உருக்கள் தொகுதி முழுதும் விரைவாகச் சுழலும் உருளை வழியாகச் செல்லும்.

**Base -**
**அடிஎண் :** எண்முறையில் பயன்படும் தனிக்குறிமுறையுள்ள எண், சுழியில் தொடங்கும் அடிஎண் 2 என்பது 0.1 ஆகிய இரு எண்களைக் கொண்டது.

**Base band -**
**அடிவரிசை :** தகவல்; குரல் ஒலி கொண்டது. **base language -**
**அடிப்படை மொழி :** குறைந்த அளவு வசதிகளைக் கொண்டது. தொடக்கத் தகவல் வகைகள், எளிய செயல்கள், கட்டுப்பாட்டு அமைப்புகள்.

**Basic, beginners all-purpose symbolic instruction code -**
**பேசிக் :** தொடக்க நிலையடுக்குக்குரிய அனைத்து நோக்க குறிபாட்டுக் கட்டளைக் குறிமுறை. ஓர் உயர் நிலைக் கணிப்பொறி மொழி, வல்லுநர் அல்லாதவர்களும் இதை எளிதாகக் கையாளலாம்.

**Basic concepts -**
**அடிப்படைகருத்துகள்** : கணிப்பொறி பின் வரும் நான்கு கருத்துகள் அடிப்படையில் அமைந்தது. 1) சிக்கல், 2 விதிமுறை, 3) விதி முறைப் படம் 4 நிகழ்நிரல் மொழி.

**Basic software -**
**அடிப்படை மென்பொருள்** : தகவல் முறையாக்கு வன்பொருளை வடிவமைப்பதில் பயன்படும் மென் பொருள்கள்.

**Basic units -**
**அடிப்படை அலகுகள்** : கணிப்பொறியின் அடிப்படை அலகுகள் பின் வருமாறு உட்பலன், 2) மையச்செலகம் அலகு கட்டுப்பாட்டு அலகு), 3) நினைவக அலகு, 4) வெளிப்பலன் அலகு. விளக்கம் அவ்வப்பதிவுகளில் காண்க.

**Batch -**
**தொகுதி** : இனங்கள்,பதிவகங்கள், ஆவணங்கள் ஆகியவற்றைக் கொண்டது. இது ஒரு தனி அலகாக முறையாக்கப்படும்.

**Batch processing -**
**தொகுதி முறையாக்கல்** : தகவல்களை முறையாக்கும் ஒருவகை முறை. இதில் நடவடிக்கைகள் தொகுதி தொகுதியாக ஒருங்கு சேரத் திரட்டப்படும். கணிப்பொறியால் இயக்கப்படுவது எ-டு தனிப்பட்ட பணிகளைச் செய்தல்.

**Beat -**
**விம்மல்** : ஓர் ஆணைக் குறிப்பைச் செயல்படுத்துவதோடு தொடர்புள்ள அலகு நேரம் மைய முறையாக்கியின் நிகழ்நிரல் கட்டுப்பாட்டுக் கருவியில் இக்குறிப்பு இருக்கும்.

**Begin -**
**தொடங்கு** : ஆல்கல் மொழிக் கூற்று. ஒரு தொகுதி தொங்குவதைச் சுட்டிக் காட்டுவது. இத்தொகுதியின் மாறியில் இது இருக்கும். Endமுடி என்பதும் இதில் அடங்கும்.

**Bemchmark -**
**நிலைக்குறி** : வேறுபட்ட கணிப்பொறிகளுக்கு அளிக்கப்படும் ஆய்வு. அவற்றின் தகவல் முறையாக்கும் திறன்களையும் செயல் விரைவையும் ஒப்பிடப் பயன் படுவது.

**Tag -**
**பேரொட்டு** : இது பாட எழுத்தை வழக்கத்திற்கு மாறாகப் பெரிதாகக் காட்டுவது. எப்பொழுதும் இது முடிவு பெரிய ஒட்டோடு பயன்படுத்தப்படும். எ-டு.

**<big> happy new year</big>** இது பின்வருமாறு திரையில் தெரியும்.

**Happy new year**

**Bgcolour attribute - பின்னணி நிற இயல்பு:** உடல் ஓட்டோடு இது சேர்ந்து ஒரு பக்கத்திற்குரிய பின்னணி நிறத்தைச் சுட்டிக்காட்டும். Bg-back ground- பின்னணி.

**Bharat bhasha - பாரத் மொழி :** மாய்ட் (mat) நாஸ்கம் **(nassagom)** ஆகிய இரண்டு அமைப்புகளும் மென்பொருள், வன்பொருள் துறைகள் சார்ந்தவை. பாரத் மொழி என்னும் திட்டத்தைத் தொடங்கியுள்ளன. ஆங்கிலம் பேசாதவர்களுக்காக வகுக்கப்பட்ட திட்டம். வட்டார மொழிகளில் கணித்தலை வளர்ப்பதே நோக்கம் (1998).

**Bill gates - பில்கேட்ஸ் :** அமெரிக்க மைக்ரோசாப்ஃட் நிறுவனத்தின் தலைவர். கணிப்பொறிக் கோடீஸ்வரர். கணிப் பொறித்துறையில் மென்பொருள் உருவாக்குவதில் ஒரு பெரும் புரட்சியை உண்டாக்கியவர். எ-டு விண்டோஸ். இணைய வளர்ச்சியிலும் இன்று அதிக நாட்டம் செலுத்திவருகிறார்.



பில் கேட்ஸ்

**Bin - குதிரகம் :** காந்த நாடா நினைவகம். இதில் ஒரே தொகுதியாகக் காந்த நாடாக்கள் அமைந்திருக்கும்.

**Binary arithmetic** - arithmetic done with binary numbers, 0,1. The addition of binary numbers is the basis of binary arithmetic done by the arithmetic and logic unit of a microprocessor. **இரும எண்கணிதம் :** 0, 1 என்னும் இரும எண்களால் நடைபெறும் எண்கணிதம். எல்லா இரும எண்கணித அடிப்படை இரும எண் கூட்டலே. இது நுண்முறையாக்கியின் எண்கணித முறைமை அலகலால் செய்யப்படுவது.

**Binary arithmetic, components of - இரும எண் கணிதத்தின் பகுதிகள் :** 1) நிரப்பு குறி மானம், 2) மாற்றல், 3) குறிப்பிட்ட விரிவு, 4) பெருக்கல். பொதுவாக, இக்கணிதம் எண்முறை சார்ந்தது.

**Binary cell - இரும நுண்ணறை :** கணிப்பொறி நினைவகத்தின் அடிப்படை அலகு 1, 0 எண்களைச் சேமித்து வைக்க வல்லது.

**Binary code - இரும குறிமுறை :** கணிப்பொறி பயன்படுத்தும் வகையில் எண்கள் இரும எண் தொகுதிகளாகத் தெரிவிக்கப் படுவது.

**Binary digit number - இரும இலக்கம் :** இரும எண் முறையில் ஓர் எண்ணைத் (010) தெரிவிக்கப் பயன்படும் 0, 1 இலக்கங்கள்.

**Binary operation - இருமச் செயல் :** இரும எண்கணிதச் செயல். இதில் இரு செயலிடங்கள் பயன்படும்.

**Biobreak - கழிவறை செல்லுதல்.**

**Bistable storage device - இரு நிலைச் சேமிப்புக் கருவியமைப்பு :** இவை கணிப்பொறியிலுள்ள நுண்ணறைகளை வடிவமைப்பது.

**Binary numbers - இரும எண்கள் :** இடக்குறி மானத்தைப் பயன்படுத்தி இவை உண்டாக்கப்படுபவை எ-டு 10111. இரும எண்முறையில் 2 இன் மடங்குகள் தொகுதிகளாகப் பயன்படுகின்றன.

**Bit -** a binary digit, 0,1, the basic unit of information in computer and a contraction of binary digit. **இருமி:** இரும இலக்கம், 0, 1. தகவலின் அடிப்படையலகு. **Binary digit.** என்பதன் சுருக்கம். ஒ.**byte.**

**Bit matrix -** a two-dimensional array in which each element is equal to 0, 1. **இருமியணி :** ஓர் இரு பரும நெடுவரிசை இதில் ஒவ்வொரு கூறும் எண் 0 அல்லது l க்குச் சமம்.

**Bit pattern -** the sequence of 0s and 1s in a binary word. **இருமிக் கோலம் :** ஓர் இருமச் சொல்லில் 0, 1 என்னும் எண்கள் இருக்கும் வரிசை முறை.

**Bit rate -** the speed in bits per second unit kbps, mbps. **இருமி வீதம் :** ஒரு வினாடியில் உண்டாகும் இருமிகளின் விரைவு அலகு ஒரு வினாடிக்கு இத்தனை கிலோ இருமிகள், ஒரு வினாடிக்கு இத்தனை மெகா இருமிகள்.

**Blaise pascal (1623-1662) -** the 17th century scientist who developed the mechanical calculator.

**பிளாய்சி பாஸ்கல் (1623-1662) :** 17ஆம் நூற்றாண்டு அறிவியலார், எந்திரக் கணிப்பானை அமைத்தவர். **Blamestorming - குழுக்கலந்துரையாடல்**

**Blank - வெற்றகம் :** பொருளற்ற தகவலிடம்.

**Blast - வெடிப்பு :** இயக்கக் சேமிப்பின்பொழுது ஒரு கணிப்பொறி நிகழ்நிரலின் கட்டுப்பாட்டிலிருந்து நினைவகப்பகுதிகளை விடுவித்தல். இதனால் ஏனைய நிகழ்நிரல்களின் மறு ஒதுக்கீட்டிற்கு இப்பகுதிகள் கிடைக்கும்.

**Block -** a group of information units considered as a single unit, eg. Records, words and characters. **தொகுதி:** ஒரு தனித் தொகுதியாகவுள்ள தகவல் அலகுகளின் தொகுதி. எ-டு பதிவகங்கள், சொற்கள், உடுக்கள்.

**Block data -** a statement in fortran. **தொகுதித் தகவல் :** பார்ட்ரான் மொழியிலுள்ள கூற்று.

**Block diagram -** the diagramatic representaion of any system: eg. Computer programme. **தொகுதிப்படம் :** கட்டப்படம் ஓர் அமைப்பின் படக்குறியீடு. எ-டு கணிப்பொறி நிகழ்நிரல்.

**Blocking -** the grouping of individual records into blocks to achieve a greater efficiency for input / output operators. **தொகுதியாக்கல் :** உட்பலன்/வெளிப்பலன் செயல்களின் பெரும் பயனுறுதிறனைப் பெற தனிப் பதிவகங்களை ஒன்று சேர்த்தல்.

**Block mark -** a special character indicating the end of a block. **தொகுதிக்குறி :** ஒரு தொகுதி முடிவதைக் குறிக்கும் தனி உரு.

**Board - பலகை :** விரைப்பான காப்புப் பொருள் கொண்ட பலகை. இதில் ஒருங்கிணைந்த சுற்று பொருந்தி இருக்கும்.

**Bob franhston - பாப் பிராங் கஸ்டன் :** 1979-இல் ஆப்பிள் கணிப்பொறிக்காகக் காட்சிக் கணிப்பானைப் புனைந்தவர்.

**Body tag - உடல் ஒட்டு :** இதன் இயல்பைப் பயன்படுத்திப் பின்னணி நிறத்தை மாற்றலாம், புதிய படத்தைச் சேர்க்கலாம்.

**Boolean algebra -** a shorthand way of writing complex combination of logical statements either false or true. It was developed by george boole, a 19th century mathematician. **பூல் இயற்கணிதம் :** உண்மை அல்லது தவறான முறைமைக் கூற்றுகளை அரிய முறையில் சுருக்கி எழுதும் வழி. 19 ஆம் நூற்றாண்டில் வாழ்ந்த கணக்கறிஞர் பூல் என்பவரால் உருவாக்கப்பட்டது.

**Boolean operator -** a logic function: eg and.

**பூல் செயலி :** ஒரு முறைமைச் சார்பலன் எ-க. உம்.

**Boolean search -** a search for selected information expressed by and, or and not functions.

**பூல் தேடல் :** தெரிவு செய்ய வேண்டிய தகவலைத் தேடிக் காணல், மற்றும், அல்லது, இல்லை என்னும் சார்பலன்களால் தெரிவிக்கப்படுவது.

**Boot -** the mode of loading an operating system from a magnetic disk into a computer's memory.

**பொதி ஏற்றல் :** காந்த வட்டிலிருந்து கணிப்பொறியின் சுமை ஏற்றும் முறை. ஓர் இயங்கும் அமைப்பில் இது நடைபெறுவது.

**Bootstrap button -** otherwise known as boot button. The first button pressed to turn on a computer. It causes the operating system to be loaded into memory.

**புதைமிதிநாடா பொத்தான் :** வேறுபெயர் புதைமிதி பொத்தான். கணிப்பொறியை இயக்க முதலில் கொடுக்கப்படும் பொத்தான். இயங்கு அமைப்பில் நினைவகம் ஏறி அமரச் செய்வது.

**Bootstrapping - பொதியேற்றல்.** Boot.

**Border attribute -** this attribute specifies the thickness of the border around the table.

**கரைப்பண்பு :** இப்பண்பு கரையின் தடிமனைக் குறிப்பது கரை அட்டவணையைச் சுற்றி அமைந்திருக்கும்.

**Borrow -** a carry signal arising a subtraction when the difference between digits is less than zero.

**கடன் வாங்கல் :** இது ஒரு கொண்டுசெல் குறிகை. இலக்கங்களுக்கிடையே வேறுபாடு சுழிக்குக் குறைவாக இருக்கும் பொழுது கழித்தலில் தோன்றுவது.

**Box -** a flow chart symbol representing the logical unit of a system or program.

**பெட்டி** - வழிமுறைப்படக் குறியீடு. ஓர் அமைப்பு அல்லது நிகழ்நிரலின் முறைமையலகைக் குறிப்பது.

**Brainware - அறிவுப்பொருள்:** நிகழ் நிரல் சார்ந்தது

**Branch -** a portion of a network having one or two more terminal elements in series. Otherwise known as arm. **பிரிவு :** ஓர்

வலையமைப்பின் பகுதி தொடர்வரிசையில் ஒன்று அல்லது இரண்டு முனைக் கூறுகளைக் கொண்டிருக்கும். வேறு பெயர் கை.

**Branching -** selection of one or two more branches under the control of a computer programme, a fundamental control structure. **பிரிதல் :** கிளைத்தல். ஒரு கணிப்பொறி நிகழ்நிரலின் கட்டுப்பாட்டிலுள்ள ஒன்றுக்கு மேற்பட்ட கிளைகளைத் தேர்ந்தெடுத்தல். ஓர் அடிப்படைக் கட்டுப்பாட்டு அமைப்பு.

**Branching, kinds of - பிரிதல் வகைகள் : 1) இருவழிப் பிரிதல்:** ஒரு வினாவைக் கேட்டு விடை 'ஆம்', 'இல்லை' என்று வருவதாக வைத்துக்கொள். விடையைப் பொறுத்துக் கிடைக்கக் கூடிய இரு வழிகளில் ஒன்றுக்குச் செல். **2) பல்வழிப் பிரிதல் :** சில வினாக்களுக்கு 'ஆம்' அல்லது 'இல்லை' விடை இராது. எ-டு இச்சிறுவனின் அகவை என்ன? இதற்குரிய விடை பல முழு எண்களால் ஒன்றாக இருக்கும், விடையைப் பொறுத்து, வேறுபட்ட பல கணிப்பீடுகளைச் செய்ய வேண்டும். இதற்கு வேறுபட்ட வழிகளில் செல்ல வேண்டும்.

**<br>tag-பிஆர் ஒட்டு :** இது வரிமுறிவை உண்டாக்கப் பயன்படுவது. பா. **Tags.**

**Brain - மூளை :** ஒரு நிகழ்நிரல் மென்பொருளகத்தால் உருவாக்கப்பட்டது. கோப்புகள் இடையப் (வெப்) பக்கங்கள், அடைவுகள் ஆகியவற்றை அடைக்கப் பயன்படுவது.

**Branch instruction -** the instruction making the computer choose between alternative sub-programmes. **பிரிவு ஆணைக்குறிப்பு :** மாற்றுத் துணை நிகழ்நிரல்களுக்கிடையே ஒன்றைக் கணிப்பொறி தேர்ந்தெடுக்குமாறு செய்யும் குறிப்பு.

**Break -** an interruption of a transmission. **முறிவு :** ஒரு தகவல் செலுத்துகைத் தடைப்படல்.

**Break contact -** the contact of a switching device opening a circuit upon the operation of the device. **முறிதொடர்பு :** சொடுக்கு கருவியமைப்பின் தொடர்பு. இது செயற்படும் கருவியமைப்பின் மின்சுற்றைத் திறப்பது.

**Breakpoint -** a port in programme. Here the instructor digit enables a programmer to interrupt the run by external intervention. **முறிநிலை :** ஒரு நிகழ்நிரல் நிலை. இங்கு ஆணைக் கட்டளைக் குறிப்பு இலக்கம் ஓட்டத்தைத் தடைசெய்ய

நிகழ்நிரலடுக்கு உதவும். இது புறக்குறுக்கீட்டினால் நடைபெறுவது.

**Bridgeware -** either software or hardware aids. **இணைப்புப் பொருள் :** மென் பொருள் அல்லது வன்பொருள்.

**Broad band technology - அகல்வரிசைத் தொழில் நுட்பம்** : உயர் அதிர்வெண்கள் பற்றிய தொழில் நுணுக்கம். இணையத்திற்கு உயர் அகல் வரிசை வழங்குவதில் நான்கு முறைகள் உள்ளன.

1) தற்பொழுதுள்ள செம்பு அல்லது ஒளி இழைக் தொலை பேசிக் கம்பிகள் வழியாக புதிய தொழில் நுட்பமான இலக்க உறுப்பினர் வழியைப் (dsl) பயன்படுத்தல்.

2) இலக்க அனைத்து வழிக் கம்பிகள் வழியாக அனுப்புவது (isdn).

3) கம்பிவடத் தொலைக்காட்சி வழியாக அனுப்புவது.

4) நேரடியாக வீட்டிற்கு (dth) அனுப்புதல். இதற்குச் செயற்கை நிலாக்கள் பயன்படுதல். இவற்றைத் தனியார் வட்டு உணரியுடன் இணைத்தல். அகல்வரிசை வழியாகத் தகவல், குரல், காட்சி ஆகியவை செல்பவை.

**Broadcast** - simultaneous transmission of information to a member of terminals.

**தகவல் பரப்பு** : பல முனையங்களுக்கு ஒரே சமயம் தகவல் செல்லுதல்.

**Browsing** - finding information in internet at random.

**மேய்தல்** : இணையத்தில் தகவலை மேலோட்டமாகப் பார்த்தல்.

**Browser- மேய்வி** : மேய்தலைச் செய்யும் ஒரு தனிநிகழ் நிரல். இதன்மூலம் வலையமைவிலிருந்து தகவலைத் தேடிக் கண்டுபிடிக்கலாம். இது இரு வகை: 1) இணைய ஆராய்வி, இது விண்டோஸ் 98 இன் ஒரு பகுதி. 2) வலைக் காட்சிச் செலுத்தி. இது பரவலாக உள்ளது.

**Bubble memory** - the computer memory. In this memory the presence or absence of a magnetic bubble in a localised region of a thin magnetic film shows 1 or 0.

**குமிழி நினைவகம்** : கணிப் பொறி நினைவகம். இதில் ஒரு மெல்லிய காந்தப் படலத்திலுள்ள உள்ளிடப் பகுதியில்

காந்தக்குமிழி உள்ளதா இல்லையா என்பதை 1 அல்லது 0 என்னும் எண் காட்டும்.

**Budgetting** - the process of allocating resources to a particular development.

**பாதீடுசெய்தல்** : ஒரு குறிப்பிட்ட வளர்ச்சிக்கு வளங்களை ஒதுக்கும் முறை.

**Buffer** - a device connected between two other devices in order to strengthen a signal: eg. Buffer in microprocessor.

**தாங்கமைவு** : வேறு இரு கருவியமைப்புகளுக்கிடையே உள்ள கருவியமைப்பு. இதன் வேலை குறிகைக்கு வலுவூட்டுதல். எ.டு. நுண்முறையாக்கியிலுள்ள தாங்கமைவு.

Buffer zone - an area of main memory set aside for temporary storage. தாங்குமண்டலம் : முதன்மை நினைவகப் பகுதி; தற்காலிகச் சேமிப்பிற்காக உள்ளது.

Bug - an error in a computer programme.

பிழை : ஒரு கணிப்பொறி நிகழ்நிரலிலுள்ள தவறு. ஒ. Virus.

உணர்வி : இயக்கம், வெப்ப நிலை, கதவைத் திறத்தல் மூடுதல் முதலியவற்றை அளக்கப் பயன்படும் கருவியமைப்பு.

A device to measure movement, temperature and closing and opening of door.

Building block - a circuit having a particular function: eg. Flip-flop. கட்டுதொகுதி : குறிப்பிட்ட வேலையுள்ள எழுவிழு கருவி.

Bullets - பொழிவுகள் : இவை முக்கியக் குறிப்புகளையும் செய்திகளையும் பட்டியலிடப் பயன்படும்.

Burster - an off-line device in a computer to separate the continuous roll of paper in a printer into individual sheets.

பிரிப்பி : கணிப்பொறித் தொகுதியிலுள்ள மையக் செயல கத்தின் கட்டுப்பாடு இல்லாமல இயங்கும் கருவியமைப்பு. ஓர் அச்சியற்றியில் சுழலும் தொடர் சுருள்தாளைத் தனித் தாள்களாகப் பிரிப்பதும் தாளில் உள்ள துளைகள் வழியாகப் பிரிப்பது நடைபெறும்.

Bus - an electrical route along which data flows.

போக்குவாய் : தகவல் செல்லும் மின் வழி.

Bus driver - a specially designed integrated circuit in a computer system. It ensures that data from the microprocessor is in a form suitable for tansmission along a data bus.

போக்குவாய் இயக்கி : ஒரு கணிப்பொறித் தொகுதியிலுள்ளது; சிறப்பாக வடிவமைக்கப்பட்ட ஒருங்கிணைச் சுற்று. ஒரு தகவல் போக்குவாய் வழியாக நுண்முறையாக்கியிலிருந்து தகவல் செல்வதற்குரிய வடிவத்தை உறுதிசெய்வது.

Buses, standard - திடடப் போக்குவாய்கள் : இவை மின்னணுப் பகுதிகளை இணைக்க உதவும். பயனாளி இவற்றை விற்பனையாளரிட மிருந்து வாங்கலாம்.

Business computer - a personal computer. தொழில் கணிப்பொறி : தனியாள் கணிப்பொறி.

Bus network - a popular communication system between computers. போக்குவாய் வலையமைவு : கணிப்பொறிகளுக்கிடையே உள்ள மிகப்பரவலான தகவல் தொடர்முறை.

**Button -** this is the simplest of the controls used in forms. In html it is used to indicate that the user has finished a current form and he can take up something further. It is of many kinds: ok, cancel buttons.
**பொத்தான் :** படிவங்களில் பயன்படும் மிக எளிய கட்டுப்பாடுகளில் ஒன்று. எச்டிஎம் எல்லில் நடப்பிலுள்ள படிவத்தை முடித்து மேற்கொண்டு ஏதாவது ஒன்றைப் பயனாளி எடுக்கின்றாரா என்பதைக் காட்டுவது. வகை பல. எ-டு சரி, நீக்கு, பொத்தான்கள்.

**Buzzword - அருஞ்சொல் :** புரியாக் கலைச் சொல். 1960இல் ஹனிவெல் என்பவரால் உருவாக்கப்பட்டது. கணிப்பொறி இயலில் இது போன்ற சொற்கள் பல உண்டு.

**Bypass capacitor -** a capacitor connected in a circuit to divert an unquoted signal: eg a carrier wave in a radio receiver.
**புறவழி மின்தேக்கி :** தேவையில்லாத குறிகையை விலக்க ஒரு மின்சுற்றில் இணைக்கப்படுவது. எ-டு ஒரு வானொலிப் பெறுங்கருவியிலுள்ள ஊர்தியலை.

**Byte, b -** a group of binary digits. It is run generally used for a 8 bit word moved around as a single unit of data in a computer system.
**இருமித்தொகுதி, பி :** இரும இலக்கங்களின் தொகுதி. 8 இருமிச் சொல்லைக் குறிக்கப் பொதுவாகப் பயன்படுவது. ஒரு

கணிப்பொறித் தொகுதியில் ஒரு தனிச் செய்தி அலகாக நகர்ந்து செல்வது.

C

**C -** a high level programming language, developed by bell labs for writing system software. It was designed for use by professional programmers.
**சி -** பெல் ஆய்வகங்கள் உருவாக்கிய உயர்நிலை நிகழ்நிரல் மொழி. அமைப்பு மென்பொருள் எழுதப் பயன்படுவது. தொழில் நிலை நிகழ்நிரலால் பயன்படுவதற்குத் தகுந்தவாறு வடிவமைக்கப்பட்டது.

**C character set -** a c element. This set contains the following.
**சி உருத் தொகுதி :** சி யின் கூறு. இதிலுள்ளவை பின்வருமாறு:
பெரிய எழுத்துகள்:
a,b,c,d,e,f,g,h,\,j,k,i,nm, n, o, p, q, r, s, t, u, v, w, x, y, z
சிறிய எழுத்துகள்:
a,b,c,d,e,f,g,h,i,j,k,l,m,n,0,p,q, r,s,t, u,v,w,x,y,z இலக்கங்கள்:
0,1,2,3,4,5,6,7,8, 9,
குறிகள்:

- + \ | " ( = | { # ) ~ ; } / % - [, ?^ - ]'. & blank

**C constants, kinds of - சி மாறிலிகளின் வகைகள் :**இவை பின்வருமாறு.
**1) உருவகை:** உருமாறிலி, சரமாறிலி
**2) எண் வகை:** முழு எண் மாறிலி, மெய்மாறிலி
**3) முழுஎண் மாறிலி:** குறியற்றது, நீண்டது, குறுகியது. முழு எண்
**4) மெய்மாறிலி:** மிதப்பது, இரட்டை

**C language, elements of - சி மொழியின் கூறுகள் :** இவை பின்வருமாறு:
1) சி உருத்தொகுதி 2) சி மாறிலிகள் 3) விடுபடு வரிசை 4) சி மாறிகள் 5) தொடங்குதல் 6) செயலிகள் 7) சேமகச் சார்பலன்கள் 8) எண்கணிதச் செயல்கள் 9) தகவல் வகை மாற்றல் 10) எண் கணிதக் கூற்றுகள்.

**C programme, sections of - சி நிகழ்நிரலின் பகுதிகள்:** இவை பின்வருமாறு 1) தலைப்புப் பகுதிகள் 2) எழுத்து அறுதியிடும் பகுதி 3) ஆணைக் குறிப்புப் பகுதி. இம்மூன்றின் விரிவை அவ்வப்பதிவில் காண்க.

**C programme,steps in - சி மொழியின் படிகள் :** 1) உருவாக்கல்/பதிப்பித்தல் 2)தொகுத்தல் 3)இணைத்தல் 4) நிறைவேற்றல்.

**C variables - சி மாறிகள் :** மொழித் தொடர்பாகப் பயன்படுபவை. மூன்று எண்களின் சராசரியைக் காண்பதாகக் கொள்வோம். இம்மூன்று எண்களும் உட்பலன், சராசரி, வெளிப்பலன். மூன்று எண்கள் → கணிப்பொறி → சராசரி. இதற்குரிய பணியைக் கணிப்பொறி உரியமுறையில் செய்யும். **A, b, c** சேமிப்பு இடங்களாக இருக்கட்டும். விளைபயன் **d** இல் சேமிக்கப்படும். இங்கு **a, b, c, d** என்பவை மாறிகள். நினைவக இடப்பெயரே மாறி எனப்படும்.

**Cache -** a small fast storage buffer integrated in the central processing unit of some large computers.
**மறைவிடம் :** இது சிறியதும் விரைவு உள்ளதுமான சேமிப்புத்தாங்கமைவு. சில பெரிய கணிப்பொறிகளின் மையச் செயலகத்தோடு இணைந்திருக்கும்.

**Cache memory -** a high speed buffer memory found between processor and main memory. **மறைவிட நினைவகம் :** உயர் விரைவுத் தாங்கமைவு நினைவகம், முறையாக்கிக்கும் முதன்மை நினைவகத்திற்கும் இடையே காணப்படுவது.

**Calculator -** a common data processing device to carry out logic and arithmetic operations. It has a limited programming ability.
**கணிப்பான் :** முறைமை மற்றும் எண்கணிதச் செயல்களைச் செய்யப் பொதுவாகப் பயன்படும் மின்னணுக் கருவியமைப்பு. இதற்கு வரையறையுள்ள நிகழ்நிரல் திறனே உண்டு.

**Calculation - கணக்கீடு :** எண் கணக்குகளைக் குறிப்பது.

**Call -** a keyword within a programme instructing a computer to start on another routine.
**அழைப்பு :** நிகழ்நிரலிலுள்ள திறவுச்சொல் மற்றொரு வழக்கமான செயலைத் தொடங்க ஆணைக்குறிப்பு வழங்குவது.

**Call in -** transferring of control of a digital computer from main routine to a subroutine.
**உள்ளழை :** ஓர் இலக்கக் கணிப்பொறியின் கட்டுப்பாட்டை வழக்கமான முதன்மைச் செயலிருந்து வழக்கமான துணைச் செயலுக்கு மாற்றுதல்.

**Call instruction -** a type of instruction allowing a return to the programme's original sequence.
**அழைப்பு ஆணைக்குறிப்பு :** ஒருவகை ஆணைக்குறிப்பு. நிகழ்நிரலின் முதல் வரிசைக்குத் திரும்புகையை அனுமதிப்பது.

**Call number -** a set of instructions to set up and a cell given sub-routine.
**அழைப்பெண் :** கொடுக்கப்பட்ட வழக்கமான துணைச் செயலை அழைக்க அமைக்கப்படும் ஆணைக் குறிப்புத் தொகுதி.

**Cancel -** a deletion of information by a remote computing.
**நீக்கு :** தொலைக் கணிப்பொறித் தொகுதியினால் நீக்கப்படும் தகவல்.

**Capacity-** the number of words or characters contained in a particular storage device. **கொள்திறன் :** குறிப்பிட்ட ஒரு சேமிப்புக் கருவியமைப்பில் உள்ள சொற்கள் அல்லது உருக்களின் எண்ணிக்கை.

**Card -** 1.punched card. 2.a printed circuit board plugged into a main circuit board to increase the capacity and function of a computer system.
**அட்டை :** 1) துளையிட்ட அட்டை, 2) அச்சியற்றி மின் சுற்றுபலகை, முதன்மை மின் சுற்று பலகையில் செருகப் பட்டிருக்கும். ஒரு கணிப்பொறித் தொகுதியின் கொள்திறன், வேலை ஆகியவற்றை உயர்த்துவது.

**Card code -** the representation of characters on a punched card by means of punching one or more holes per column,
**அட்டைக் குறிமுறை :** ஒரு அட்டையில் ஒரு பத்திக்கு ஒன்றுக்கு மேற்பட்ட துளைகளை இட்டு அதில் உருக்களைக் குறித்தல்.

**Card loader -** a programming routine allowing a dock of cards to be read into a memory.
**அட்டைச் சுமை ஏற்றி :** வழக்கமான ஒரு நிகழ்நிரலாக்கு செயல். இதில் பல அட்டைத் தொகுதிகள் முதன்மை நினைவகத்தில் படிக்க அனுமதிக்கப்படும்.

**Card punch -** a computer input device punching signals from the central processing unit.
**அட்டைத்துளையிடுவி :** கணிப்பொறி வெளிப்பலன் கருவியமைப்பு. மையச் செயலகத்திலிருந்து குறிகைகளைப் பெற்றுத் துளையட்டையில் துளைகள் இடும்.

**Carriage return -** the operation causing the next character to be printed the extreme margin and usually advancing the next line at the same time.
**இடம் செல்லல் :** இது ஒரு செயல். இதில் அடுத்து அச்சியற்ற வேண்டிய உரு, கடைக் கோடி இட ஓரத்திற்குச் செல்லும். அதே சமயம் அடுத்த வரியும் முன் நகர்ந்து வரும்.

**Carry flag -** the flip-flop circuit showing an overflow in arithmetic operation.
**கொண்டுசெல் கொடி :** இது எழுவிழு மின்சுற்று எண் கணிதச் செயல் வழிவதைக் காட்டும்.

**Carry signal -** a signal produced in a computer when the difference between two digits is zero.
**கொண்டுசெல் குறிகை :** இரு இலக்கங்களுக் கிடையே வேறுபாடு சுழியாக இருக்கும் பொழுது உண்டாகும்.

**Carry time -** the time needed to transfer all carry digits to the next higher column.
**கொண்டுசெல் நேரம் :** அடுத்த உயர்பத்திக்கு மாற்ற ஆகும் நேரம்.

**Cascade control -** an automatic control system with various control units linked in sequence.
**அருவிக் கட்டுப்பாடு :** இது ஒரு தானியங்கு கட்டுப்பாட்டு முறை. இதில் பல கட்டுப்பாடுகளும் வரிசை முறையில் இணைந்திருக்கும். **Cassette -** a package containing spools round which megnetic tape moves for recording and playing back computer programmes.
**பேழை :** வட்டுகளைக் கொண்டுள்ள சிப்பம். இவ்வட்டுகளைச் சுற்றிக் காந்த நாடா நகரும். இதனால் தகவலைப் பதிவுச் செய்து மீண்டும் அதைப் போட்டுப் பார்க்கலாம்.

**Cassette memory -** the removable magnetic tape cassette storing computer programmes and data.
**பேழை நினைவகம் :** நீக்கக் கூடிய காந்த நாடாப் பேழை: கணிப்பொறி நிகழ்நிரல்கள் மற்றும் தகவல்களைச் சேமித்து வைப்பது.

**Cast -** converting one data type to another. The general format is this: (data type) expression.
**வார்ப்பு :** ஒருவகைத் தகவலை மற்றொன்றாக மாற்றல், இதன் பொதுப்படிவமைப்பு: (தகவல் வகை) வெளிப்பாடு (கோவை).

**Catalogue -** any list of information stored on tap or disk: eg programme titles.
**பட்டியல் :** தகவல் தொகுப்பு நாடா அல்லது வட்டில் சேமித்து வைக்கப்பட்டிருப்பது எ-டு நிகழ்நிரல் தலைப்புகள்.

**Categorization -** the process of separating multipie addressed messages to form individual ones foi si;;guiar addresses.
**வகையாக்கல் :** பன்ம முகவரியிட்ட செய்திகளைத் தனிச்செய்திகளாகப் பிரிக்கும் முறை. தனிமுகவரிகளுக்காக இது செய்யப்படுகிறது.

**Catena -** a series of data items in a chained sist.
**தொடர் :** ஒரு தொடர் பட்டியிலுள்ள தகவல் இனவரிசை.

**Cda, comintinications decency act - சிடிஏ தகவல் தொடர்வு நாகரிகச் சட்டம் :** 1996இல் அமெரிக்காவில் சட்டமாக்கப்பட்டாலும் மாவட்ட நீதிமன்றமும் உச்சநீதிமன்றமும் இச்சட்டத்தை தள்ளுபடி செய்துவிட்டன. இதைச் சட்டமாக்கியவர் முன்னாள் அமெரிக்கக் குடியரசுத் தலைவர் **திரு. கிளிண்டன்.** இதன் நோக்கம் இணையக் குற்றங்களைத் தடுப்பது.

**Cd rom -** compact diskrom. On the surface of this disk there are minute pits for storing computer data. The data can be read using laser light. **சி.டிரோம் :** நெருக்கவட்டு ரோம். இவ்வட்டின் மேற்பரப்பில் மிகச்சிறிய நுண்குழிகள் கணிப்பொறித் தகவல்களைக் சேமிக்க அமைந்திருக்கும். இவற்றை லேசர் ஒளியைப் பயன்படுத்திப் படிக்கலாம்.

**cell** - a subdivision of computer memory. It stores one unit of data, one bit, a computer contains millions of cells. **நுண்ணறை :** கணிப்பொறி நினைவகத்தின் உட்பிரிவு. ஓரலகுத் தகவலை மட்டும் சேமிக்கும் அதாவது ஓர் இருமி (பிட்), கணிப்பொறியில் மில்லியன் கணக்கில் இந்நுண்ணைறைகள் உள்ளன.

**cell padding** - the space between the border of the cell and its contents. Its value should also be in pixels. **நுண்ணறை வெளி :** நுண்ணறை மற்றும் அதன் உள்ளடக்கங்களின் கரைக்கு இடையே உள்ள வெளி. இதன் மதிப்பு படமத்தில் (பிக்சல்) அமையும். படமம் படக்கூறு.

**cell referencing** - type the formula = c3+d3+e3+f3 in cell g3 and copy it to the cells g4 : g7. Click on the cell g4. Now the formula in this cell is = c4+d4+e4+f4. This happens because spread sheets refer the cell addresses in a formula only. **நுண்ணறைப் பார்வை :** வாய்பாடு = c3+d3+e3+f3 என்பதை g3 நுண்ணறையில் தட்டச்சு செய். பின் அதை g4 : g7 நுண்ணறைகளுக்குப் படி எழுத்து அனுப்பு. G4 என்னும் நுண்ணறையைத் தட்டு. இப்பொழுது இவ்வறையிலுள்ள வாய்பாடு = c4+d4+e4+f4. விரிதாள்கள் நுண்ணறை முகவரிகளை வாய்பாடாகவே பார்ப்பதால், இந்நிகழ்ச்சி நடைபெறுகிறது.

**cell referencing**, kinds of - this is of two kinds:

1. Relative cell addressing: this is the default type of cell addressing used by starcalc.

2. Absolute cell addressing: a cell address can be made absolute by using the dollar sign in front of row and column names.

**நுண்ணறைப் பார்வை வகைகள் :** இது இருவகை.

1. சார்பு நுண்ணறை முகவரியிடல் : ஸ்டார் கால்க் பயன்படுத்தும் நுண்ணறை முகவரியிடலின் தவறான வகை இது.

2. தனி நுண்ணறை முகவரியிடல் : ஒரு நுண்ணறை முகவரியை தனியாக்கலாம். இதற்கு வரிசைக்கும் பத்திப் பெயர்களுக்கும் முன்னுள்ள டாலர் குறியைப் பயன்படுத்த வேண்டும்.

**cell spacing** - the space between two cells. Its value should be in pixels. This is an attribute. **நுண்ணறை இடைவெளிவிடல் :** இரு நுண்ணறைகளுக்கு இடையிலுள்ள வெளி. இதன் மதிப்பு படமங்களில் இருக்க வேண்டும். இது ஒரு பண்பே.

**central processing unit, cpu** - the principal operating and controlling part of a computer. In micro computer the cpu is a microprocessor. **மைய முறையாக்கு அலகு, சிபியூ :** மையச் செயலகம். கணிப்பொறியின் கட்டுப்படுத்தும் பகுதி, இயக்கும் பகுதி. நுண் கணிப்பொறியில் மையச் செயலகம் நுண் முறையாக்கி ஆகும்.

**central processing unit**, components of - மைய முறையாக்கு

அலகின் பகுதிகள் : **இவ்வலகு மனித மூளை போன்றது. இதிலுள்ள மூன்று முக்கியப் பகுதிகள் 1) கட்டுப்பாட்டு அலகு. 2) எண் கணித முறைமை அலகு. 3) பதிவகங்கள்.**

**chain** - a sequence of events linked together so that the completion of one event begins the next. **தொடர் :** இணைப்புள்ள நிகழ்ச்சி வரிசை. இதனால் ஒரு நிகழ்ச்சி முடியும் பொழுது, அடுத்த நிகழ்ச்சி தொடங்கும்.

**chaining** - a method of storing records for easy identification. **தொடராக்கல் :** எளிதாக அடையாளங் கண்டறியப் பதிவுருக்களைச் சேமித்து வைக்கும் முறை.

**chain printer** - a high speed printer. **தொடர் அச்சியற்றி :** ஓர் உயர் விரைவு அச்சியற்றி.

**channel** - the part of a computer system doing input and output functions. **செல்வழி :** உட்பலன் வெளிப் பலன் வேலைகளைச் செய்யும் கணிப்பொறியின் பகுதி.

**channel width** - the number of bits handled simultaneously by a communications channel. **செல்வழி அகலம் :** ஒரே சமயத்தில் ஒரு தகவல் தொடர்புச் செல்வழி கையாளும் இருமிகளின் எண்ணிக்கை.

**character** - any letter, number or symbol produced on a keyboard for display on a vdu. **உரு :** காட்சித் திரையில் தோன்றும் எழுத்து, எண் மற்றும் குறி. விசைப் பலகைச் சாவியைத் தட்டி இதைச் செய்யலாம்.

**character constant** - one of the elements of c language. Each character has an integer value based on the character set that the computer uses. Eg. ‘c’-67. **உருமாறிலி :** சி மொழிக் கூறுகளில் ஒன்று. ஒவ்வொரு உரு வும் ஒரு முழு எண் மதிப்பு கொண்டது. இம்மதிப்பு கணிப்பொறி பயன்படுத்தும் உருத் தொகுதியின் அடிப்படையில் அமைந்தது. எடுத்துக்காட்டு : 'c' - 67.

**character generator** - a special chip in a computer producing a character on a vdu. **உரு இயற்றி :** கணிப்பொறியிலுள்ள ஒரு தனி நறுவல், காட்சித் திரையில் உருவை உண்டாக்குவது.

**character set** - a group of characters suitable for transmission from one place to another. Eg. The alphabet. **உருத் தொகுதி :** உருக்கணம் ஓரிடத்திலிருந்து மற்றோரிடத்திற்குச் செலுத்துவதற்கேற்ற உருக்களின் கூட்டம்.

**character string** - a sequence of characters in a computer memory. Otherwise known as alphabetic string. **உருச்சரம்:** கணிப்பொறி நினைவகத்திலுள்ள உருக்கள் வரிசை. வேறுபெயர் அகர வரிசைச்சரம்.

**charge - coupled device, ccd** - a data storage device. **மின்னேற்ற இணைப்புக் கருவியமைப்பு :** ஒரு தகவல் சேமிப்புக் கருவியமைப்பு.

**chart** - a diagram to analyse or solve a problem. **படம் :** ஒரு சிக்கலைப் பகுக்க அல்லது தீர்வு செய்யப் பயன்படும் விளக்கப்படம்.

**chart recorder** - an electronic device showing how some quantity varies with time. Eg. Atmospheric pressure. **படப் பதிவி :** ஒரளவு காலத்திற்கேற்ப எவ்வாறு மாறுகிறது என்பதைக் காட்டும் மின்னணுக் கருவியமைப்பு.

**chassis** - the metal frame on which circuit boards and components are mounted. **சட்டகம் :** உலோகச் சட்டம். இதில் மின்சுற்றுப் பலகைகளும் அதன் பகுதிகளும் பொருத்தப்பட்டிருக்கும்.

**check** - a test to find out a mistake. **சரிபார்ப்பு :** ஒரு தவறைக் கண்டறியும் ஆய்வு.

**check bit** - the binary bit, 0,1. **சரிபார்ப்பு இருமி :** இருமி 0, 1.

**check box** - this switch is used to enable or disable options. Clicking on a square in this box enables the options and clicking on it again disables it. A tick mark in this square shows that the option is possible and a blank square shows that the option is impossible. This is found in the windows. **சரிபார்ப்புப் பெட்டி :** விருப்பங்களை இயலக் கூடியதாகவும் இயலக் கூடாததாகவும் செய்ய இச்சொடுக்கிப் பெட்டி உதவுகிறது. இப்பெட்டியிலுள்ள சதுரத்தைத் தட்ட விருப்பம் இயல்வதாக அமையும். அதை மீண்டும் தட்ட விருப்பம் இயலாததாகும் சரிக்குறி விருப்பம் உண்டு என்பதையும் வெற்று இடம் அது இல்லை என்பதையும் காட்டும். இப்பெட்டி சாளர மென் பொருளில் உள்ளது.

**check box types - சரிபார்ப்புப் பெட்டியின் வகைகள் :** 1) சரிபார்க்காப் பெட்டி, 2) இயலாப் பெட்டி.

**check indicator** - a device informing the operator the occurrence of an error. **சரிபார்ப்புக் காட்டி :** ஒரு பிழை தோன்றுவதை இயக்குபவருக்குக் காட்டும் கருவியமைப்பு.

**check register** - the register in which transferred data are temporarily stored. **சரிபார்ப்புப் பதிவகம் :** இதில் மாறிய தகவல்கள் தற்காலிகமாகச் சேமித்து வைக்கப்பட்டிருக்கும்.

**chennai in it industry - தகவல்தொழில் நுட்பத் துறையில் சென்னை :** இன்று இந்தியாவிலேயே இத்தொழில் நுட்பத்தில் சென்னை முதலிடத்தில் உள்ளது. இதற்கு நல்ல சூழலும் கணிப்பொறி அறிவு வளமும் இருப்பதே காரணங்கள். இத்துறையை உருவாக்கியவை மாண்புமிகு கலைஞர் தலைமையில் உள்ள தமிழ்நாடு அரசும் இந்திய மென்பொருள் தொழில்நுட்பவியல் பூங்காவும் (stpi) ஆகும்.

**chip** - an integrated micro-circuit doing a significant number of functions, **நறுவல் :** ஒருங்கிணைந்த நுண் மின்சுற்று, குறிப்பிடத்தக்க வேலைகளைச் செய்வது.

**chris burton - கிரைஸ் பர்டன் :** பிரிட்டன் பொறியர், தொடக்க காலக் கணிப்பொறிகளின் வரலாறு எழுதியவர்.

**circuit** - a path for two way communication between computer terminals. **மின்சுற்று :** கணிப்பொறி முனைகளுக்கிடையே இருவழிச் செய்தித் தொடர்புக்காக உள்ள வழி.

**circuit diagram** - physical representation of components and inter-connections defining a specific hardware functional design. **மின்சுற்று விளக்கப்படம் :** ஒரு குறிப்பிட்ட வன்பொருள் வேலைசெய் வடிவமைப்பை வரையறை செய்யும் இணைப்புகளையும் பகுதிகளையும் குறிக்கும் படம்.

**circuit elements - மின்சுற்று கூறுகள் :** இவை படிகப் பெருக்கிகள், இருமுனை வாய்கள், தடையளிப்பிகள் ஆகியவை. சிலிகானின் மிகச் சிறிய பரப்பில் இவை ஒருங்கிணைக்கப்படும். இவற்றின் பெயர் ஒருங்கிணைசுற்று ஆகும்.

**class modules, cls - வகுப்பு அலகுகள், வஅ :** இவை படிவங்களை ஒத்தவை. கண்ணுக்குப் புலப்படா. தங்கள் சொந்தப் பொருள்களைப் பயனாளிகள் உருவாக்க இவை உதவும்.

**clause** - the part of a statement in the cobol language describing the structure of an elementary item. **உட்பிரிவு :** கோபல் மொழியில் ஒரு கூற்றின் பகுதி, ஒரு தொடக்க இனத்தின் அமைப்பை விளக்குவது.

**clause, kinds of - உட்பிரிவு வகைகள் :** 1) ஒதுக்கீட்டு உட்பிரிவு. 2) முறைமை உட்பிரிவு. 3) மாற்று உட்பிரிவு.

**clear** - to restore a storage device usually denoting zero. **தெளிவாக்கல் :** சேமிப்புக் கருவியமைப்பை வழக்கமாகச் சுழியைக் காட்டும் நிலைக்குக் கொண்டு வருதல்.

**clipboard** - a temporary storage location in

windows. **கவ்வுபலகை :** சாளர மென்பொருளில் உள்ள தற்காலிகச் சேமிப்பு இடம்.

**clock, clk** - a source of accurately times pulses used for synchronisation in a digital computer. **கடிகை, சிளல்கே :** துல்லிய நேரத்துடிப்புகளின் மூலம் இலக்கக் கணிப்பொறியில் ஒத்திசைவிற்காகப் பயன்படுவது.

**close button - மூடுபொத்தான் :** இது விண்டோஸ் என்னும் சாளர மென்பொருளை மூடப் பயன்படுவது.

**closed file - மூடிய கோப்பு :** படிப்பதற்கோ எழுதுவதற்கோ இயலாத கோப்பு.

**closed loop** - the loop whose execution continues indefinitely in the absence of any external control. **மூடிய வளையம் :** இதன் நிறைவேற்றும் செயல், புறக்குறுக்கீடு இல்லாத நிலையிலும் முடிவின்றித் தொடர்ந்து செல்வது.

**closing** - bringing to a close: eg. File **மூடல் :** ஒரு முடிவுக்குக் கொண்டு வருதல், எடுத்துக்காட்டு : கோப்பு.

**cluster** - a group of components: eg microprocessor; a group of terminals or peripherals in close proximity to each other and order the control of a central device: eg.
Computer. **கொத்து :** இயைபுறுப்புகளின் தொகுதி: நுண்முறையாக்கி வெளிப்புறப் பகுதிகள் அல்லது முனைகளின் தொகுதி, ஒன்றுக்கு மற்றொன்று நெருக்கமாக அமைந்து, ஒரு மையக் கருவியமைப்புக் கட்டுப்பாட்டில் இயங்குவது, எடுத்துக்காட்டு : கணிப்பொறி.

**cobol, common business oriented language** - a widely used high level computer language, suitable for non-mathematicians and business people. **கோபல், பொது வணிக நோக்கு மொழி :** மிகப்பரவலாகப் பயன்படும் உயர்நிலைக் கணிப்பொறிமொழி. கணக்கில் தேர்ச்சி இல்லாதவர்களும் வணிகர்களும் பயன்படுத்தக் கூடியது.

**codd e.f dr - டாக்டர் ஈ.எப். காட் :** ஆர்டிஎம்பிஎஸ் என்னும் அமைப்பை அறிமுகப்படுத்தியவர். தகவல் பேணுகைக்குப் பல நிறுவனங்களில் பயன்படுவது: ஆரகிள்.

**code** - a system of symbolic characters used to represent data. The set of instructions in a computer programme. **குறிமுறை :** தகவலைக் குறிக்கப் பயன்படும் குறியீட்டு உருக்களின் தொகுதி. ஒரு கணிப்பொறி நிகழ்நிரல் ஆணைக் குறிப்புகளின் தொகுதி.

**cogo** - a high level computer language meant for civil engineering. **கோகோ :** ஓர் உயர்நிலைக் கணிப்பொறி மொழி. பொதுப் பொறியியலில் பயன்படுவது.

**collator** - a collating unit. **ஒருங்கிணைப்பி :** ஒழுங்கு படுத்தும் கருவியமைப்பு.

**column** - the vertical arrangement of characters. **பத்தி :** உருக்கள் செங்குத்தாக அமைந்திருந்தல்.

**column printer** - a small line printer. **பத்தி அச்சியற்றி** : ஒரு சிறிய வரி அச்சியறி.

**colour attribute - நிற இயல்பு :** பாடம் காட்டப்பட வேண்டிய வண்ணத்தை இது சுட்டிக் காட்டும்.

**colour combination** - combining columns suitably. The popular colour combinations are the following:

1. Triadic scheme: an equilateral triangle is drawn inside the circle. The columns at the vertices of the triangle are used.

2. Analogous scheme : any three neighbouring columns on the circle are used in a 24 bit colour monitor the primary colours rgb have 8 bits each leading is 256 x 256 x 256 combinations.

**வண்ணக் கூடுகை :** தகுந்த முறையில் நிறங்களைக் கலத்தல். மிகப் பரவலாக உள்ள



அடிப்படை நிறங்கள்



இரண்டாம் நிலை நிறங்கள்



மூவண்ணத் தொகுப்பு



ஒப்புமை வழி



மூன்றாம் நிலை நிறங்கள்

**நிற வகைகள்** வண்ணக் கூடுகைகள் பின்வருமாறு,

1) மும்மைத் திட்டம் ஒரு வட்டத்தில் சம பக்க முக்கோணம் வரையப்படுகின்றது. முக்கோண உச்சிகளிலுள்ள நிறங்கள் பயன்படுத்தப்படுகின்றன. 24 இருமி நிறக் கண்காணிப்பியில் முதன்மை மூன்று நிறங்களான சிவப்பு, பச்சை, நீலம் (rgb) ஆகியவை 8 இருமிகளைக் கொண்டவை. ஒவ்வொரு இருமியும் 256 x 256 x 256 என்னும் கூடுகைகளுக்கு வழிவகுக்கும்.

**colour usage - வண்ணவழக்காறு :**

முதன்மை நிறங்கள் மூன்று. சிவப்பு, பச்சை, நீலம்.

இரண்டாம் நிலை நிறம் = முதன்மை நிறம் + முதன்மை நிறம்.

மூன்றாம் நிலை நிறம் = இரண்டாம் நிலை நிறம் + முதன்மை நிறம்.

கறுப்பு, வெள்ளை, சாம்பல் ஆகிய மூன்றும் நடுநிலை நிறங்கள்.

மூன்றாம் நிலையில் மூன்று முதன்மை நிறங்களும், 12 நிறங்களும் வழிவகுப்பவை. நிறங்கள் ஒன்றுக்கு மற்றொன்று நேர் எதிராக இருப்பவை நிரப்பு நிறங்கள் எனப் படும். அணிமை நிரப்பு நிறங்கள் நல்ல ஒப்பீட்டை அளிப்பவை.

**colour usage terms - வண்ண வழக்காற்றுச் சொற்கள்:** வண்ணப் பயன்பாட்டில் பின்வரும் சொற்கள் அடிக்கடிப் பயன்படுகின்றன,

1) நிறப்போலி (hue): நடுநிலை நிறம் சேர்க்கப்படாதது,

2) சாயல் நிறம் (tint): நிறப்போலி + வெள்ளை

3) நிழல் (shade). நிறப்போலி + கறுப்பு.

4) திண்மை (tone); நிறப்போலி + சாம்பல் நிறம் அதன் நிரப்பு நிறத்தின் வேறுபட்ட அளவுகள்.

5) மதிப்பு (value): வெளிர் அல்லது கறுப்பு நிறம் எவ்வாறு தோன்றுகிறது.

6) செறிவு எவ்வளவு ஒளிர்வாகவும் மங்கலாகவும் நிறம் தோன்றுகிறது என்பது. இதற்கு நிறத்திறன் என்று பெயர்.

**combinational logic** - a digital logic circuit, eg. Nand gate. **கூடுகை முறைமை :** இலக்க முறைமைச் சுற்று, எடுத்துக்காட்டு : அல் வாயில்.

**combo box control** - this control contains multiple items but occupies less space on the screen. **கூடுகைப் பெட்டிக் கட்டுப்பாடு :** இக்கட்டுப்பாட்டில் பன்ம இனங்கள் இருக்கும். ஆனால் இது குறைந்த இடத்தை அடைக்கும்.

**command** - computer programming instruction: eg. Printer. It tells a computer what to do. **ஆணை :** கட்டளை. கணிப்பொறி நிரலாக்கும் ஆணைக் குறிப்பி, எடுத்துக்காட்டு : அச்சியற்றி இது கணிப்பொறி செய்ய வேண்டுவது என்ன என்பதைச் சொல்வது.

**comma operator** - one of the so many operators. **காற்புள்ளிச் செயலி :** பல செயலிகளில் ஒன்று.

**comment** - an expression identifying one or more steps in a routine having no effect on execution of the routine. It helps us to know the document. **விளக்கவுரை :** வழக்கமாக நடைபெறும் செயலில் ஒன்றுக்கு மேற்பட்ட படிகளை அடையாளங் கண்டறியும் கோவை. செயலை நிறைவேற்றுவதில் அதற்குப் பங்கில்லை. ஆவணங்களை அறிய உதவுவது.

**commercial language** - a computer language designed for writing programmes for commercial application. Eg.

Cobol. **வணிகமொழி :** வணிகப் பயன்பாட்டிற்காக நிகழ்நிரல்களை எழுத வடிவமைக்கப்பட்ட கணிப்பொறிமொழி, எடுத்துக்காட்டு : கோபல்.

**common language** - machine readable language common to a group of computers. **பொதுமொழி :** கணிப்பொறித் தொகுதிக்குப் பொதுவான எந்திரத்தால் படிக்கப்படும் மொழி.

**communication channel** - the medium used to connect. The computer is called a communication channel. **தகவல் தொடர்பு வழி :** கணிப்பொறிகளை இணைக்கப் பயன்படும் ஊடகமே தகவல் தொடர்பு வழி எனப்படும்.

**communication channel**, kinds of - **தகவல் வழியின் பல வகைகள் :** இவை பின்வருமாறு,

1) திருகிய இணைகம்பி: இது தொலைபேசிக் கம்பியே. எளிதில் கிடைப்பது விலை குறைவு. ஒரு சமயம் ஒரு தகவலையே ஓரிணை செலுத்தும். இக்கம்பிகளைக் கொண்டு கணிப்பொறிகளை இணைக்கத் தகவல் மாற்று வீதம் ஒரு மில்லியன் பிபிஎஸ் ஐ விஞ்சும். பிபிஎஸ் என்பது ஒரு வினாடிக்கு இத்தனை இருமி என்பதைக் குறிக்கும்.

2) மைய அச்சுக் கம்பி வட்டம் : கம்பி வடத் தொலைக்காட்சிகளுக்குப் பயன்படுவது, 10 மில்லியன் பிபிஎஸ் அளவுக்குத் தகவல்களைச் செலுத்தவல்லது.

3) ஒளி நார்வடம்: இது ஒரு மெல்லிய கண்ணாடி இழை. ஒளிக்கற்றையைச் சுமந்து செல்வது. 100 மில்லியன் பிபிஎஸ் அளவுக்குத் தகவல்களைக் கடத்துவது.

4) கம்பியிலா இணைப்புகள்: இதற்கு வானொலி அலைகள் தகவல் தொடர்பு வழியாகப் பயன்படுபவை. தொலைவு மாறும்பொழுது, செயற்கை நிலாக்கள் பயன்படும்.

**community internet booths - சமுதாய இணைய நிலையங்கள்:** இலண்டனில் செயற்படும் வோர்ல்டுடெல் என்னும் அமைப்புடன் இணைந்து தமிழ்நாடு அரசு ஒரு திட்டம் வகுத்துள்ளது. இதன்படி 1500 சமுதாய நிலையங்கள்

தமிழ்நாட்டில் அமைக்கப்படும். ஐந்தாண்டுகளுக்குப் பின் இவை 1000 என்னும் அளவில் பெருகும். (1999).

**compact disk, cd** - a storage device using optical laser storage techniques, easy to handle, high storage capacity. Eg. Books and encyclopedia. **நெருக்க வட்டு, நெவ :** சேமிப்புக் கருவியமைப்பு; ஒளி லேசர் சேமிப்பு நுட்பங்களைப் பயன்படுத்துவது, கையாளுவது. சேமிப்புத் திறன் அதிகம். எடுத்துக்காட்டு : நூல்கள், கலைக் களஞ்சியம்.

**compact disk drive, cdd - நெருக்க வட்டு இயக்கி, நெவஇ**.

**compact disk read only memory, cdrom - படிப்பதற்குரிய நெருக்க வட்டு நினைவகம், பநெவநி** : இது தகவல்களைப் பெறவும் படிக்கவும் லேசர் ஒளிக்கற்றையைப் பயன்படுத்துவது. இதில் கலைக்களஞ்சியச் செய்திகள் அனைத்தையும் அடக்கலாம். கொள்திறன். 650 gb.

**compact disk writer, cdw - நெருக்க வட்டு எழுதி, நெவஎ :** இது தற்பொழுது பயனில் உள்ளது. இதைக் கொண்டு பநெவநி இல் தகவல்களைச் சேமித்து, வேண்டிய பொழுது பயன்படுத்தலாம்.

**compactation** - a technique used for reducing the space required for data storage without losing any information content. **ஒடுக்குதல் :** இது ஒரு தொழில் நுட்பம், தகவல் அடக்கம் குறையாமல் தகவல் சேமிப்புக்குரிய இடத்தைக் குறைத்தல்.

**comparative operator** - this operator returns either true or false. **ஒப்பீட்டுச் செயலி :** இச்செயலி தவறு அல்லது சரி என்பதையே திருப்பும்.

**comparative operator table - ஒப்பீட்டுச் செயலி அட்டவணை**.

| செயலி | பெயர் | எடுத்துக்காட்டு |
|---|---|---|

| = | சமம் | A1=β1 |
|---|---|---|
| > | அதிகம் | A1>β1 |
| < | குறைவு | A1<β1 |
| >= | மிக அதிகம் | A1<=b1 |
| <> | சமமின்மை | A1<>b1 |

**comparator, discriminator** - an analogue circuit based on an integrated circuit. **ஒப்பறிவி, பிரித்தறிவி :** ஓர் ஒப்புகை மின்சுற்று. ஒருங்கிணை சுற்று அடிப்படையில் அமைந்தது.

**complement notation - நிரப்புகுறிமானம் :** குறி இருமியைக்கொண்டு (சைன் பிட்) கணிப்பொறியில் சேமித்து வைக்கப்பட்டுள்ள எண் நேரெண்ணா (+) எதிர்மறை எண்ணா (-) என்பதைத் தெரிந்து கொள்ளலாம். ஆனால், கணிப்பொறியில் எல்லா எண்களும் இயல்பு எண்களாகவே சேமித்து வைக்கப்படுவதில்லை. எதிர்மறை எண்கள் அவற்றின் நிரப்பு எண்களாகக் குறிக்கப்படுகின்றன. கணிப்பொறியில் நிரப்பு எண்களின் உதவியினால் கழித்தலையும் கூட்டல் போலவே இயக்கி விடை காணலாம். ஆகவே, எதிர்மறை எண்கள் அவற்றின் நிரப்பு எண்களில் குறிக்கப்படுகின்றன. எடுத்துக் காட்டாக, -1010 என்னும் எண் கணிப்பொறியில் 2-இன் நிரப்பு எண்ணாகப் பின்வருமாறு குறிக்கப்படுகிறது.

| இரும எண் | 2இன் நிரப்பு எண் | கணினி எண் குறிமானம் |
|---|---|---|

| -1010 | 0110 | 10110 |
| --- | --- | --- |
| +1010 | - | 00110 |

இதையே நிரப்புக் குறிமானம் என்கின்றோம்.

**compiler** - a programme converting a source code programme: eg. Basic. **தொகுப்பி :** மூலக்குறிமுறை நிகழ்நிரலை மாற்றும் நிகழ் நிரல். எடுத்துக்காட்டு : பேசிக்.

**complement numbers - நிரப்பு எண்கள் :** இருவகை நிரப்பு முறைகள் உள்ளன. இவை 10-இன் நிரப்பு, 9-இன் நிரப்பு எனப்படும். பதின்ம எண்ணின் அடி எண் என்பதைக் கருத்தில் கொள்க. 10இன் அடியெண் நிரப்பு என்றும் 9-இன் நிரப்பு (அடிஎண் 1) இன் நிரப்பு என்றும் பொதுவாகக் கூறப்படும். காட்டாக, 456 க் கொள்க. 4, 5, 6 ஆகியவற்றை 9-லிருந்து கழித்து எழுதுக. 456 என்னும் எண் 543 என்று ஆகும். இத்துடன் 1-ஐ கூட்டினால், இது 544 ஆகின்றது. ஆகவே, 456 என்னும் பதின்ம எண் னின் 10-இன் நிரப்பு எண் 544 ஆகும். இதே போல 87 என்னும் எண்ணின் 10-இன் நிரப்பு எண் 23 ஆகும்.

**computation - கணிப்பீடு :** பா. Computing.

**computer basic concepts - கணிப்பொறியின் அடிப்படைக் கருத்துகள் :** 1) கணிப்பொறியைப் பயன்படுத்தி ஒரு சிக்கலைத் தீர்க் கலாம். அதற்கு விதிமுறை எழுத வேண்டும்.

2) வழிமுறை என்பது அறுதியிடப்பட்ட கட்டளைகளின் வரிசை.

3) ஒவ்வொரு கட்டளையும் ஒன்றுக்கு மேற்பட்ட இயக்கங்களைக் கொண்டது.

4) ஒவ்வொரு இயக்கமும் தெளிவானதும் ஐயமற்றதுமான செயற்கூறுகளைக் கொண்டது. அறுதியிடப்பட்ட நேரத்தில் செயற்படுவது.

5) குறிப்பிட்ட சில இயக்கங்களுக்குப் பின் விதிமுறை முடிவடைய வேண்டும்.

6) வழிமுறை, விதிமுறைப் பட வாயிலாகத் தெரிவிக்கப்படுகிறது.

7) விதிமுறைகளைத் தெரிவிக்கப் பயன்படும் துல்லிய குறிமானத்திற்கு நிகழ்நிரல் மொழி என்று பெயர்.

8) நிகழ்நிரல் மொழியில் தெரிவிக்கப்படும் வழிமுறை கணிப்பொறி நிகழ்நிரல் எனப்படும்.

**computer, basic units of - கணிப்பொறியின் அடிப்படை அலகுகள் :** 1) உட்பலன் அலகு, 2) மையமுறையாக்கும் அலகு, மையச் செயலகம், 3) நினைவக அலகு, 4) வெளிப்பலன் அலகு.

**computer communications, assurance of - கணிப்பொறித் தகவல் தொடர்பின் உறுதி :**

1) ஒரே தன்மை : அனுப்பப்படும் தகவலும் பெறப்படும் தகவலும் ஒன்றே.

2) பாதுகாப்பானது : அனுப்பப்படும் தகவல் ஏனையோரால் சேதாரம் அடைவதற்கில்லை.

3) நம்பகமானது : அனுப்பப்படும் தகவலின் நிலையை அனுப்புபவரும் பெறுபவரும் நன்கு அறிவர்.

**Computer communications, benefits of - கணிப்பொறித் தகவல் தொடர்பின் நன்மை கள் :**

1) விலை உயர்ந்த கருவியமைப்பை நாம் பகிர்ந்து கொள்ள முடிகிறது.

2) தனிப்பட்ட தகவல்களை ஒழுங்கு படுத்த முடிகிறது.

3) இன்றியமையாத் தகவல்களையும் நிகழ்நிரல்களையும் ஒரே சமயத்தில் பலரும் பயன்படுத்த முடிகிறது.

4) பகிர்ந்து கொள்ளக்கூடிய சேமிப்புக் கருவியமைப்பில் எல்லாத் தகவல்களையும் பயனாளிகள் சேமித்து வைத்துப் பாதுகாக்க முடிகிறது.

**Computer communications**, required components of. **கணிப்பொறித் தகவலின் தேவையான பகுதிகள்:**

1) தகவல் : அனுப்பப்படும் செய்தியே.

2) நடைமுறை : பரிமாற்ற முறையில் ஒப்புக்கொள்ளப் பட்டமுறை.

3) வன்பொருள் : தகவல்களைச் சேமிக்க, அனுப்ப, பெறக் கருவியமைப்பு.

கணிப்பொறியின் தொகுதிப்படம்

வழிமுறைக் குறியீடுகள்

வழிமுறைப் படம்

**4) மென்பொருள்:** வலையமைவை இயக்கவும் தகவலைச் செலுத்தவும் மேலாண்மை செய்வதற்குரிய கட்டளைக் குறிப்புகள்.

**5) மக்கள்:** கணிப்பொறியைப் பயன்படுத்துவோர்.

**Computer communications, requirements of - கணிப்பொறித் தகவல்களின் தேவைகள்:**

**1) மாறாமை :** அனுப்பும் தகவல் போலவே பெறும் தகவலும் அமைதல்.

**2) பாதுகாப்பு :** அனுப்பப்படும் தகவல்கள் வேண்டுமென்றோ தற்செயலாகவோ பழுதுபடாமல் இருத்தல்.

**3) நம்பகம்:** அனுப்பப்படும் தகவல்களின் உண்மை நிலையை பெறுபவரும் அனுப்புபவரும் தெரிந்திருக்க வேண்டும்.

**Computer definition - a programming electronic device designed for storing retrieving and processing data. கணிப்பொறி, கணிணி இலக்கணம் :** நிகழ்நிரலாக்கும் மின்னணுக் கருவியமைப்பு. தகவலைச் சேமிக்கவும் மீட்கவும் முறையாக்கவும் வடிவமைக்கப்பட்டது.

**Computer education - கணிப்பொறிக் கல்வி : இது பல நிலைகளிலும் கல்விநிலையங்களாலும் தனியார் நிலையங்களாலும் நன்முறையில் அளிக்கப்படுவது.** க.4

**Computer, features of - the features are; 1. Speed. 2, reliability. 3. Accuracy. 4. Conversion- laser printing. கணிப்பொறியின் பண்புகள் :** 1) விரைவு, 2) நம்புகை, 3) துல்லியம், 4) மாற்றல்- லேசர் ஒளியச்சு.

**Computer, generations of - கணிப்பொறித் தலைமுறைகள் :** இவை பின்வருமாறு:

**1 முதல் தலைமுறை:** 1946-58. இத்தலைமுறை சார்ந்த கணிப்பொறிகளில் வெற்றிடக்குழல் பயன் படுத்தப்பட்டது. எ-டு ஈனியாக், எட்வாக்

**2 இரண்டாம் தலைமுறை :** 1959-64. இத்தலைமுறை சார்ந்த கணிப்பொறிகளில் படிகப்பெருக்கி பயன்பட்டது. எ-டு ஐபிஎம் 1620. பெல் ஆய்வுக் கூடம். **3) மூன்றாம் தலைமுறை:** 1965-1970. இத்தலைமுறை சார்ந்த கணிப்பொறிகளில் ஒருங்கிணை சுற்றுகள் பயன் படுத்தப்பட்டன. எ-டு ஐபிஎம் 360.

**4. நான்காம் தலைமுறை:** 1970-2000. இத்தலைமுறைக் கணிப்பொறிகளில் நறுவல்கள் (சிப்ஸ்) பயன்படுகின்றன. எ-டு கிரே-1, சைபர்-205, ஐபிஎம்-370. நுணுகியறிதல் இவற்றின் தனிச் சிறப்பு.

**Computer, history of - கணிப்பொறி வரலாறு :** கணிப்பொறி 1500 ஆண்டுக்கால பழைய வரலாற்றையும் 500 ஆண்டுக்காலத் தற்கால வரலாற்றையும் கொண்டது. மணிச்சட்டம் 2000 ஆண்டுகளுக்கு முன் புனையப்பட்டது. கணக்கிட உதவுவது. இன்றும் பயன்படுவது. இது கணிப்பொறியின் முன்னோடி 1623-இல் வில்ஹெல்ம் ஷிக்கார்டு என்பார் முதல் எந்திர எண்கணிப்பானை அமைத்தார். இது கூட்டல், கழித்தல், பெருக்கல், வகுத்தல் ஆகிய அடிப்படைக் கணக்குச் செயல்களைச் செய்வது. தானாக இயங்கியது.

17ஆம் நூற்றாண்டில் பினெய்ஸ் பாஸ்கல் என்பார் எந்திரக் கணிப்பானைப் புனைந்தார். 1630-இல் கலிலியோ என்பார் நழுவுகோல் என்னும் கணிப்பானை அமைத்தார்.

18 ஆம் நூற்றாண்டில் லெபனஸ் உருளை அமைக்கப்பட்டது. இது தானியங்கு முறையில் நான்கு கணக்கு அடிப்படைச் செயல்களைச் செய்தது. இதை லெபனிஸ் புனைந்தார்.

19ஆம் நூற்றாண்டில் சார்லஸ் பாபேஜ் என்பார் வேறுபாட்டு எந்திரம், பகுப்பு எந்திரம் என்னும் இரு பொறிகளை அமைத்தார். இவை நீராவியால் இயங்கின. இவர் கணிப்பொறியின் தந்தை. ஏனெனில், இவர் அமைத்த எந்திரங்கள் இரண்டும் மின்னணு ஆற்றலால் இயங்கும் கணிப்பொறிகளுக்கு வழிவகுத்தன.

20-ஆம் நூற்றாண்டில் மின்னணு ஆற்றல் அடிப்படையில் இயங்கும் கணிப்பொறிகள் அமைக்கப்பட்டன.

பாபேஜ் வழங்கிய நெறிமுறையின் அடிப்படையில் வடிவ மைக்கப்பட்ட முதல் கணிப் பொறி **ஈனியாக்.** 1943-1945இல் இதை **மாக்கிளி** என்பார் அமைத்தார். இதில் வெற்றிடக் குழல் பயன்படுத்தப்பட்டது. **எட்வாக்** என்னும் கணிப்பொறி சேமிப்புத்திறன் கொண்டது. இதை 1944-
இல் **வான்நியூமான்** என்பார் அமைத்தார். இதற்குப் பின் வந்த கணிப்பொறிகள் அனைத்தும் இதன் அடிப்படையிலேயே உருவாக்கப்பட்டன. ஆகவே, இவற்றின் கட்டமைப்பு நியூமான் கட்டமைப்பு எனப்படும். **நுண்மின்னுவியல்** 1940-1970 வரை நன்கு வளரத்தொடங்கியது. -

1948-இல் படிகப்பெருக்கி (டிரான்சிஸ்டர்) புனையப்பட்டது.

1964-இல் ஒருங்கிணைசுற்று நிறுவல்கள் (சிப்ஸ்) அமைக்கப்பட்டன. இவை கணிப்பொறி உலகில், பெரும் புரட்சியை உண்டாக்கின.

1969-இல் ஒரு **நுண்முறை யாக்கி** (மைக்ரோபுராசசர்) புனையப்பட்டது. புனைந்தவர்கள் ஜான் கெமினி, தாமஸ் குர்ட்ஸ்.

1981-இல் இணைமுறையாக்கக் கணிப்பொறிகள்: ஜப்பானியர்களால் வடிவமைத்து வழங்கப் பட்டது.

இதுகாறும் கூறிய கணிப்பொறி அறிஞர்களின் பெயர்களைத் தவிர, வேறு சில குறிப்பிடத்தக்க பெயர்களும் உள்ளன.

**பேரா. டாம் கில்பர்ன், பேரா. பிரடி வில்லியம்ஸ்** ஆகிய இருவரும் நினைவகம் உள்ள முதல் கணிப்பொறியை (1948-இல் அமைத்தனர் சுட்டெலியை 1968-இல் **டக் ஏஞ்சல் பார்ட்** புனைந்தார்.

**விண்டன் செர்ஃப்** இணையத் தந்தை **பில்கேட்ஸ்** என்பார் கணிப்பொறி கோடீஸ்வரர், மைக்ரோசாஃப்ட் கழகத்தின் (அமெரிக்கா) தலைவர்.

பொதுவாக, இக்கணிப்பொறிகள் எல்லாம் நான்கு தலை முறைகளால் அடங்கும், நான்காம் தலைமுறைக் கணிப்பொறிகளின் சேமிப்புத்திறன், விரைந்த செயற்பாடு ஆகியவை மிக உயர்ந்தவை. இன்று செயற்கை நுண்ணறிவை

பெற்றவைகளாக விளங்குகின்றன. பா. **Internet history of html, history of.**

**Computer, kinds or - they are mainly five in number :** 1. Mainframe computer. 2. Digital computer. 3. Microcomputer. 4. Mini computer. 5. Personel computer. **கணிப்பொறி வகைகள் இவை முதன்மையாக நான்கு:** 1) முதன்மைக் கணிப்பொறி, 2) எண்ணிலக்கக் கணிப்பொறி 3) நுண்கணிப்பொறி, 4) சிறு கணிப்பொறி, 5) தனியாள் கணிப்பொறி.

**Computerised data processing, advantages of - கணிப்பொறி மயமாக்கிய தகவல் முறையாக்கலின் நன்மைகள்:**

1) மனித ஆற்றல் மிச்சப்படுத்தப்படுகிறது.

2) விரைவு அதிகம்; செயல் நேரம் மிகக்குறைவு நிமிகள் வினாடிகள்.

3) தவறுகளுக்குரிய வாய்ப்புகள் மிகமிகக் குறைவு.

4) சேமிக்கப்படும் தகவல் நன்கு பெர்ருந்தி இருக்கும். இடத்தைக் குறைப்பது.

5) ஒரு கணிப்பொறியிலிருந்து மற்றொரு கணிப்பொறிக்குத் தகவல்களை விரைவாகப் பரிமாறிக்கொள்ளலாம். எ-டு வானூர்தி முன்பதிவு.

6) தகவல்களைப் பதிப்பிப்பது எளிது. இதில் திருத்தம், மாற்றங்கள் ஆகியவை அடங்கும்.

7) கோப்புகளைத் தேடவும் பிரிக்கவும் கணிப்பொறிமயமாகிய தகவல்தளம் மிகப்பயனுள்ளது. இதுபிற தகவல் கையாளும் செயல்களுக்கும் உதவும். ஒ. **Manual data processing, disadvantages of.**

**Computer languages - கணிப்பொறி மொழிகள் :** இவை உயர்நிலை மொழிகள் 1) போர்ட்ரான், 2) பேசிக், 3) கோபல், 4) விஷிவல் பாக்ஸ் புரோ, 5) விஷிவல் பேசிக், 6) விஷிவல் சி++ இவை தவிர எந்திர மொழியும், கோவை மொழியும், இதில் சேரும்.

**Computer literacy programme - கணிப்பொறி அறிவொளித் திட்டம் :** இது இணையத்தொடு இணைந்த திட்டம். 03-12-2000 அன்று தமிழக முதல்வர் கலைஞர் அவர்களால் தொடங்கப்பட்டது. தமிழ்நாட்டில் கணிப்பொறியைப் பயிலாத

மாணவ மாணவியர்களுக்கு 60 அரசுக் கல்லூரிகளில் அறிமுகப்படுத்தப்பட்டுள்ளது.

**Computer memory - கணிப்பொறி நினைவகம் :** இது இரு வகை: **1) முதன்மை நினைவகம்:** இதில் ஆர்ஏம், ஆர்ஓஎம், பிஆர்ஓம் ஆகியவை இருக்கும். **2) துணைச் சேமிப்புக் கருவியமைப்புகள்:** இவற்றில் நெகிழ்வட்டு, வன்வட்டு காந்த நாடா, நெருக்க வட்டு ஆகியவை அடங்கும்.

**Computer networks - கணிப்பொறி வலையமைவுகள்:** இவை இரண்டிற்கு மேற்பட்ட கணிப்பொறித் தொகுதிகளுக்கிடையே தகவல் தொடர்பு கொள்ள உதவுபவை. காட்டாக, ஓர் அலுவலகத்தில் பல கணிப்பொறிகளைக் கம்பிகள் மூலம் இணைத்து வலையமைவை உண்டாக்கலாம். இதற்கு ஊடகமாகப் பயன்படுவது தகவல் தொடர்பு வழியாகும். இந்த ஊடகம் பயனாளிகளின் எண்ணிக்கையை உறுதிசெய்து, அவர்கள் தகவல் பரிமாற்றம் செய்து கொள்ளவும் உதவுவது.

**Computer programme - கணிப்பொறி நிகழ்நிரல்:** விதிமுறையைத் தெரிவிக்கும் துல்லிய குறிமானம்.

**Computer science -** the technical study of computer working, the mathematics of their operation and the language with which we communicate with them. **கணிப்பொறி அறிவியல் :** கணிப்பொறி வேலைசெய்தல், அவை இயங்கும் கணித முறைமை, அவற்றுடன் நாம் கொள்ளப் பயன்படுத்தும் மொழிகள் ஆகியவை பற்றி ஆராயும் தொழில் நுட்பத்துறை.

**Computer usage - கணிப்பொறி வழக்காறு:** கணிப்பொறித் துறையில் உருவாகியது. வியப்புக்குரியதாகவும் ஏற்பதற்குரியதாகவும் உள்ளது. எ-டு. Biobreak - கழிவறை செல்லல். **Computing -** the process of working with numbers to solve a problem. **கணித்தல் :** ஒரு சிக்கலுக்குத் தீர்வு காண எண்களைக் கையாளும் முறை.

**Concatenation -** in string processing the synthesis of longer character strings from shorter ones. **கோவையமைத்தல் :** சரமுறையாக்கலில் நீண்ட உருச்சரங்களை குறுகிய சர உருக்களாகத் தொகுத்தல்.

**Conditional assignment operator -** கட்டுப்பாட்டு ஒப்படைப்புச் செயலி.

**Conditional processing -** this is a test process. **கட்டுப்பாட்டிற்குரிய முறையாக்கல்:** இது ஒரு ஆய்ந்து பார்க்கும் முறை.

**Configuration table -** the table maintained in a computer by the operating system. It signifies the status of the individual units of the system. **உருவமைவு அட்டவணை :** இயக்கு தொகுதியினால் கணிப்பொறியில் பேணப்படும் அட்டவணை. இது ஒரு தொகுதியின் தனியலகுகளின் நிலையைக் குறிப்பது.

**Constants -** data which do not get changed for each run in a program. They are of many kinds. **மாறிலிகள் :** ஒரு நிகழ்நிரலில் ஒவ்வொரு ஓட்டத்திற்கும் மாறாத தகவல்கள் இவை. பா. **C constants.**

**Container control - கலக் கட்டுப்பாடு :** இது எல்லாக் கட்டுப்பாடுகளையும் தன் சட்டகத்தில் அடக்குவது. பொத்தான் தொகுதிகளை ஒரே தொகுதியால் உருவாக்க உதவுவது. இவை பின்வருமாறு: 1) சட்டம், 2) படம், 3) வடிவம், 4) எஸ்எஸ் தந்தி.

**Contents -** the information stored at any address or in any register of a computer. **அடக்கம் :** ஒரு முகவரியில் அல்லது ஒரு கணிப்பொறியின் பதிவகத்தில் சேமித்து வைக்கப்பட்டிருக்கும் தகவல்.

**Continue statement - தொடர் கூற்று :** இது வளையங்களில் பயன்படுவது. வளையத்தின் ஒரு பகுதியைத் தாவிச் செல்லவும் வளையத்தின் அடுத்த சுழற்சியைத் தொடரவும் பயன்படுவது. இது கட்டுப்பாட்டை வளையத்தின் அடுத்த சுழற்சிக்கு மாற்றுவது இதன் பொதுப் படிவமைப்பு. தொடர், continue;

**Contour analysis -** a reading technique employing a rowing spot of light. The light reaches out the character's outline by bouncing its inter edges. **புறக்கோட்டுப் பகுப்பு :** ஒரு படிக்கும் நுட்பம். இதில் ஒரு நகரும் ஒளி பயன்படுகிறது. இந்த ஒளி, உருக்களின் புறக்கோட்டை அடைந்து அதன் வெளிப்புற விளிம்புகளில் குதிக்கும்.

**Control -** a device to direct or regulate some theory: eg joystick. **கட்டுப்பாடு :** ஒன்றை இயக்க அல்லது ஒழுங்குபடுத்த உதவும் கருவியமைப்பு.

**Control, kinds of - கட்டுப்பாட்டு வகைகள்:** இவை வரைகலை சார்ந்தவை: 1) படப் பெட்டிக் கட்டுப்பாடு, 2) படக் கட்டுப்பாடு, 3) வரிக்கட்டுப்பாடு, 4) வடிவக் கட்டுப்பாடு, 5) எழுச்சியூட்டும் கட்டுப்பாடு. விரிவு அவ்வப் பதிவுகளில் காண்க.

**Control language -** the set of commands in an operating system. **கட்டுப்பாட்டு மொழி :** ஓர் இயக்கும் தொகுதியில் உள்ள கட்டளைத் தொகுதி.

**Controlling user response - பயனாளித் துலங்கலைக் கட்டுப்படுத்தல்:** இது பயனாளியின் விருப்பங்களை வரையறை செய்வது. பெற வேண்டிய பொருள்களைக் கட்டுப்படுத்திப் பெறலாம்.

**Control panel - கட்டுப்பாட்டுப் பலகை:** கணிப்பொறியுடன் இணைந்த வேறுபட்ட வன்பொருள் பகுதிகளை நிறுவவும் மேலாண்மை செய்யவும் இது நமக்கு உதவுகிறது. தொடங்கு என்பதைத் தட்டி இப்பலகையைத் திறக்கலாம்.

**Control, property of - கட்டுப்பாட்டுப்பண்பு:** ஒவ்வொரு கட்டுப்பாட்டிற்கும் குறிப்பிட்ட ஒரு பண்புண்டு. இதற்குத் தவறு பண்பு என்று பெயர். இப்பண்பு பயன் அடிப்படையில் அமைவது. எ-டு பாடப் பெட்டிக்கு பாடப் பண்புண்டு.

**Controls, classification of - கட்டுப்பாடுகள் வகைப்பாடு** : விஷூவல் பேசிக் தொடர்பாகவுள்ள கட்டுப்பாடுகளைப் பின்வருமாறு பாகுபாடு செய்யலாம். **1) நிலைக் கட்டுப்பாடுகள்:** பொதுப் பொத்தான், குறிச்சீட்டு, சட்டக் கட்டுப்பாடுகள் இவை கருவிப் பெட்டியில் உள்ளவை, நீக்க முடியாதவை. **2) வினையுறு எக்ஸ் கட்டுப்பாடுகள்:** இவை தனிக் கோப்புகளாக உள்ளவை, vbxஅல்லது ocxவிரிவு. இவை தனித்தன்மை வாய்ந்த கட்டுப்பாடுகள். **3) வழக்கக் கட்டுப்பாடுகள்:** இவை செருகக் கூடிய பொருள்கள். எ-டு, சொல் ஆவணம். **4) வரிக் கட்டுப்பாடு:** வரைகலையில் பயன்படுவது. **5) படப்பெட்டிக் கட்டுப்பாடு:** படப்பண்பு அளிப்பது. **Control structures - கட்டுப்பாட்டு அமைப்புகள் :** இவை பின்வருமாறு.

1) முறைமை அமை அமைப்பு (logical if structure)

2) வேறு இருந்தால் அமைப்பு (if else structure)

3) கூட்டினுள் கூட்டு வேறு இருந்தால் அமைப்பு (nested if else)

4) கட்டுபாடில்லாக் கோட்டுக் கூற்று (unconditional go to statement)

5) சொடுக்கி அமைப்பு (switch structure)

6) வடிவக்கட்டுப்பாடு : வடிவமளிப்பது.

7) எழுச்சியூட்டும் கட்டுப்பாடு: எழுச்சி ஊட்டுவது.

**Control unit, cu - கட்டுப்பாட்டலகு :** பல அலகுகளுக்கிடையே தகவல்களையும் நிகழ்நிரல் குறிப்புகளையும் மாற்றும் வேலையை இது கட்டுப்படுத்துகிறது. மையச் செயலகத்தின் ஒரு பகுதி.

**conversion** - changing a data from one form to another.

1. From 10pt normal to 10 pt bold,

2. 4-bt numbers in the complement notation. Decimal number +5, binary number 101, one's comp. 00101, two's complement. 00101 - **மாற்றல் :** ஒரு தகவலை ஒரு வடிவத்திலிருந்து மற்றொரு வடிவத்திற்கு மாற்றுதல்.

1) இயல்பாகவுள்ள 10 புள்ளி எழுத்தை 10 புள்ளி கொட்டை எழுத்தாக மாற்றுதல்.

2) நிரப்பு குறிமானத்தில் 4 இருமி எண்கள். தசம எண் +5. இரும எண் 101, 1இன் நிரப்பு, 00101, இரண்டின் நிரப்பு 00101.

**cookies - சிறுகோப்புகள்**.

**coordinating data communications - தகவல் தொடர்புகளை ஒருங்கிணைத்தல் :** இதில் தகவல் மோதலைத் தவிர்க்க மரபுச்சீரி (புரோட்டோகோல்) பயன்படுகிறது. இது முன்னரே வரையறை செய்யப்பட்ட நடைமுறையாகும். கணுக்களுக்கிடையே இச்சீரி தகவல் மாற்றத்தை நிறுவுவது, நிலை நாட்டுவது, தேவைப்படின் முறிப்பது.

உள்ளக நினைவகம் : காந்த உள்ளகங்களைக் கொண்ட கணிப்பொறி நினைவகம்.

**copying files - கோப்புகளைப் படி எடுத்தல் :** ஒரு கோப்பைப் படி எடுக்கும் பொழுது, மூலக்கோப்பு அப்படியே விடப்படும். கோப்பின் புதிய படி அது இருக்க வேண்டிய இடத்தில் வைக்கப்படும்.

**copy programme** - a system programme copying a data or programme file from one peripheral device to another. **படி எடுக்கும்**

**நிகழ்நிரல் :** ஓர் அமைப்பு நிகழ்நிரல். ஒரு வெளிப்புறக் கருவியிலிருந்து மற்றொன்றுக்குத் தகவல் அல்லது நிகழ்நிரல் கோப்பைப்படி எடுப்பது.

**Core memory -** the computer memory having magnetic cores.

**Correcting spelling mistakes - எழுத்துப் பிழைகளைத் திருத்தல்:** சொல்முறையாக்கு மென்பொருளைப் பயன்படுத்தி உருவாக்கும் ஆவணங்கள் எழுத்துப்பிழை இல்லாமல் இருக்கும். இதற்கு ஸ்டார் எழுதியில் அகராதியும், எழுத்துப்பிழை சரிபார்க்கும் நிகழ்நிரலும் இக்கும். ஆவணத்தைத் தட்டச்சு செய்யும் பொழுது, இந்த எழுதி, எழுத்துப் பிழைகளை அடையாளங் காட்டும்.

**Corruption -** an error in an application system. **பிழைபடல்** ஒரு பயன்பாட்டுத் தொகுதியால் பிழை உண்டாதல்.

**Cq, contemporary quotient - தொழில்நுட்ப ஈவு :** தொழில் துறைகளில் சிறந்து விளங்குவதற்குரிய திறங்களை அளவிடும் நுணுக்கம். கல்வித் துறையில் பயன்படும் நுண்ணறிவு ஈவு (q) போன்றது.

**Creating links - இணைப்புகளை உருவாக்கல்:** எச்டிஎம்எல்லின் ஒரு சிறப்பியல்பு ஆவணங்களை உருவாக்குதல் ஆகும். இணைப்பு என்பது ஆவணத்தின் ஒரு பகுதி. இதைத் தட்டி அடுத்த ஆவணத்திற்குச் செல்லலாம்.

**Creating a programme - நிகழ்நிரலை உருவாக்கல்:** ஒரு சிறிய நிகழ்நிரலை எழுதுவது எளிது. முதலில் இதற்கு வழிமுறைப் படத்தை வரைய வேண்டும். இதிலிருந்து நிகழ்நிரலை எளிதில் எழுதலாம். இம்முறை நம் அன்றாட வாழ்வில் நடைபெறும் நிகழ்ச்சிகளுக்குப் பொருந்தா.அதற்கு முறையான அணுகுமுறை தேவை.

**Cross correlator, synchronous detector-** ஒத்திசைக் கண்டறிவி.

**Csi, computer society of india-சிஎஸ்ஐ இந்தியக் கணிப்பொறிக் கழகம்:** இது சிறந்த கணிப்பொறிப் பணி செய்வது, ஆதாயமில்லாமல் அதைச் செய்வது. 1965-இல் நிறுவப்பட்டது. உறுப்பினர்கள் 19000, 61 பிரிவுகள், 79 கிளைகள், தலைமை இடம் மும்பை. நோக்கம் "என்கடன் பணி செய்து கிடப்பதே"; எல்லோரும் இன்புற்றிருப்பதே. சிஎஸ்ஐ 2000 பொருட்காட்சி சென்னை தரமணி டைடல் பூங்காவில் செப்டம்பர்-2000, 13-17

வரை நடந்தது. இதன் 35 ஆம் ஆண்டுக் கூட்டத்தோடு இணைந்து நடத்தப்பட்டது. இக்கழகம் 1979-இல் நிகழ்நிரல் திறன் தேசிய அளவைத் தேர்வை (nstpc- national standard test in programming competence) நடத்தியது. இதுபோன்று பல நல்ல பணிகளைச் செய்து வருவது.

**cursor -** a movable marker on the screen of a vdu indicating where the next character will be printed. **குறிப்பி :** காட்சித் திரையிலுள்ள நகரும் சுட்டி அடுத்த உரு எங்கு அச்சியற்றப்படும் என்பதைக் காட்டும்.

**cursor control keys -** keys for moving a character round the screen of a vdu using the keyboard arrows up, down, right and left. **குறிப்பிக் கட்டுப்பாட்டுத் திறவுகள் :** காட்சித் திரையைச் சுற்றி ஓர் உரு நகர்வதற்குரிய திறவுகள். விசைப் பலகை அம்புக் குறிகளை மேல், கீழ், வலம், இடம் எனப் பயன்படுத்தும்.

**customising - பயனுக்கேற்ப அமைத்தல் :** பயனாளியின் வசதிக்கேற்ப ஒன்றைச் செய்தல். எடுத்துக்காட்டு : பணிப்பட்டை என்பது மேசை அடியில் இருப்பது. இதை மேசையின் நான்கு பக்கங்களில் ஏதாவது ஒன்றிற்கு எளிதாக நகர்த்தலாம்.

**custom software - user's software - பயனாளி மென்பொருள்.**

**cut and paste - வெட்டி ஒட்டல் :** சொல் முறையாக்கும் தொகுதியின் பதிப்புப் பணி. இதில் பாடப் பகுதி தொடக்கத்திலும் முடிவிலும் குறிப்பிட்ட உருவினால் குறிக்கப்படும். பின் அதே பாடத்தில் வேறு ஓர் இடத்திற்கு அது படிமாற்றம் செய்யப்படும்.

**cyber - computer : கணிப்பொறி.**

**cyber attack - கணிப்பொறித் தாக்குதல் :** இது 1997 ஏப்ரலில் அமெரிக்காவில் நடைபெற்றது. 26000க்கு மேற்பட்ட பாதுகாப்புத் துறை கணிப்பொறிகள் இத்தாக்குதலுக்கு உள்ளாயின. ஒருவாறு இது நிறுத்தப்பட்டது.

**cyber career centre - கணிப்பொறி வாழ்க்கைத் தொழில் மையம்** : இது தனியார் கணிப்பொறி நிறுவனங்களும் அரசு நிறுவனங்களும் நடத்துவது. இத்தொழிலுக்கு நல்ல எதிர்கால வாய்ப்புள்ளது. புதுப்புது கணிப்பொறி முறைகள் , மொழிகள், நுட்பங்கள் நாளும் வந்த வண்ணம் உள்ளன.

**cyber guide - கணிப்பொறி வழிகாட்டி** : கணிப்பொறி வேலைவாய்ப்புக்கு வழிகாட்டுவது. எ-டு இணையம், மின் வணிகம்.

**cyber future - கணிப்பொறியின் எதிர்காலம்** : நன்மை ஒரு பக்கம் இருந்தாலும் தீமையும் மற்றொரு பக்கம் உள்ளது. தவறுதலாகப் பயன்படுத்துவதே தீமை, இதைத் தவிர்க்கக் கணிப்பொறிக்கு ஒளிமயமான எதிர்காலம் உண்டு என்று கூறலாம்.

**Cyber land - கணிப்பொறி உலகம்** : பல காரணிகளினால் செல்வாக்குள்ள உலகு. பாப் பண்பாடு, நூல்கள், திரைப்படங்கள் முதலியவை இக்காரணிகள்.

**Cyber laws - கணிப்பொறிச் சட்டங்கள்** : கணிப்பொறித் துறையில் நடைபெறும் குற்றங்களை தடுக்க ஐ.நா. வினால் 1997-ல் உருவாக்கப்பட்டவை. உலகின் பல நாடுகளும் ஒரு முன்மாதிரியாக பயன்படத்தக்க அளவுக்கு அமைந்துள்ளது. இந்தியா இதைப் பின்பற்றித் தன் தகவல்தொழில் நுட்பவியல்ச் சட்டத்தை வகுத்துள்ளது (tt act 2000).

**Cybernation - manufacture by means of computer. கணிப்பொறி உற்பத்தி** : கணிப்பொறி வழி பொருள்களை உருவாக்குதல்.

**Cybernetics -** the study of how communications and control systems can be combined to simulate human functions. **கணிப்பொறிவழி இயல்** : கட்டுப்பாட்டுத் தொகுதிகளையும் தகவல் தொடர்புகளையும் இணைத்து, மனித வேலைகளை எவ்வாறு பகர்ப்பு செய்யலாம் என்பதை ஆராயும் தொழில் நுட்பத்துறை.

**Cyber phobia - கணிப்பொறி அச்சம்:** கணிப்பொறியைக் கண்டாலே கடும் அச்சம்.

**Cyber poron - கணிப்பொறி இழிசுவை** : 1995இல் டயம் என்னும் ஆங்கில இதழ் இணையத்தில் நடைபெறும் பாலியல்

தொடர்பாகக் காட்டபெறும் இழிசுவைகளைப் பற்றி விரிவாக எழுதி, இவையே அதில் முனைப்பாக உள்ளன என்றும் குறிப்பிட்டுள்ளது. கணிப்பொறி அல்லது இணையக் குற்றங்களில் இதுவும் ஒன்று. பா. **Internet crimes.**

**Cyber punk -** a genre of science function.
**கணிப்பொறிக்கதை :** அறிவியல் கதை வகை.

**Cyber slang - கணிப்பொறி கொச்சை மொழி:** கணிப்பொறி தொடர்பாகப் பயன்படும் பொருள் வேறுபாடுள்ள சொற்கள். எ-டு மின்னஞ்சல் - பார்க்கும் அஞ்சல்.

**Cyber space - கணிப்பொறி வெளி :** வானவெளிபோன்று பரந்த உலகம். இதற்கு நாடு வழிப்பட்ட எல்லைகள் இல்லை. ஆகவே, சிக்கல்களும் நிரம்ப உண்டு.

**Cyberspeak** - something that connot be assessed in a keyboard alone.

**கணிப்பொறி பேசுகிறது :** இதை ஒரு விசைப்பலகையில் மட்டும் மதிப்பிட முடியாது.

**Cyberterrorism - கணிப்பொறி வன்முறை :** சட்டத்திற்குப் புறம்பாக நடைபெறும் செயல்கள். இதைத் தடுக்கத் தேசியத் திட்டத்தை வகுத்த நாடு அமெரிக்கா. இதற்காகக் கணிசமான தொகை ஒதுக்கிக் கணிப்பொறித்துறை அறிஞர்கள் உதவி நாடியுள்ளது. இதைக் கொண்டு தனித்திட்டம் வகுக்கப்பட்டு வன்முறை ஒடுக்கப்படும். இத்திட்டத்தை அமெரிக்கக் குடியரசுத் தலைவர் பில் கிளிண்டன் அறிவித்துள்ளார். (2000)

**Cyborg** - a robot made of biological and machine components **கணிப்பொறி உயிரி :** உயிரியல் மற்றும் எந்திரப் பகுதிகளால் செய்யப்பட்ட தொலை இயக்கி.

**Cycle time - memory cycle. சுழற்சி நேரம் :** நினைவகச் சுழற்சி.

**Cyclic storage** - a computer storage device; eg magnetic drum. **சுழல் சேமிப்பு :** கணிப்பொறிச் சேமிப்புக் கருவியமைப்பு. எ-டு காந்த உருளை.

## D

**Daisy chain** - a number of devices connected in series: eg. Disk drive. **சிற்றொடர் :** தொடர் வரிசை யில் இணைக்கப்பட்டிருக்கும் பல கருவியமைப்புகள் எ-டு வட்டு இயக்கி.

**Daisywheel printer** - a printer producing high quality hard copy on paper: e.g. Program listings. **சிற்றாழி அச்சியற்றி :** தாளில் உயர்தர வன்படியை உண்டாக்கும் அச்சியற்றி. எ-டு நிகழ் நிரல் பட்டியல்கள்.

**Dan bricklin - டேன் பிரிக்லின்:** காட்சிக் கணிப்பாணை (visicalc) 1979-இல் ஆப்பிள் கணிப்பொறிக்காகப் புனைந்தவர்.

**Dasa - டாசா:** இது தகவல் ஈட்டும் அமைப்பு. அமெரிக்கக் கவுல்டு நிறுவனத்தால் உருவாக்கப்பட்டது. எல்லாவகை ஆய்வு முடிவுகளைப் பகுத்துப் பதிவு செய்து விளக்கமாகக் காட்டவல்லது. இது தொழில் துறைப் பயன்பாடுகளுக்கு அதிகம் உதவுவது. எ-டு அதிர்ச்சி, அதிர்வு, தகைவு, திரிபு, ஒலிஇயல், எறிபடை இயல்.

**Data** - any information which can be processed or communicated: eg. Facts, statistics symbols etc. **தகவல் :** தரவு. முறையாக்கக் கூடிய அல்லது தெரிவிக்கக் கூடிய செய்தி. எ-டு உண்மைகள், புள்ளிவிவரங்கள், குறிகள் முதலியவை.

**Data bank -** a collection of data stored in a computer system. **தகவல் வங்கி :** ஒரு கணிப்பொறித் தொகுதியில் சேமித்து வைக்கப்பட்டிருக்கும் தகவல் திரட்டு.

**Data base -** a collection of related data stored in a computer. It has indexed references: eg. Subject headings, keywords and phrases. **தகவல்தளம் :** தொடர்புடைய தகவல்திரட்டு, கணிப்பொறியில் சேமித்து வைக்கப்பட்டிருப்பது. இது குறிப்பிட்ட குறிப்புதவிகளைக் கொண்டது. எ-டு பொருள் தலைப்புகள், திறவுச் சொற்கள், சொற்றொடர்கள்.

**Data base connection - தகவல் தள இணைப்பு:** விஷீவல் பேசிக்கில் மூன்று தகவல் அணுக்க இடைமுகங்கள் உள்ளன. அவையாவன: 1) விசையுறு எக்ஸ் தகவல் பொருள்கள் **(ado)** 2) தொலைத் தகவல் பொருள்கள் **(rdo)** 3) தகவல் அணுக்கப்பொருள்கள் **(dao)**.

**Data base management systems (dbms), basic concepts of - தகவல் தள மேலாண்மை முறையின் (டிபிஎம்எஸ்) அடிப்படைக் கருத்துகள் :** டிபிஎம்எஸ் என்பது ஒரு நிகழ்நிரல் அல்லது நிகழ்நிரல் திரட்டு. இதைப் பலரும் தகவலுக்காகப் பயன்படுத்தலாம். தேவைப்பட்டால், மாற்றிய மைக்கலாம். எளிய மற்றும் சிக்கலான வேண்டுகோள்களையும்

அமைக்கலாம். இவற்றை எல்லாம் கொண்டு தெரிவு செய்த பதிவுருக்களின் பணியை மேற்கொள்ளலாம். பெரிய தகவல் தளங்களிலிருந்து விரைவாகத் தகவல்களை மீட்கவும் அணுகவும் இயலும். இதுவே இதன் பெருநன்மை. இதன் ஆற்றலுள்ள வன்பொருள் இயங்கும் பொழுது, பெரிய தகவல் தளத்திலிருந்து வினாடிகளில் ஒரு சிறு தகவலைக் கூடப் பெறலாம். இதிலுள்ள பணிகள் மூவகை: 1) தகவல் தளத்தில் தகவலைப் பதிதல், 2) இத்தளத்தில் பதிவுருக்களைப் பதிவு செய்தல், 3) தகவல் உட்பகுதிகளை அல்லது கணங்களைப் பெறுதல்.

**Data base, manipulation of - தகவல் தளத்தைக் கையாளல் :** இதைப் பின்வரும் வழிகளில் கையாளலாம்.

1) தேடல், 2) பிரித்தல், 3) இணைத்தல், 4) தகவல் கணக்கீடுகள் செய்தல், 5) வடிகட்டல், 6) தகவல் தளத்தைப் பதிப்பதித்தல், 7) அறிக்கை இயற்றல் **data base querying - தகவல் தள வினா :** ஒவ்வொரு தகவல் தள மேலாண்மை முறையும் நிகழ்நிரல் மொழியை ஒத்த மொழி ஒன்றை அரவணைக்கிறது. இம்மொழிக்கு **கட்டமைப்பு வினா மொழி**, கவிமொ என்று பெயர். ஆங்கிலத்திற்கு மிக நெருக்கமான கூற்றுகளைப் பயன்படுத்தித் தகவல் தளத்துடன் தொடர்பு கொள்வதற்குகாக இது சிறப்பாக அமைக்கப்பட்டது. இம்மொழி மூலம் பின்வருவனவற்றைச் செய்யலாம்: 1) பதிவுருக்களை இடங்காணத் தகவல் தளத்தைத் தேடல், 2) பதிவுருக்களை மேம்படுத்த அட்டவணைகளுக்கிடையே இணைப்புகளை நிறுவுதல், 3) பதிவுருக்ககளின் துணைத் தொகுதிப் பட்டியலைத் தேடுதல், 4) கணக்கீடுகள் செய்தல், 5) பழைய பதிவுருக்களை நீக்கல், 6) பிற தகவல் மேலாண்மைப் பணிகளைச் செய்தல். ஓர் அட்டவணையிலுள்ள தகவலின் சிறப்புக் கருத்துகளாக வினாக்களைக் கருதலாம். இவ்வினாவிலிருந்து பெறும் முடிவை எப்பொழுதும் தனியாகச் சேமித்து வைத்து வேண்டிய பொழுது காணலாம்.

**Data base types - தகவல் வகைகள் :** கருத்தமைப்பு அடிப்படையில் இத்தளத்தைப் பின் வருமாறு வகைப்படுத்தலாம்.

**1) தட்டைக் கோப்புத் தகவல் தளம்:** இதில் தனித்தகவல் அட்டவணை இருக்கும். தனியாளோ குழுவோ இதைப் பயன்படுத்தலாம். முகவரிப் பட்டியல்கள், பொருள் பட்டியல்கள் பேணப் பயன்படுவது. சிக்கலான தகவல்களை இதில் பெற இயலாது.

**2) தொடர்பு நிலைத் தகவல் தளம்:** இதில் ஒன்றுக்கு மற்றொன்று தொடர்புள்ள அட்டவணைகள் தொகுதியாக அமைந்திருக்கும். ஒன்றுக்கு மேற்பட்ட அட்டவணைகளில் இருக்கும். ஒன்றுக்கு மேற்பட்ட புலங்கள் அட்டவணைகளுக்கிடையே ஒரு தொடர்பை உருவாக்கும். பொதுப்புலங்கள் திறவுகள் (கீஸ்) எனப்படும். இதுவே இன்று தொழில்துறையில் அதிகம் பயன்படுவது.

**3) படிநிலைத் தகவல்தளம்** : முதலில் இது முதன்மைக் கணிப்பொறிகளில் பயன்பட்டது. இதில் பதிவுருக்கள் மரம் போன்ற அமைப்பில் உருவாக்கப்படும். பதிவுரு வகைகளுக்கு இடையே உள்ள உறவு தாய்-சேய் உறவு போன்றது.இந்த உறவில் ஒரு குழந்தைவகை ஒரு தனித்தாய் வகையோடு உறவுகொள்ளும்.

**4) வலையமைவுத் தகவல் தளம்:** இது படிநிலைத் தகவல் தளத்தை ஒத்தது. வேறுபாடு இதுவே. ஒரு பதிவுருவகை ஏனைய பதிவுரு வகைகள் ஒன்றோடு தொடர்பு கொள்ளக் கூடியது.

**5) பொருள் வழித் தகவல்தளம்:** இது ஒரு புதிய அமைப்பு. அண்மைக் காலத்தில் உருவானது. முற்றிலும் வேறுபட்ட அணுகுமுறையை மேற்கொள்வது. இதிலுள்ள தகவல் இனங்கள், பண்புகள், நடைமுறைகள் ஆகியவை சிக்கலான இனங்களாகத் தொகுக்கப்படும். இத்தொகுப்பே பொருள்கள் எனப்படும். பார்க்கக் கூடிய அளவில் ஒரு பொருள் என்பது விளை பொருளாகவோ, நிகழ்ச்சியாகவோ, வீடாகவோ, பயன்படுபொருளாகவோ, கலைப்பொருளாகவோ இருக்கும். இப்பொருளை அதன் இயல்புகள், பண்புகள், நடைமுறைகள் ஆகியவை வரையறை செய்பவை. இதன் சிறப்பியல்புகளுக்குப் பாடம் (உரை), ஒலி, வரைகலை, ஒளி ஆகியவை உண்டு. நிறம், அளவு, பாணி, விலை ஆகியவை பண்புகளுக்கு எடுத்துக் காட்டுகள். நடை (செயல்) முறை என்பது பொருளோடு தொடர்புள்ள முறையாக்கலை அல்லது கையாள்வதைக் குறிக்கும்.

**Data bus -** an electrical path way between the microprocessor and memory in a computer. **தகவல் போக்குவாய் :** நுண் முறையாக்கிக்கும் ஒரு கணிப்பொறியின் நினைவகத்திற்கும் இடையிலுள்ள மின்வழி.

**Data capture -** method of collecting data and converting it into a form to be used by a computer. **தகவல் ஈட்டல் :** தகவலைத் திரட்டிக் கணிப்பொறி பயன்படுத்துமளவுக்கு ஒரு வடிவத்திற்கு மாற்றல்.

**Data file, kinds of - தகவல் கோப்பின் வகைகள்:** இது இருவகை.

**1) ஓட்டவழிக்கோப்பு:** வேறு பெயர் திட்டக் கோவை. இது மேலும் இருவகைப்படும். **I) பாடக்கோப்புகள்:** இதிலுள்ள கோப்புகள் அடுத்தடுத்துள்ள உருக்களைக் கொண்டிருக்கும். **Ii) படிவமைப்பு இல்லாக் கோப்புகள்:** இதற்குத் தனித்த சேமச் சார்பலன் தொகுதி உண்டு.

**2) முறைவழிக் கோப்பு:** வேறு பெயர் தாழ்நிலைக்கோப்பு. இது தாழ்நிலைச் சார்பலன்களைக் கொண்டது.

**Data-organization -** தகவல் அமைப்பு : **இது மடிப்பிகள் (போல்டர்ஸ்) ஒழுங்காக அமைந்தது. ஒரு நிறுவனத்தை எடுத்துக் கொள்வோம். அதற்கு அலுவலகம், அதன் பொருள்கள், வாடிக்கையாளர்கள், வழங்குபவர் எனப்பல உண்டு. இத்தாள்கள் எல்லாம் வேறுபட்ட மடிப்பிகளில் நிரப்பப்பட்டிருக்கும்; ஒரு நிரப்பு அறையில் சேமிக்கப் பட்டிருக்கும் மடிப்பிகள், அறைகள் ஆகியவற்றிலுள்ள குறிப்புச் சீட்டுகள் நாம் விரும்புவதை எடுக்க உதவும். இதற்கு** விண்டோஸ்-98 **நன்கு உதவுகிறது.**

**Data processing -** the acquisition, recording and manipulation of data by means of a computer. This process involves data collection, verification, validation and report generation. **தகவல் முறையாக்கல் :** தரவுச் செயலாக்கம். கணிப்பொறியினால் தகவல்களை ஈட்டல், பதிதல், கையாளல் ஆகியவற்றைச் செய்தல். இம்முறையிலுள்ள செயல்களாவன. 1) தகவல் திரட்டல், 2) சரிபார்த்தல், 3) செல்லத்தக்கதாக்கல், 4) அறிக்கை உருவாக்கல்.

**Data processing computerised, advantages -** பா. Computerised data processing, advantages of.

**Data processing, kinds of - தகவல் முறையாக்கல் வகைகள் :** இது இருவகை **1) கை வழி முறையாக்கல்:** கையால் தகவல்களைத் தொகுத்தல் எ-டு வகுப்பாசிரியர் தேர்ச்சி அறிக்கை தயாரித்தல்.

**2) கணிப்பொறிவழி முறையாக்கல்:** தகவல்களைக் கணிப்பொறியில் செலுத்தித் தொகுத்தல். எ-டு அரசுத் தேர்வு மதிப்பெண் பட்டியல்கள்.

**Data processing manual, disadvantages of - கைவழித் தகவல் முறையாக்கலின் தீமைகள்:**

1) துல்லியம் பயனுறுதிறன் குறைவு.

2) கைவழி முறைகளுக்கு அதிக நேரமாகும்.

3) மனித முயற்சி கணிப்பீட்டுப் பிழைகளைச் செய்ய வல்லது. 612 ஐ 621 என்று எழுதுவதற்கு வாய்ப்புள்ளது.

4) தாள் பதிவேடுகளில் தகவல்களை எழுதுவதால் அவை பருமனில் அதிகமாகிப் பேணுவதற்கு இடராக இருக்கும்.

5) திருத்தம், மாற்றம் ஆகியவற்றைச் செய்தல் கடினம்.

**Data representation - தகவல்களைக் குறித்தல் :** இதில் பின் வருவன அடங்கும்: 1) இருமிகள், எண் இருமிகள், 2) இரும எண்கள், 3) பதின் அறும எண்கள், 4) நிகர் சரிபார்ப்பு இருமி.

**Data retrieval -** the selection and extraction of data from a data base thro a keyboard connected to a computer. **தகவல் மீட்பு :** தகவல் தளத்திலிருந்து தகவலைப் பிரித்தலும் தெரிவு செய்தலும், கணிப்பொறியுடன் இணைக்கப்பட்ட விசைப் பலகையால் இது நடைபெறுகிறது. **Data sheet view - தகவல்தாள் காட்சி :** இது அட்டவணை அமைப்பை உருவாக்கவும், ஆவணப் பட்டியலைப் பார்வையிடவும் தகவல்களை பதிந்து பதிப்பிக்கவும் பயன்படுவது வேறுபெயர் அட்டவணை.

**Data sink -** the end of a communication channel at which data is received. **தகவல் அமிழ்வு :** தகவல் தொடர்பு வழி முடிதல். இங்குத் தகவல் பெறப்படும்.

**Data type conversion - தகவல் வகை மாற்றம் :** சி மொழியில் இதற்குத் திட்டமான விதிகள் உண்டு. விதிகளைப் பிற்சேர்க்கையில் அட்டவணையில் கண்டுகொள்க. **A+b** என்னும் கோவையை எடுத்துக்கொள். **A** என்பது முழுஎண் மாறி என்றால், **b** என்பது மிதப்பு மாறி. பின் **b** என்பது மிதப்பு மாறியாக மாற்றப்படும். கோவையின் பலன் மிதப்பு முறையின் படி மதிப்பிடப்படும்.

**Data types - தகவல் வகைகள் :** இவை அனைத்தும் மாறி என்று கொள்ளப்பட வேண்டியவையே. வேறுபட்ட வகைகள் பின்வருமாறு : 1) எண் இருமி 2) பூல் 3) முழு எண் 4) நீளம் 5) தனி 6 இரட்டை 7) செலாவணி 8) பொருள் 9) நாள்,10) சரம் 1) மாறிடம்.

**Data warehouse - தகவல் சேமகம் :** இது ஒரு கணிப்பொறி முறை. தொழில் துறை ]யாளர்களுக்கு முடிவெடுப் ]பதற்கு வேண்டிய தகவல்களை உடனுக்குடன் தருவது.

**Date arithmetic - நாள் கணக்கு :** இதைக் கையால் எழுதும் பொழுது எல்லாத் தகவல்களையும் நினைவில் வைத்துக் கொள்ள வேண்டும். இவற்றைக் கணிப்பொறியில் கொடுத்து அட்டவணைச் செயலி மூலம் செயற்படுத்துவது எளிது. பல தகவல்களுக்கும் படிவமைப்பு ஏற்படுத்தலாம். எ-டு 5-10-00 12-8-00 என்னும் இரு நாட்களுக்கு இடைபட்ட நாள்களை கணக்கிடுவோம். இதைச்செய்ய இந்த நாள்களை எவையேனும் இரு நுண்ணறைகளில் **- b2, b3 -** கொடுக்கவும். பின் **= b2 - b3** என்னும் வாய்பாட்டை நுண்ணறை **b4 -** இல் கொடுக்கவும். விடை 10746 நாள்கள் என்று நுண்ணறை **b4 -** இல் தோன்றும்.

**Deadlock - தேக்கம் :** இது ஒரு கணிப்பொறியில் பணி மேலும் நடைபெறாது இருக்கும் நிலை. வேறு பெயர்கள் சாவுத்தழுவல், இடைப்பூட்டு, முடிச்சு.

**Dead time -** a period of time allowed between two related events to avoid overlap. **வெற்று நேரம் :** தொடர்புள்ள இரு நிகழ்ச்சிகளுக்கிடையே பகுதி ஒத்திருப்பதைத் தடுக்க அனுமதிக்கப்படும் நேரம்.

**Debug -** to remove an error in a computer programme. **பிழைநீக்கு :** ஒரு கணிப்பொறி நிகழ்நிரலில் பிழையைக் களைதல்.

**Decade -** a group of 10 storage locations: eg. Magnetic drum. **பத்தாமிடம் :** பத்துச் சேமிப்பு இடங்களின் தொகுதி எ-டு காந்த உருளை.

**Decimal notation -** decimal numbers usually represented by binary digits. **பதின்மக் குறிமானம் :** வழக்கமாகப் பதின்ம எண்கள் இரும இலக்கங்களால் குறிக்கப்படுதல்.

**Decision -** an operation carried out by a computer to choose between alternative courses of action by comparing the relative magnitude of two specified operands. **முடிவு :** கணிப்பொறியினால் நிறைவேற்றப்படும் செயல். இச்செயலின் ஒன்றுவிட்ட ஒன்று போக்குகள் தெரிவு செய்யப்படும். குறிப்பிட்ட இரு செயலிடங்களின் சார்பு அளவை ஒப்பிட்டுச் செய்யப்படுவது இது.

**Decision box -** a flowchart symbol used to represent a decision. **முடிவுப்பெட்டி :** வழிமுறைப் படக்குறியீடு, முடிவைக் குறிக்கப்பயன்படுவது.

**Decision element -** a circuit doing a logical operation: and, or, not, except on one or more binary digits of input information representing yes or no and which expresses the result in its output otherwise known as decision gate. **முடிவுக் கூறு :** முறைமைச் செயலைச் செய்யும் மின் சுற்று. எ-டு உம், அல்லது இல்லை, தவிர. இவை உட்பலனுள்ள ஒன்றுக்கு மேற்பட்ட இரும எண்களில் இருக்கும். இதனால் முடிவு வெளிப் பலனாகத் தெரியும். வேறுபெயர் முடிவு வாயில்.

**Decision instruction -** an instruction capable of discriminating between the relative value of two specified operands. **முடிவுக் கட்டளைக் குறிப்பு :** குறிப்பிட்ட இரு செயலிடங்களுக்கிடையே உள்ள மதிப்பை வேறுபடுத்தி அறியும் குறிப்பு.

**Decision table -** a table of contingencies to be considered in the definition of a problem together with the actions to be taken. **முடிவு அட்டவணை :** சில் லறை இனங்களின் அட்ட வணை. எடுக்க வேண்டிய நடவடிக்கைகளுடன் ஒரு சிக்கலை வரையறுப்பதில் கருதப்படுவது.

**Declaration time -** in using the magnetic tape, the time required from the completion of a reading or writing operation to the moment the tape is stopped. **எதிர்முடுக்க நேரம் :** காந்த நாடாவைப் பயன்படுத்தும் பொழுது, படிக்கும் அல்லது எழுதும் செயல் முடிவடைவதிலிருந்து நாடா நிற்கும் வரையில் தேவைப்படும் நேரம்.

**Decode -** to determine the meaning of a set of signals describing an operation to be carried out. **பூட்டவிழ் :** நிறைவேற்ற வேண்டிய ஒரு செயலை விளக்கும் குறிகைத் தொகுதிகளின் பொருளை உறுதிசெய்வது.

**Decoder -** 1. A device translating a set of code signals. 2. Decoder circuit. 3. Matrix. 4. Tree. **பூட்டவிழ்ப்பி :** 1) குறிமுறைக் குறிகைகளைப் பெயர்க்கும் கருவியமைப்பி, 2) பூட்ட விழ்ப்பு மின்சுற்று, 3) அணி, 4) மரம்.

**Decrement - to decrease a variable. தாழ்வு :** ஒரு மாறியைக் குறைத்தல்.

**Decrement field -** the part of an instruction word being used to modify the contents of a stoage location or
register. **தாழ்வுப்புலம் :** கட்டளைக் குறிப்புச் சொல்லின் பகுதி; சேமிப்பு இடம் அல்லது பதிவகத்தின் அடக்கங்களை மாற்றியமைக்கப் பயன்படுத்தப்படுவது.

**Decryption - தகவல் விடுவிப்பு :** குறிமுறையில் அமைக்கப் பட்ட செய்திகளை மீண்டும் எளிய செய்திகளாக மீட்டல். ஒ. **Encryption.**

**Dedicated channel -** a link used for communication between devices. Its function is soley devoted to serving these devices. **ஒப்படைப்புச் செல்வழி :** கருவியமைப்புகளுக்கிடையே தகவல் தொடர்புக்காகப் பயன்படும் இணைப்பு. இதன் வேலை முழுக்க முழுக்க இக்கருவியமைப்புகளை இயங்கச் செய்வதே.

**Deep magic -** an awesomely arcane technique control to a programme. **ஆழ் மாயக்கட்டு :** ஒரு நிகழ் நிரலைக் கட்டுப்படுத்தும் ஒளி மறைவான நுணுக்கம், அச்சந் தருவது.

**Defect -** a fault in hardware or software. It may cause processing failures in a computer system. **குறை :** வன்பொருள் அல்லது மென்பொருளிலுள்ள குறை. ஒரு கணிப்பொறித் தொகுதியில் இது முறையாக்குந் தவறுகளை உண்டாக்குவது.

**Definition list - வரையறைப் பட்டியல் :** சொற்களை வரையறுக்கப்பயன்படுவது. பா. **List, kinds of.**

**Degauss -** to erase information from a magnetic tape, disk, drum or core. **அழித்தல் :** காந்த நாடா, வட்டு, உருளை அல்லது உள்ளகத்திலிருந்து தகவலை நீக்கல்.

**Degausser -** a device designed to demagnetise tape otherwise known as bulk eraser. **அழிப்பி :** ஒரு காந்த நாடாவைக் காந்த நீக்கம் செய்ய வடிவமைக்கப்பட்ட கருவியமைப்பு.

**Degradation -** the operation of a computer system providing a lower level of service in case of failures. **நிலை இறக்கம் :** தவறுகின்ற பொழுது ஒரு கணிப்பொறித் தொகுதியின் செயல், தாழ்பணி நிலையில் இருக்கும்.

**Delay counter -** a counter inserting a time delay in a sequence of events. **தாமத எண்ணி :** நிகழ்ச்சி வரிசையில் காலதாமதத்தை உண்டாக்கும் எண்ணி.

**Delay time -** the amount of time by which the arrival of signal is retained after transmission thro physical equipment. **தாமத நேரம் :** கருவி வழியாகச் செலுத்துகை நடைபெற்ற பின் குறிகை வருவதற்குரிய நேர அளவு பின்னடைதல்.

**Deletion -** any operation to eliminate a record or group of records from a file or folder or to remove a programme from the memory of a computer. **நீக்கல் :** ஒரு கோவை அல்லது மடிப்பியிலிருந்து பதிவுருக்கள் தொகுதியை நீக்கும் செயல். அல்லது கணிப்பொறி நினைவகத்திலிருந்து நிகழ்நிரலை நீக்கல்.

**Deletion operator -** the part of a data removing and replacing an existing record when it is added to file. **நீக்கல் செயலி :** தற்பொழுது இருக்கும் பதிவுரு, கோப்புடன் சேர்க்கப்படும் பொழுது, அதைநீக்கும் அல்லது மாற்றீடு செய்யும் தகவலின் பகுதி.

**Delimiter -** a marker character used to limit the bounds of a group of related characters in a programme not considered a member of the group, a character, a return, a comma or slash may be inserted as a delimiter. **வரையறைப்படுத்தி :** ஒரு தொகுதியின் உறுப்பு இல்லை என்று கருதப்படும் தொடர்புடைய உருக்கள், தொகுதியின் எல்லைகளை வரம்புப்படுத்தும் குறிப்பி உரு. ஓர் உரு, திருப்பம், காற்புள்ளி, அல்லது ஒரு சாய்வுக் கோடு, வரையறைப்படுத்தியாகச் செருகப்படும்.

**Deltagram -** a channel based message is conveyed within minutes and delivered by fax or e-mail. Nominal fee is rs. 10. **தொலை வழிவரையம் :** தகவல்கள் சில நிமிக்குள் தெரிவிக்கப் பட்டுத் தொலைநகல் அல்லது மின்னஞ்சல் மூலம் ஒப்படை செய்யப்படுகிறது. குறைந்த கட்டணம் ரூ. 10.

**Demodulation -** coverting an analog signal back into a digital one. **பண்பிறக்கம் :** மீண்டும் ஒப்பு மைக்குறிகையை இலக்கக் குறியாக மாற்றுதல்.

**Dense list -** the list where all the cells contain records of the file. **செறிவுப் பட்டி :** இதில் எல்லா நுண்ணறைகளும் கோப்பின் பதிவுருக்களைக் கொண் டிருக்கும்.

**Density -** a measure of the compactness of recording for data storage. **செறிவு :** தகவல் சேமிப்பின் பதிவு நெருக்க அளவு.

**Deposit -** to preserve the contens of an area of memory by writing to a backing store. **வைப்பு :** தாங்கு சேமிப்புக்கு எழுதுவதன் மூலம் நினைவகப் பகுதியின் அடக்கங்களைப் பாதுகாத்தல்.

**Deqsol, differential equation solver - டெக்கால், வேறுபடு சமன்பாடு தீர்ப்பி :** ஜப்பானைச் சார்ந்த ஹிச்சாய் என்பவரால் உருவாக்கப்பட் டது. எண்சார் பகர்ப்பு மென்பொருள் உருவாக உதவுவது.

**Description -** a significant element of data used to identify a record in which it appears. **வண்ணனை :** ஒரு தகவலின் சிறப்புக் கூறு. இது தானுள்ள பதிவுருவை அடையாளங் கண்டறியப் பயன்படுவது.

**Designation -** an item of data forming part of a computer record. **தகவல் பெயர் :** ஒரு கணிப் பொறிப் பதிவுருவின் பகுதியாகவுள்ள தகவல் இனம்.

**Designation punch -** a hole in a punched card showing the nature of the data. Otherwise known as control hole, control punch, designation hole, function hole.

**தகவல் பெயர் பொத்தல் :** துளையிட்ட அட்டையிலுள்ள துளை; தகவலின் இயல்பைக் காட்டுவது. வேறு பெயர்கள்: கட்டுப்பாட்டுத் துளை, கட்டுப்பாட்டுப் பொத்தல், தகவல் பெயர்த்துளை, வேலைத் துளை.

**Desktop computer-a unit with physical dimensions fitting conveniently on a desktop. மேசைக் கணிப்பொறி** : மேசையில் வசதியாக அமையும் பரு மன்களைக் கொண்ட அலகு.

**Desk top publishing, dtp - மேசை வெளியிடல், டிடிபி**: நுண்முறையாக்கிப் பயனுக்குரிய மென்பொருள். இம் முறையாக்கி பாடத்தைக் கையாள்வது. இதில் எழுத்தளவு, நுண்மையாக நெருக்கிச் செய் தல், பத்தியமைப்பு, வரை கலை முதலியவை கட்டுப்படுத் தப்படும். இதைச் செய்யச் சுட்டெலியும் விண்டோசும் உதவும். இதில் அலகிடும் உரு முறையாக்கி இருக்கும். இது பக்க வண்ணனை மொழிக்கு இணையானது. உண்டாகும் வெளிப்பலன் லேசர் அச்சியற்றியை இயக்கி அச்சுப்படியை அளிக்கும். இதை நன்கு திருத்தம் செய்து முடிவாக எடுக்கப்படும் அச்சுப்படி அச்சிட வேண்டிய செய்திகளுக்கு மூலமாக அமையும். இம்மூலம் படலத்தில் படிஎடுக்கப் பட்டு அச்சுக்கு அனுப்பப்படும்.

**Desktop publishing, benefits of - டிடிபியின் நன்மைகள்**: 1)ஒரு புதிய தொழில்நுட்பம். வெறுபெயர் ஒளியச்சுக் கோவை. 2)கையால் அச்சுக் கோப்பதை விட மூன்று மடங்கு அதிக மாகத்தட்டச்சு செய்யலாம். 3)அச்சு மிகத் தெளிவாக இருக்கும். 4)முதலில் ஒரு புள்ளி எழுத்தில் தட்டச்சு செய்து பிறகு வேண்டிய புள்ளி எழுத்துகளுக்கு மாற்றலாம். 5)வேண்டியவாறு வடிவ மைப்பு செய்யலாம். 6)திருத்தம் செய்வது எளிது. 7)ஒருபக்கத்தில் இருக்கும் செய்தியை வேறு பக்கத்திற்குச் கொண்டு செல்வது எளிது. 8)புத்தக வேலைகளை மிக விரைவாக முடிக்கலாம். 9)தட்டச்சு செய்து படி எடுத்த செய்திகளை எதிர்காலப் பயனுக்கு சேமித்துவைத்துக் கொள்ளலாம். 10)திருத்தங்களைத் திரையிலேயே படித்துச் செய்யலாம். 11)அனைத்துச் சில்லறை வேலைகளையும் அழகாகச் செய்யலாம். 12)அச்சுத் தொழில்நுட்ப இயலில் ஒரு பெரும் புரட்சி ஏற்படுத்தி வருகிறது.

**Desk top publishing, definition of - டிடிபி இலக்கணம்**: வசதியான மேசையில் கணிப்பொறியை வைத்து வேண்டிய தகவல்களைத் தட்டச்சு செய்து அச்சுப்படி எடுத்தல்.

**Desktop short circuits -மேசைக் குறுக்கு வழிகள்** : விண்டோசிலுள்ள ஆராய்வி மூலம் இவற்றை உருவாக் கலாம். -

**Desktop, structure of -மேசை அமைப்பு** : விண்டோஸ்-98-இல் அடிப்படை வேலை செய்யும் மேடை மேசையே. இதில் எல்லா நிகழ்நிரல்களும் உள்ளன. சுட்டெலியைப் பயன்படுத்தி வேண்டியவற்றைப் பெறலாம். இம்மேசையில் பல நுண்படங்கள் உள்ளன. இவை பயன்பாடு களைக் குறிப்பவை. ஒவ்வொரு படமும் ஒரு குறியத்தைக் கொண்டிருக்கும். இக்குறியம் பயன்பாட்டின் பெயரைக் குறிக்கும். எ-டு என் கணிப் பொறி, மீள்சுழற்சிக் குதிரகம், இணைய ஆராய்வி. தவிர இதிலுள்ள் பிற பகுதிகளாவன: 1) பணிச்சட்டம் 2) தொடங்கு பொத்தான் 3) தொடங்கு பட்டி 4) விரைவு பணிச்சட்டம் 5) அமைப்புத் தட்டு 6) பணி அட்டவண்ணப் படுத்தி.

**Device - the computer component or computer itself. கருவியமைப்பு**: கணிப் பொறிப் பகுதி அல்லது கணிப்ப்ொறி. Dhtml - டிஎச்டிஎம்எல்**:இது தனிச்சொல் ஒட்டுகளை அளித்து எழுதுமொழிகளைப் பயன்படுத்துவது.**

**Diagnosis -to locate errors in software or failures in hardwafe, குறையறிதல்**:மென்பொருளில் பிழைகளையும் வன்பொருளில் தவறுகளையும் கண்டறிதல்.

**Diagnostic test -the use of a special programme to identify and isolate failures in a computer-குறையறிஆய்வு** :ஒரு கணிப் பொறியில் தவறுகளை அடையாளங்கண்டு பிரித்தறியத் தனி நிகழ்நிரலைப் பயன்படுத்தல்.

**Dialect -variations in the syntax of a particular computer language.-கிளை மொழி** :ஒரு குறிப்பிட்ட கணிப்பொறி மொழியின் தொடரியலில் உள்ள வேறுபாடுகள்.

**Dialog, box -உரையாடல் பெட்டி** :இது விண்டோசில் பயன்படுகிறது. தகவலைத் திரையில் காட்டுகிறது. மற்றும் துலங்கலைத் தட்டச்சு செய் வது அல்லது தெரிவுப் பட்டியலிருந்து தேர்ந்தெடுப்பது. இப்பெட்டியிலுள்ள கட்டுப் பாடுகள் பின்வருமாறு: 1) பாடப்பெட்டி, 2) பட்டிப் பெட்டி, 3) கீழிறக்கும் பட்டிப் பெட்டி, 4) வானொலிப் பொத்தான், 5)சரிபார்ப்புப் பெட்டி, 6)பொத்தான், 7)தந்தி, 8)நழுவி.

**Dibit -a pair of binary digits -ஓரிணை இரும எண்கள்**.

**Dictionary -a table establishing the correspondence between specific words and their code representation. அகராதி** :இது ஓர் அட்ட வணை, குறிப்பிட்ட சொற்களுக்கும் அவற்றின் குறிமுறை குறிபாட்டிற்கும் இடையே தொடர்பை ஏற்படுத்துவது.

**Digit -any of the ten numbers 0 to 9.the binary number system uses the digits 1 and 0. இலக்கம்** :0-9 வரை உள்ள எண்களில் ஒன்று. 1,0 என்னும் இலக்கங்களை இரும எண் முறை பயன்படுத்துகிறது.

**Digital cash -இலக்கவழிப்பணம்** :பா. E-cash

**Digital computer -a device using digital circuits (e.g. Gates and computers to process data. இலக்கக் கணிப்பொறி**:இலக்க மின்சுற்றுகளைத் (வாயில்கள், எண்ணிகள்) தகவலை முறையாக்கப் பயன்படுத்தும் கருவியமைப்பு.

**Digital data -data stored electromagnetically in the form of discrete digits. இலக்கத் தகவல்**:தனித்தனி இலக்க வடிவில் மின்னணு முறையில் சேமிக்கப்படும் தகவல்.

**Digital personality -இலக்க ஆளுமை**

**Digital recording -a technique used for recording information as discrete points on magnetic recovering media. Eg. Magnetic tape or disks.** இலக்கவழிப் பதிவு **: காந்தப்பதிவு ஊடகங்களில்**

**தனித்தனிப் புள்ளிகளாகத் தகவலைப் பதிவு செய்யப் பயன்படும் நுட்பம்.**

**Digital signal -an electronic signal got by converting an analogue signal into a series of separate voltages representing binary ones and zeros. இலக்கக் குறிகை** : மின்னணுக் குறிகை. ஒப்புமைக் குறிகையைத் தனித்தனித் தொடர் மின் னழுத்தங்களாக மாற்றிப் பெறுவது இது. இவ்வெழுத்துக்கள் இரும எண் 1, 0 யைக் குறிக்கும்.

**Digital subscriber line, dsl -a modern technology achieving substantial speed increasing over conventional lines.the operation may be symmetric or asymmetric. இலக்க உறுப்பினர் வழி, டிஎஸ்எல்** :பழைய முறை வழி களைவிடக் குறிப்பிடத்தக்க விரைவைப் பெறும் இக்காலத் தொழில்நுட்பம். இயக்கம் சமச்சீர் உள்ளதாகவோ சமச் சீர் அற்றதாகவோ இருக்கும்.

**Digitizer-a device to convert analog measurement,such as drawing into digital form to be used for input into a digital computer.இலக்கமாக்கி**: வரைபடம் முதலியவற்றை ஒப்புமை அளவீடுகளிலிருந்து இலக்க வடிவத்தில் மாற்றும் கருவியமைப்பு. இலக்கக் கணிப்பொறியில் இது உட்பலனை உண்டாக்கப் பயன்படுவது.

**Digit time - the time interval corresponding to a specific digit signal in a series. இலக்க நேரம்** :ஒரு வரிசையில் குறிப்பிட்ட இலக்கக் குறி கையோடு தொடர்புள்ள கால இடைவெளி.

**Dimensioning variables -மாறிகளைப் பருமனாக்கல்** :ஒரு நிகழ்நிரலில் ஒரு மாறியைப் பருமனாக்கும் கூற்றைப் பயன்படுத்த வேண்டும் ஒரு மாறியை அறுதியிடப் பயனாளி விரும்புகிறார் என்பதை இக்கூற்று கணிப்பொறிக்குத் தெரிவிக்கும். புதிய மாறியின் தகவல் வகை, பெயர் ஆகிய வற்றையும் இது சுட்டிக்காட்டும்.

**Direct access-fast method of finding data in a storage medium. Eg. Magnetic disk, ram.நேர் அணுக்கம்** :ஒரு சேமிப்பு ஊடகத்தில் தகவலைக் காணும் விரைவு முறை எ-டு காந்த வட்டு, ram

**Direct access memory - random access memory நேரடி அணுக்க நினைவகம்**:வரம்பில் அணுக்க நினைவகம்.

**Direct address -any address specifying the location of an operand நேர்முகவரி** :ஓர் செயலிடத்தைக் காணும் முகவரி.

**Direct memory access, dma-a facility of some computers allowing data to be transferred direct into memory without using a programme under the control of the microprocessor. This is of special value in high speed memory system. Eg. Disk storage. நேர் நினைவக அணுக்கம், டிஎம்ஏ**: சில கணிப் பொறிகளிலுள்ள வசதி. நுண்முறையாக்கியின் கட்டுப்பாட்டிலுள்ள ஒரு நிகழ்நிரலைப் பயன்படுத் தாமல், தகவலை நேரடியாக நினைவகத்திற்கு அனுப்புதல். உயர்விரைவு நினைவக முறை யில் இது சிறப்புள்ளது. எ-டு வட்டுச் சேமிப்பு.

**Director -an integral part of an operating system having direct control of internal resources of the computer.**

இயக்கி: **ஓர் இயக்கும் அமைப்பின் இன்றியமையாப் பகுதி. கணிப்பொறியின் உள் மூலங்களோடு நேரடி கட்டுப் பாடு உடையது.**

**Directory -list of files on a computer storage medium for user's easy reference. Also known as catalogue. கோப்படைவு** :கணிப்பொறிச் சேமிப்பு ஊடகத்திலுள்ள கோப்புகளின் பட்டியல். வேறு பெயர் பட்டியல்.

**Disk -a rotating circular plate having a magnetizable surface to store data. வட்டு** :உருளும் வட்டத் தட்டு. தகவல்கலைச் சேமிக்கக் காந்த மேற்பரப்புண்டு.

**Disk drive -a device to rotate magnetic disk and access its data by means of a read/write head. வட்டு இயக்கி** : படிக்கும்/எழுதும் தலையினால் காந்த வட்டை உருட்டித்த தகவலை அணுக்கம் கொள்ளுமாறு செய்யும் கருவியமைப்பு.

**Disk operating system,dos -an operating system using disk for its secondary storage medium. வட்டு இயக்கு அமைப்பு, வஇஅ, டிஓஸ்**: வட்டு தன் இரண்டாம் நிலைச் சேமிப்புக்காக வட்டைப் பயன்படுத்தும் இயக்கு அமைப்பு.

**Disk storage -an external computer storage device. வட்டுச் சேமிப்பு**: கணிப் பொறியின் புறத்தே உள்ள சேமிப்புக் கருவியமைப்பு.

**Display -an output device: e.g screen. -காட்சிக் கருவி** : வெளிப்பலன் கருவியமைப்பு. எ-டு திரை.

**Displaying control -an interface unit used to connect a number of visual display units to a central processor. காட்சிக் கட்டுப்பாடு** :இடை

முக அலகு. மைய முறையாக்கியுடன் பல காட்சிக் கருவிகளையும் இணைக்கப் பயன் படுவது.

**Distributed control system -a collection of modules each with its own specific function. பகிர்வுக் கட்டுப்பாடு அமைப்பு** :அலகுத் தொகுப்பு. ஒவ்வொரு அலகும் அதற்குரிய குறிப்பிட்ட வேலையைச் செய்யும்.

**Disturbance -an undesired common signal in a control system.அலைக்கழிவு** : ஒரு கட்டுப் பாட்டுத் தொகுதியில் உள்ள தேவையற்ற பொதுக்குறிகை.

**Dithering -நிறச்சேர்க்கை**:அடுத்தடுத்துள்ள வேறுபட்ட நிறப்புள்ளிகளைச் சேர்த்துப்பயன்படுத்தல். இவை மீண்டும் வேறு ஒரு தனித்தோற்ற நிறத்தை உருவாக்கும். இது நிறக்காட்சித் திரையில் அமையும்.பா. **Colour usage.**

**Document -1) any form containing details of some transcation 2) a writtern text and charts describing the purpose,nature,usage and operation of a programme. ஆவணம்** :1) ஒரு நடவடிக்கையின் விவரங்களைக் கொண்டுள்ள படிவம். 2) எழுதிய பாடமும் படங்களும் ஒரு நிகழ்நிரலின் இயக்கம், பயன், இயல்பு, நோக்கம் ஆகிய வற்றை விளக்கல்.

**Document,adding attraction to-ஆவணத்திற்குக் கவர்ச்சி யளித்தல்** : 1) நிறம், 2) படம், 3) கரை.

**Documentation -a set of instructions supplied with a computer explaining how to operate the computer. ஆவணமாக்கல்** : ஒரு கணிப் பொறிக்கு அளிக்கப்பட்ட கட்டளைக் குறிப்புகள் தொகுதி. இது கணிப்பொறியை இயக்குவது எவ்வாறு என்பதை விளக்குவது.

**Document, features of -ஆவணச் சிறப்பியல்புகள்**:1) வண்ணமிடல், 2) படம் சேர்த்தல், 3) பாடஇயைபு, 4 ஆவணங்களை இணைத்தல்.

**Document file -ஆவண்க்கோப்பு**:பயன்பாட்டு அடிப்படையில் பயனாளியால் உருவாக்கப்படுவது.

**Domain name -புலப்பெயர்**: இது ஒரு குறிசீட்டு. இணையத்தில் ஒரு கணிப்பொறியை இனங்காண உருவாக்கப்பட்டது.

**Domain name system -புலப்பெயர்முறை**: கணிப்பொறிகளைப் பெயரிடும் சீட்டுகளை ஐபி எண்களோடு இயைபு படுத்த அமைந்த படிநிலை வரிசையே இப்பெயர்.

**Domain-tip memory, dot -the computer memory in which presence or absence of a magnetic domain in a localised region of a thin magnetic film designates** 1 or 0.otherwise known as magnetic domain memory. புலமுனை நினைவகம், டிஓடி: **இது கணிப்பொறி நினைவகம். இதில் ஒரு மெல்லிய காந்தப் படலத்தின் பகுதியில் காந்தப்புலம் இருப்பதும் இல்லாததும் 1, 0 என்பவற்றைச் குறிக்கும். வேறுபெயர் காந்தப்புல நினைவகம்.**

**Dot matrix printer -a printer using a printhead. This head forms the shape of characters as a matrix of small dots. புள்ளி அணி அச்சியற்றி**: அச்சுத்தலையைப் பயன் படுத்தும் அச்சியற்றி. சிறு புள்ளிகள் கொண்ட ஓர் அணியாக் இத்தலை உருக்கள் வடிவங்களைத் தோற்றுவிக்கும்

**Dot matrix printer,description of -புள்ளி அணி அச்சியற்றி விளக்கம்**: இதில் அச்சிடப்படவேண்டிய குறியுரு திட்டமான புள்ளிகளாக இருக்கும். அச்சுத்தலையில் பல வரிசை நுண் ஊசிகள் இருக்கும். அச்சிடப்பட வேண்டிய உருக்கள் நினைவகத்திலிருந்து ஒரு சமயம் ஓர் உரு நினை வகத்திலிருந்து அச்சியற்றிக்கு அனுப்பப்படும். அச்சியற்றி மின்னணுப் பகுதிகளால் உருக்குறிமுறை விளக்கப்பட்டு, அவை ஓர் அச்சுத் தலையிலுள்ள உரிய ஊசிகளால் இயக்கப்படும். இவ்வச்சியற்றிகளில் பல இரு திசையுள்ளவை. இட வலமாகவும் வலம் இடமாகவும் அச்சி யற்றுபவை. இச்செயல் அச்சு விரைவை உயர்த்தும். ஒரு வினாடிக்கு 300 உருக்கள் வரை அச்சியற்றப்படும். அச்சியற்றிகளில் சிறந்தது லேசர் அச்சியற்றி ஆகும். ஓ. Inkjet printer,laser printer.

**Download -to transfer programmes or data files from a computer to another computer. சுமை இறக்கல்** : ஒரு கணிப் பொறியிலிருந்து மற்றொரு கணிப்பொறிக்கு நிகழ்நிரல்கள் அல்லது தகவல் கோப்புகளை மாற்றுதல். இணையத்தில் பயன்படுவது.

**Down time -the time during which a computer is not functioning due to mechanical failure. இறக்க நேரம்** :எந்திரத் தவறினால் ஒரு கணிப்பொறி இயங்காமல் இருக்கும் நேரம்.

**Dram,dynamic random access memory- இயக்க வரம்பில் அணுக்க நினைவகம், இவஅதி** : திட்ட மாண கணிப்பொறி நினைவகம்,

பிரிட்டிஷ் அறிவியலார் உருவாக்கியுள்ளது. இது ஒவ்வொரு இருமித் (0, 1) தகவ லையும் ஒரு சேம நுண்ணறையில் சேமிப்பது. மின் தேக்கி, படிகப்பெருக்கி ஆகிய இரண்டால் ஆனது. 5ஆம் தலைமுறைக் கணிப்பொறிகளில் அமைவதற்குத் தகுதி பெற்றது. பெருங் கண்டுபிடிப்பு (1999) ஓ. Pledm.

**Drive-any device transporting some recording medium:eg.disk drive.- இயக்கி**: ஒரு பதிவு ஊடகத்தைச் செலுத்தும் கருவி யமைப்பு. எ-டு வட்டு இயக்கி.

**Drop -a remote terminal located within a terminal. வீழ்வி** :தொலை முனை; முனைய வலையமைவில் அமைந்திருப்பது. **Drop-down combo box -a kind of combo box.we can create it by adding a combo box to the form. கீழிறங்கு கூடுகைப் பெட்டி** : ஒருவகைக் கூடுகைப் பெட்டி இப்பெட்டியைப் படிவத்தில் சேர்த்து இதை நாம் உரு வாக்கலாம்.

**Drop-down list -combo box a kind of combo box. We can not add entries to the list we can create it by adding a combo box to the form. கீழிறங்கு பட்டி கூடுகைப் பெட்டி** :ஒருவகைக் கூடுகைப் பெட்டி. பட்டியுடன் பதிவு களைச் சேர்க்க முடியாது நாம் படிவத்துடன் கூடுகைப் பெட்டியைக் சேர்த்து உருவாக்கலாம்.

**Dróp-in -the accidental generation of unwanted bits during reading from or writing to a magnetic storage device. வீழ்தல்** :ஒரு காந்தச் சேமிப் புக் கருவியமைப்பை எழுதும் பொழுது அல்லது படிக்கும் பொழுது தேவையில்லா இருமிகள் (பிட்டுகள்) தற்செயலாக உண்டாதல்.

**Drop-out-a failure during reading or writing to a magnetic storage device.** A loss of digits takes place. நீங்கல் **: இது ஒரு தவறு. இது ஒரு காந்தச் சேமிப்புக் கருவியமைப்பைப் படிக்கும் பொழுது அல்லது எழுதும் பொழுது உண்டாவது, இதில் இரும எண்கள் இழப்பு ஏற்படும்.**

**Drop-out error -loss of a recorded list due to some reason.நீங்கு பிழை**: ஏதோ ஒருகாரணம் பற்றிப் பதிவானஇருமி இல்லாமல் போதல்.

**Drum - a computer storage device.உருளை**: கணிப்பொறிச் சேமிப்புக் கருவியமைப்பு.

**Dry running -the checking, the logic and coding of a programme from a flow-chart and written instructions, வெற்றோட்டம்**: விதிமுறைப்

படம், எழுதிய ஆணைக்குறிப்புகள் ஆகியவற்றிலிருந்து ஒரு நிகழ்நிரலைச் சரிபார்த்தலும் முறைமையாக்கலும் குறிமைப்படுத்தலும்.

**Dsl, digital subscriber line - இலக்க உறுப்பினர்வழி, இஉவ**: இக்காலத் தொழில்நுட்பம். குறிப்பிடத்தக்க விரைவு உண்டு. இலக்கத் தக வல்களை வசதியான தொகுதிகளாக மாற்றி இதைப் பெறலாம். இதற்கு இருபண்பி நுட்பம் **(modem technology)** பயன்படுகிறது.

**Dsl, kinds of -டிஎஸ்எல் லின் வகைகள்**: இருவகை; 1) சமச்சீரற்ற இலக்க உறுப்பினர்

வழி (asymmetric dsl) ; இது ஒரு திசையில் மட்டும் விரைவாகச் செல்லக் கூடியது. 2 சமச்சீருள்ள இலக்க உறுப்பினர் வழி (symmetric dsl)இது இருதிசையில் எ-டு hdsl. இதற்கு ஈரிணைக் கம்பி வடங்கள் தேவை.

**Dual disk drive -a floppy disk system with two drive mechanisms for increased capacity. இரட்டை வட்டு இயக்கி**: அதிக கொள்திறனுக்காக இரு இயக்கு பொறி நுட்பங்களைக் கொண்ட நெகிழ்வட்டுத் தொகுதி.

**Dummy -a device kept readyfor use. மாற்று** : பயன்படுவதற்கு ஆயத் தமாக உள்ள கருவியமைப்பு.

**Dummy instruction -an artificial instruction included in a list to serve some purpose other than execution as an instruction. மாற்று ஆணைக் கட்டளைக் குறிப்பு** : ஒரு பட்டியில் சேர்க்கப்படும் செயற்கைக் கட்ட ளைக் குறிப்பு. நிறை வேற்றும் செயலாக இல்லாமல் வேறு ஒரு நோக்கத்திற்காகப் பயன் படுவது.

**Dump -to display,print or store the contents of the computer's memory. திணி** : கணிப்பொறி நினைவகத்தில் சேமித்தல், அச்சியற்றல், காட்டுதல் ஆகிய செயல்கள் இதில் அடங்கும்.

**Duplex-a method of communicating between two devices which permit data transfer in both directions simultaneously. இருபகுதிச்செயற்பாடு** : இரு கருவியமைப்புகளுக்கிடையே தகவல் தொடர்பு கொள்ளும் முறை. இதனால் தகவல் மாறுகை ஒரே சமயம் இருதிசைகளிலும் நடைபெறும்.

**Duplicate field -a series of 12 punches in a programme card.** இரட்டிப்புப்புலம் : **ஒரு நிகழ் நிரல் அட்டையில் 12 பொத்தல்கள் வரிசையாக இருத்தல்.**

**Dynamic error -an error incurred in an analog device.it results from an inadequate frequency response of the equipment. இயக்கப் பிழை**: ஓர் ஒப்புமைக் கருவியமைப்பில் ஏற்படும் பிழை. கருவித் தொகுதியின் நிகழ்வு போதாத் தூண்டலினால் ஏற்படுவது.

**Dynamic storage -computer storage having capacitively charged circuit elements.the elements should be continually refreshed or recharged at regular intervals.இயக்கச் சேமிப்பு**: கொள்திறன் மின்சுற்றுக் கூறுகள் கொண்ட கணிப்பொறிச் சேமிப்பு. இக்கூறுகள் தொடர்ச்சியாக ஒழுங்கான இடைவேளைகளில் மீள் மின்னேற்றம் செய்யப்பட வேண்டும்.

**Dynaturtle** - the dynamic cursor used to produce graphics. **இயக்க ஆமை :** வரைகலையை உண்டாக்கப் பயன்படும் இயக்கக் குறிப்பி.

**E**

**Eam**, electrical accounting machines - **ஈஏஎம் :** மின் கணக்கிடும் எந்திரங்கள்.

**Earom**, electrically alterable read only memory
- **ஈரோம் :** படிப்பதற்குரிய மின்மாற்று நினைவக வகை. தனிமின் சுற்றுகளைக் கொண்டு எப்பொழுதும் இதற்குத் தகவல் எழுத இயலும்.

**Ebam - ஈபம் :** மின்னணுக் கற்றை நினைவகம்.

**Ebcdic - எப்க்டிக் :** தகவல் தொடர்புக் குறிமுறை. இதில் 256 தனித்த உருக்குறிமுறைகளை உண்டாக்க 8 தகவல் இருமிகள் பயன்படுகின்றன.

**Ebr - ஈபிஆர் :** மின்னணுக்கற்றைப் பதிவு.

**E-business, e-biz - மின் தொழில் :** மின் வணிகம். இணையத்தின் நன்மைகளில் ஒன்று.

**E-cash - மின்பணம்:** எண்பணம் அவ்வளவு எளிதில் நடைமுறைக்கு வருவதற்கில்லை. பல சிக்கல்களை எழுப்புவது. வங்கி வல்லுநர்கள், பொறியியல் வல்லுநர்கள் ஆகியோரின் அறிவுரைகளை ஏற்றே, இதற்குச் சட்ட ஒப்புதல் அளிக்க

வேண்டும். சிக்கல் முதன்மையாக கருதவேண்டுவது மோசடி. குறிப்பாக அன்னியச் செலாவணி. பா. Internet.

**Echo - எதிரொலி** : செலுத்திய குறிகை மீண்டும் மூலத்திற்கு வருதல். இதிலுள்ள தாமதம் இது ஒரு மறிப்பு என்பதைக் காட்டும்.

**Echo check - எதிரொலிச் சரிபார்ப்பு** : செலுத்துகையின் துல்லியத்தைச் சரிபார்க்கும் முறை. இதில் ஒப்பிட்டுப் பார்ப்பதற்காக அதன் மூலத்திற்கே தகவல் திருப்பி அனுப்பப்படும். திரையிலிருந்து இது முதலில் பெறுவிக்குச் சென்று பின் மீண்டும் திரைக்கு வரும். இதனால் துல்லியம் சரி பார்க்கப்படுகிறது.

**Echoplex technique - எதிரொலிப்பகுதி நுட்பம்** : இந்நுணுக்கம் முழு இருபகுதி கம்பிகள் கொண்ட தகவல் தொடர்பு அமைப்பிலுள்ள பிழைகளைக் கண்டறியப் பயன்படுவது. விசைப் பலகையில் ஓர் உரு, தட்டச்சு செய்யப்படும் பொழுது, அது குறி கையாக மாறிப் பெறுவிக்குச் செல்கிறது. பின் மீண்டும் காட்சிமுனையை அடைகிறது. இதனால் தட்டச்சு செய்யப்பட்ட உரு திரையில் தெரியும் பொழுது, அது அதே போல் உள்ளதா இல்லையா என்று சரிபார்க்கலாம்.

**ecl**, emitter coupled logic - **ஈசிஎல் :** உமிழ்வி இணைந்த முறைமை,

**e-commerce - மின்வணிகம்** : இதைக் கல் காரை வாங்குதல் என்று வேடிக்கையாகக் கூறலாம். கணிப்பொறி வழி வடிவமைப்பு இதன் அடிப்படை மின்னணு ஊடகம் மூலம் ஒரு கணிப்பொறியிலிருந்து மற்றொரு கணிப்பொறிக்கு இடையே நடைபெறும் வணிக நடவடிக்கை. தவிர, இதில் பல தொழில் நுட்பங்களும் அடங்கும். இது 1995-இல் தொடங்கியது. ஐந்தாண்டு வரலாறு கொண்டது. இதைப் பின்வருமாறு வகைப்படுத்தலாம்.

**1) மின்னணுச் செய்தி:** மின்னஞ்சல், குரலஞ்சல்.

**2) வலையத் தொழில் நுட்பம்:** இதில் இணையம் அக இணையம், புற இணையம் என இரு வகை.

**3) செய்தித் தொடர்பு ஊடகங்கள்:** முகப்புக் குரல், ஒப்படைப்பு வழி, isdn.

**4) மின் ஆவணங்கள்:** edi, eft.

**e-commerce course - மின் வணிகப் படிப்பு :** மின் வணிகம் என்பது மிகப் புதிய தொழில் நுட்பம். விரைந்து வளர்ந்து வருவது. தனியார் கணிப்பொறி நிறுவனங்கள் ஒரு தனிப் படிப்பாகப் பாடத் திட்டம் அமைத்துச் செயற்படுத்தி வருகின்றன. அப்பாடத் திட்டத்தின் உள்ளடக்கங்களாவன:

1. மின்வணிகக் கருத்துகளும், பயிற்சிகளும்.

2. நிகழ்நிரல் அணுகுமுறைகளும், நுட்பங்களும்.

3. தகவல் தள வடிவமைப்பைச் செயற்படுத்தல் இதற்கு மைக்ரோசாஃப்ட் எஸ்குயூஎல் பணியாளி 7.0ஐப் பயன்படுத்தல்.

4. யூஎம்எல்.

5. மைக்ரோசாஃப்ட் முன் பக்கம்.

6. ஜாவா நிகழ்நிரலாக்கம்.

7. எச்டிஎம்எல் நிகழ்நிரலாக்கல் எச்டிடிபி 11.

8. வி.பி எழுத்து, ஜாவா படி எழுத்து ஆகியவற்றைப் பயன்படுத்தி, படி எழுதுதல்.

9. டிஎச்டிஎம்எல்.

10. ஏஎஸ்பி, வினையுறு பணியாளிப் பக்கங்கள்.

11. எச்எம்எல், விரிகுறி மொழிகள்.

12. ஐஐஎசில் இடையப் (வெப்) பக்கங்களை ஒம்புதல்.

13. டபுள்யூஎம்எல்.

14. டபுள்யூஎம்எல் எழுத்துப் படிகள்.

15. மேம்படுத்திகள்.

16. விஷூவல் பேசிக்கைப் (6.0) பயன்படுத்தி காம் பகுதிகள்.

17. மைக்ரோசாஃப்ட் நடவடிக்கைப் பணியாளி.

18. ஜாவா மொழியைப் பயன்படுத்தி இணைக்கப்பட்ட கருவியமைப்புகளுக்கு நிகழ் நிரலாக்கம் செய்தல்.

19. விஷூவல் இண்டர்டெவ்வைப் பயன்படுத்தி, இணையத்தளங்களை (வெப்சைட்டுகள்) உருவாக்கல்.

20. சைட்சர்வர் 3.0 வணிகப் பதிப்பைப் பயன்படுத்தி, நுகர்வோர் இணையத்தளங்களுக்குரிய தொழிலை அமைத்தல்.

21. சைட்சர்வர் 3.0 வணிகப் பதிப்பைப் பயன்படுத்தி வணிக இணையத்தளத்தை அமைத்தல்.

22. செயற்படுத்தும் திட்டம்.

**e com ecosystem - மின் வணிகச் சூழல்**
**அமைப்பு :** தொழில்துறை விளையாட்டாளர்கள் உள்ள பன்முகச் சமூகம். திறந்தவெளிக் கணிப்பொறிச் சூழலில் பணியாற்றுபவர்கள் பயன்கள் பலவற்றைப் பயனாளிகள் பெற உதவுபவர்கள்.

**edi** - electronic data change. **ஈடிஐ :** மின்னணுத் தகவல் மாற்றம், மிதமா.

**edit** - to arrange data into the format required for later processing.
**பதிப்பி :** பின்பு முறையாக்கலுக்கு வேண்டிய தகவல்களை ஒரு படிவமைப்பில் இருக்குமாறு ஒழுங்கு செய்தல்.

**editing functions - பதிப்பு வேலைகள் :** இவை பின் வருமாறு:

1. தேவையில்லாத தகவல்களை நீக்கல்.

2. புலங்களை எந்திரப் படிவமைப்புக்கு மாற்றல்.

3. பின் பயன்களுக்கு வேண்டிய தகவல்களைத் தயாரித்தல்

4. படி எடுத்தல்.

5. வெட்டல்.

6. ஒட்டல்.

7. மாற்றீடு செய்தல்.

**editor** - a computer programme used to keep preparing a text or data for entry into a computer. It may be to retrieve and rearrange data previously stored in a file.
**பதிப்பிப்பி** : இது ஒரு கணிப்பொறி நிகழ்ச்சிநிரல். கணிப்பொறியில் செலுத்துவதற்குரிய பாடம் அல்லது தகவலை

ஆயத்தம் செய்ய உதவுவது. ஒரு கோப்பில் முன்னரே சேமித்த தகவல்களை மீட்கவும் மீண்டும் ஒழுங்கு செய்யவும் உதவுவது.

**Edp, electronic data processing - ஈடிபி** : மின்னணுத் தகவல் முறையாக்கல்.

**Eds, exchangeable disk storage - ஈடிஎஸ்** : மாற்றக் கூடிய தட்டுச் சேமகம்.

**Edvac- எட்வாக்** : இதை வான் நியூமன் என்னும் கணித அறிஞர் 1945இல் புனைந்தார். நிகழ்நிரல் சேமிக்கப்பட்ட முதல் கணிப்பொறி இதுவே. ஆகவே, சிறப்புள்ளது.

**E-education - மின்கல்வி** : கல்வி கற்க உதவும் தொழில்நுட்ப முறை. இது பலவகைப் படிப்புகளின் கற்றல் முறையைக் கணிசமாக மாற்றும். கற்பவர்கள் பயனுள்ள தகவல்களை விரைவாக விரும்பியவாறு பெறுவது.

**Eeprom - ஈப்ரம்** : இது படிப்பதற்கு மட்டுமுள்ள நினைவகம். இதில் நிகழ் நிரலை எளிதில் மின்முறையில் அழிக்கலாம்.

**Effective address** - an address actually used by the computer for executing an instruction.
**பயனுறுமுகவரி** : ஒரு கட்டளைக் குறிப்பை நிறைவேற்றக் கணிப்பொறி பயன்படுத்துவது.

**க.6. Effective instruction** - the instruction carried out as a result of altering a basic instruction during programme modification.
**பயனுறு கட்டளைக் குறிப்பு** : நிகழ்நிரல் மாற்றத்தின் பொழுது அடிப்படைக் கட்டளைக் குறிப்பை மாற்றுவதால் உண்டாவது.

**Effective memory address** - the memory address computed by information provided in a programme instruction.
**பயனுறு நினைவக முகவரி:** ஒரு நிகழ்நிரல் கட்டளைக் குறிப்பில் அளிக்கப்பட்ட செய்தியினைக் கணிக்கப்படுவது இது.

**Effective time - பயனுறு நேரம்** : கணிப்பொறி இயங்கும் பொழுது, அதைப் பயனுள்ள வேலைக்குப் பயன்படுத்தும் நேரம். இதன் விளைவுகள்: 1. ஆக்கநேரம். 2. நிகழ்நிரல் வளர்ச்சிக் காலம். 3. விளக்க நேரம். 4. பயிற்சி.

**Ega**, enhanced graphic adaptor **ஈஜிஏ** : உயர்வாக்கிய வரைகலை ஏற்பி. தனியாள் கணிப்பொறியில் கூடுதலாக உள்ள நினைவகம்.

**Ego-surfacing - தன்னைத் தேடல்:** ஒருவர் தன் பெயரை இணையத்தில் தேடுதல்.

**E-governance - மின்னாட்சி :** அன்றாட அரசியல் அலுவலில் சான்றிதழ் வழங்கல், வரிகட்டல் முதலியவை எளிதாகவும் நம்பகமாகவும் விரைவாகவும் நடைபெற உதவுவது. பலருக்கு வேலை அளிக்கலாம். அரசு அலுவலகங்களில் அறிமுகப்படுத்தபட்டுள்ளது. குறிப்பாகத் தமிழ்நாடு அரசு தற்போது 50 தாலுக்காக்களில் இதை நடைமுறைப்படுத்தியுள்ளது. 2001-க்குள் 156 தாலுக்காக்களுக்கு இது விரிவுபடுத்தப்படும்.

**E-health - மின்னலம் :** மருத்துவர்களுடன் தொடர்பு கொண்டு உடல்நலம் பேணல்.

**Eight bit - எண்மி :** சொல் அளவு எட்டு துண்மிகளைக் கொண்டது. பா. **Bit.**

**Elapsed time** - the total apparent time taken by a process as measured by the time between the apparent beginning and the apparent end of the process.
**கழிநேரம் :** ஒரு செயலினால் எடுத்துக் கொள்ளப்படும் மொத்தத் தோற்ற நேரம். செயலின் தோற்றத் தொடக்கத்திற்கும் தோற்ற முடிவிற்கும் இடையே நிகழும் நேரத்தால் அளக்கப்படுவது.

**Electron beam memory** - the memory using a high resolution electron beam to store information. **மின்னணுக்கற்றை நினைவகம் :**

செய்தியை சேமிக்க உயர் பகுப்பு மின்னணுக்கற்றையை நினைவகம் பயன்படுத்தல்.

**Electronic bulletin board** - an electronic call-up service helping users compose and store messages to be retrieved by other users. - **மின்னணுத் தகவல் பலகை :** மின்னணு அழைப்புப் பணி. ஏனைய பயனாளிகள் மீட்பதற்காகச் செய்திகளைத் தட்டச்சு செய்யவும், சேமிக்கவும் பிற பயனாளிகளுக்காகப் பயன்படுவது.

**Electronic data processing** - the process carried out by electronic means. - **மின்னணுத் தகவல் முறையாக்கல் :** மின்னணு முறையினால் நடைபெறும் செயல்.

**Electronic spread sheet** - a worksheet used in a computer to create and quickly analyse interrelated column reports in work spaces.

- **மின்னணு விரிதாள் :** கணிப்பொறியில் பயன்படும் வேலைத்தாள். வேலை இடங்களில் தொடர்புள்ள பத்தி அறிக்கைகளை உருவாக்கவும் பகுக்கவும் பயன்படுவது.

**Electronic spread sheet**, applications of - **மின்னணு வரிதாள் பயன்கள் :** இவை பின் வருமாறு. 1. சம்பளப் பட்டியல் தயார் செய்ய, 2. வருமானவரி கணக்கீடுகள் செய்ய, 3. பட்டியல்கள் தயார் செய்ய, 4. கணக்கு அறிக்கைகள் தயாரிக்க, 5. இருப்புப் பட்டியல் தயார் செய்ய, 6. ஆக்கச் செலவு நன்மைப் பகுப்பு, 7. நிதிக் கணக்கு தயார்செய்ய, 8. தேர்வு முடிவுகளைப் பகுத்துப் பார்க்க.

**Electronic spread sheet**, structure of - **மின்னணு விரிதாள் அமைப்பு :** இது பத்திகள், வரிசைகள் என இரு பகுதிகளைக் கொண்டது. இவை இரண்டும் சேர்வதால் நுண்ணறைகள் இடையே உருவாகின்றன. இவை பத்தி, வரிசை ஒட்டுகள் எனப்படும். இவ்வறையில் தகவல்களைத் தட்டச்சு செய்யலாம். இத்தாளின் திறன் இதுவே. இவ்வறைகள் வாய்பாடுகளைக் கொண்டிருக்கும். இவை மற்ற அறைகளிலுள்ள தகவல்களுக்குரிய சில கணிதக் கணக்கீடுகளைச் செய்யும். இக்கணக்கீட்டு முடிவுகள் ஒரு புதிய நுண்ணறையில் தோன்றும்.

**Elite - something stolen or pirated.** - திருட்டுப் பொருள், கொள்ளைப் பொருள்.

**E-magazine - மின்னிதழ் :** மின் முறையில் அச்சியற்றப்படும் பருவமலர்.

**E-mail - மின்னஞ்சல் :** உடன் செய்தித் தொடர்பிற்காக ஒவ்வொருவரும் வைத்திருப்பது. இணையத்தின் மற்றொரு பயனுள்ளதும் மிகப் பரவலாக உள்ளதுமான செயல். ஒரு வலையத்திலுள்ள கணிப்பொறியிலிருந்து அடுத்த வலையத்திலுள்ள கணிப்பொறிக்கு அனுப்பப்படுவது. இதைக் கொண்டு செய்திகள் அல்லது தகவல்களை உலகிலுள்ள எவருக்கும் உடன் அனுப்பலாம்; சில நிமிடங்களில் போய்ச் சேரும். தொலைபேசி அழைப்புகளை விட மலிவானது. எதிர்நோக்கஞ்சல் என்றும் வேடிக்கையாகக் கூறலாம்.

**E-mail address - மின்னஞ்சல் முகவரி :** அஞ்சல் முகவரியை ஒத்தது. இதில் இரு பகுதிகள் உள்ளன. **1. பயனாளியின்**

**பெயர் :** மின்னஞ்சல் முகவரியின் முதல் பகுதி. பயனாளி தன்னை அடையாளங் கண்டு கொள்ள ஒரு பெயரைத் தேர்ந்தெடுப்பது. **2. அஞ்சல் பெட்டி இடம்:** இது இரண்டாம் பகுதி பயனாளியின் பெயரை @ என்று குறியினால் பிரிக்கப்படுவது. இது அஞ்சல் பெட்டியின் இடத்தைக் காட்டுவது. ஐஎஸ்வி பெயர், நாடு முதலிய விவரங்களைக் கொண்டது. எடுத்துக் காட்டு : moorthy@giasmd01.vsnl.net.in

**E-mail**, working of.- **மின்னஞ்சல் வேலை செய்தல் :** இது அஞ்சல் பணி போன்றது. இதில் நாம் கடிதத்தை அனுப்புகிறோம், பெறுகிறோம். இதே போல, மின்னஞ்சல் மூலம் செய்திகளை அனுப்புகிறோம் அல்லது பெறுகிறோம். நம்மை அடையாளங் கண்டுகொள்ள நமக்கென்று ஓர் அஞ்சல் முகவரி உள்ளது. இதே போல, மின்னஞ்சலின் ஒவ்வொரு பயனாளியும் ஒரு தனி மின்னஞ்சல் முகவரியைக் கொண்டிருப்பர். நமக்கு மின்னஞ்சல் பணி வழங்குபவர் ஒரு முகவரியைக் கொடுப்பர். இணைய கணக்கை நாம் பெறும் பொழுது, ஒரு கடவுச் சொல்லும் அளிக்கப்படும். நமக்கு வரும் மின்னஞ்சல் முகவரி அஞ்சல்பெட்டியில் சேமித்து வைக்கப்படும். இப்பெட்டி அஞ்சல் அளிப்பி எனப்படும். கணிப்பொறியில் அமைந்திருப்பது. நாம் விரும்பும் பொழுது இதை நம் கணிப்பொறிக்கு மாற்றிப் படிக்கலாம். எழுதலாம். அஞ்சல் கடவுச்சொல் என்பது வேறு எவரும் படிக்காதவாறு பாதுகாப்பது. நமக்கு வரும் அஞ்சல், அஞ்சல் அளிப்பியில் சேமித்து வைக்கப்படும். இங்கிருந்து வலையமைவின் மூலம் செல்ல வேண்டிய இடத்திற்கு அஞ்சல் செல்லும்.

**E-manufacturing - மின் உற்பத்தி :** மின்முறையில் பொருள்கள் உருவாக்கப்படுதல்.

**E-research - மின் ஆராய்ச்சி :** இது மின் வணிகத்தின் உதவியால் நடைபெறுவது. மின்

வணிகக் கருத்துகள் இதில் பயன்படுகின்றன. தனியாக வோ குழுவாகவோ நடை பெறுவது.
**E-services - மின்பணிகள்:** வீடில்லாதவருக்கு முகவரி என்று ஒன்று இல்லை. இப் பணி இச்சிக்கலுக்குத் தீர்வு காண்பது. குரலஞ்சல் மூலம் தொலைபேசியின் வாயிலாக, இதைத் தெரிவிக்கலாம். இன்ன இடத்தில் இன்ன வேலைக் காகப் பேட்டி நடைபெறு கிறது. தொடர்பு கொள்ளலாம் என்று

செய்தி தெரிவிக்கலாம். இதைக் கொண்டு முகவரி இல்லாத வரிகள் இப்பேட்டி யில் கலந்து கொள்ளலாம்.

**E-text book - மின்பாடநூல்:** மின்முறையில் உருவாக்கப்

**Emitter - a device in a punched card generating signal to simulate the presence of holes not actually punched. உமிழ்வி** : பொத்த அட்டையிலுள்ள கருவியமைப்பு. இது உண்டாக்கும் குறிகை உண் மையில் பொத்தல் இடப் படாத துளைகள் இருப்பதைப் பகர்ப்பு செய்யும்.

**Emitter-coupled logic - a form of electronic logic - உமிழ்வி இணைந்த முறைமை** : ஒரு வகை மின்னணு முறைமை.

**Emitter pulse - உமிழ்வி துடிப்பு** : ஓர் அட்டையின் பத்திகளிலுள்ள குறிப்பிட்ட நெடுவரிசை

**Ems, expanded memory specification - ஈஎம்எஸ், விரிவாக்கிய நினைவகச் சுட்டு** : தனியாள் கணிப்பொறியில் கூடுதலாக உள்ள நினைவகம்.

**Emulation - the process of using a computer to operate a data produced for a different computer type.**
**மேம்படுத்தல்:** வேறுபட்ட வகைக் கணிப்பொறிக்காக உண்டாக்கப்படும் தகவல்களை கணிப்பொறியை இயக்கப் பயன்படுத்தும் முறை.

**Emulator software - மேம்படுத்தும் மென்பொருள்** : முத லில் ஒரு கணிப்பொறித் தொகு திக்காக எழுதப்பட்ட நிகழ் நிரல்களை, வேறு ஒரு கணிப் பொறியில் இயக்கப் பயன்படும் மென்பொருள்.

**Enable - to authorise an activity perhaps to be suppressed to write on a tape. இயலச்செய்** : ஒருசொல் ஒடுக் கப்பட வேண்டிய செயலை நாடாவில் எழுதப் பயன் படுத்தல்.

**Encode - to represent data in digital form as a series of impulses denoting characters or symbols. It helps automatic processing.**
**குறிபாட்டில் அடக்கு** : உருக் களாக அல்லது குறியீடுகளாக உள்ளவற்றைத் தொடர் துடிப்புகளாக இலக்க வடிவத் தில் தகவலாகக் குறித்தல். இது தானியங்கு முறையாக்கலுக்கு உதவும்.

**Encoder - a device substituting one set of symbols for another. குறிபாட்டடக்கி** : ஒரு தொகு திக் குறியீடுகளை மற்றொரு தொகுதிக் குறியீடுகளாக மாற்றீடு செய்யும் கருவியமைப்பு.

**Encryption - தகவல் மறைப்பு** : செய்திகளைக் குறிமுறையில் மறைவாக வைத்தல். ஒரு விடு விக்கும் கருவியமைப் பில்லா மல் இச்செய்தியை ஒருவர் பெற இயலாது. இதில் வல்லுநர் இராஸ் ஆண்டர்சன். கணிப் பொறிக் குற்றங்களைத் தடுக்கப் பயன்படுவது. ஒ, decryption.

**End directive - a statement in an assembly programme. It simply informs the assembler that further instructions need not be assembled or executed in the programme. முடிவானை** : ஒரு கோவை நிகழ்நிரலின் கூற்று. கட்டளை களை மேற்கொண்டு கோவைப் படுத்தவோ செயற்படுத்தவோ வேண்டாமெனக் கோவையாக் கிக்கு இது தெரிவிப்பது.

**End of file - a marker showing the end of the file. கோப்பு முடிவு** : ஒரு குறிப்பி இதைக் காட்டுவது.

**Endmark! - a code signalling that the end of an item of information has been reached. முடிவுக்குறி** : இது ஒரு குறி முறை. ஒரு செய்தி இனத்தின் முடிவு, நிறைவு பெற்றுவிட்டது என்பதைத் தெரிவிப்பது.

**Endorser - a special feature available on most magnetic ink character recognition readers. It imprints a bank endorsement on successful document reading. * eniac - ஈனியாக்:** இது முதல் இலக்கக் கணிப்பொறி, 1942-1945 வாக்கில் புனையப்பட்டது. இதன் விரிவு. **Electronic numerical integer and calculator.** மின் எண் தொலையாக்கி கணிப்பான். இது டபுள்யூ மாக்கிலி என்பவரால் புனையப் பட்டது. **மேலொப்பமிடுவி** : காந்த மை உரு அறிபடிப்பிகளில் பெரும் பாலானவற்றிலுள்ள ஒரு தனி இயல்பு. உறுதியான ஆவணப் படித்தலுக்காக இது வங்கியின் மேலொப்பத்தைப் பதிவு செய்யும்.

**Entrance - the location of a programme at which execution is to start. Otherwise known as entry point. நுழைவு:** நிறைவேற்றல் தொடங்கும் நிகழ்நிரலின் இடம் **entry - 1) the address of the first instruction in a programme to be obeyed, 2) a unit of information either input or output. பதிவு** : 1. ஒரு நிகழ்நிரலில் நடைபெற வேண்டிய முதல் கட்டளையின் முகவரி, 2. தகவல் அலகு உட்பலன் அல்லது வெளிப்பலன். வேறு பெயர் பதிவுமுனை.

**Entry instruction - the instruction obeyed when entry is first made to a routine. பதிவுக்கட்டளை :** ஓர் வழக்க மான செயலுக்கு முதலில் செய்யப்படும் பதிவு. இது கட்டளையாக நடைபெறுவது.

**Environment division - the section of a programme written in cobol defining the hardware and files to be used by the programme. சூழல் பிரிவு :** கோபல் மொழி யில் எழுதப்படும் நிகழ்நிரலின் பகுதி. நிகழ்நிரலால் பயன் படுத்தப்படும். வன்பொருளை யும் கோப்புகளையும் வரை யறை செய்வது.

**Eprom - ஈப்ரோம் :** படிப்பதற்கு மட்டும் உள்ள நினை வகம், அழிக்கக்கூடியது, நிகழ் நிரலாக்கக் கூடியது. வரம்பில் அணுக்க நினைவகத்திற்கு எதிரானது.

**Equality unit - சம அலகு :** இரு எண்களை உட்பலனாக ஏற்றுக் கொள்ளும் கருவி யமைப்பு. இவ்விரு எண்கள் சமமானால் 1 என்றும் வெளிப் பலன் குறிகையையும், சம மில்லை என்றால் 0 என்னும் குறிகையையும் காட்டும்.

**Equation solver - சமன் பாட்டுத் தீர்வி :** இது ஓர் எந்தி ரம். ஒருபடித்தான சமன்பாடு முறைகளைத் தீர்க்கப் பயன் படுவது.

**Equivalence binary digit - சமான இரும எண் :** ஒரு தொகுதிப் பண்பியல்புகளின் ஒவ்வொரு உறுப்பும் ஒரு தனி இரும எண்ணால் குறிக்கத் தேவைப்படும் இருமிகளின் எண்ணிக்கை: எ-டு 26 கூறு களைக் கொண்ட நெடுங் கணக்கின் ஒவ்வொரு எழுத் தையும் குறிக்க 5 இருமிகள் தேவை. ஏனெனில், இருமக் குறிமானத்தில் 26 என்பது 11010.

**Equivalence element - a logic element in which the relationship between two binary input signals is defined by the equivalence operation. சமான கூறு :** முறைமைக் கூறு. இதில் இரும உட்பலன் குறி கைகளுக்கிடையே உள்ள தொடர்பு சமான இயக்கத்தால் வரையறை செய்யப்படுவது.

**Equivalence operation - a boolean operation in two operands. சமான செயல் :** இரு செயலிடங்களில் நடைபெறும் பூல்செயல்.

**Erasable storage - அழிக்க கூடிய சேமகம் :** எ.டு. காந்த நாடா.

**Erase - அழி** : சீரான குறிமுறையினால் ஓர் ஊடகச் சேமிப்பிலுள்ள தகவலை மாற்றீடு செய்தல். இக்குறிமை இன்மைத் தகவல்களைக் குறிக்கும். இவை சுழிகளாகவோ எண்களாகவோ இட உருக்களைக் குறிக்கும்.

**Erase head - அழிப்புத்தலை** : நாடாப்போக்கு வரவிலுள்ள கருவியமைப்பு. புதிய தகவல்களை நாடாவில் எழுதப்படுவதற்குப் பழைய தகவல்களை நீக்கல்.

**E-revolution - மின் புரட்சி** : மின் வணிகப் புரட்சி.

**Ergonomics - பணிச் சூழியல் :** அலுவலகங்களில் வேலை செய்யும் போது மனித உடலை ஆராயும் துறை. கணிப்பொறித் துறையோடு நெருங்கிய தொடர்புடையது.

**Error - பிழை** : தவறு. எதிர்பார்க்கும் முடிவு ஏற்படாத நிலை. இப்பிழை இருவகை: 1. மென்பொருள் அல்லது நிகழ்நிரல் பிழைகள். 2. வன் பொருள் பிழைகள்.

**Error analysis - பிழை பகுப்பு** : இலக்கக் கணிப்பொறியில் ஒரு சிக்கலைத் தீர்க்கும் பொழுது அடிப்படை எண்கணிதச் செயல்கள் உள்ளன. இவற்றில் ஏற்படும் பிழைகளின் தொகு விளைவை மதிப்பிடல்.

**Error character - பிழையுரு** : தகவலிலுள்ள பிழையைக் காட்டும் உரு.

**Error correction - பிழை திருத்தம்** : இது கணிப்பொறியால் செய்யப்படுவது.

**Error message - பிழைச் செய்தி** : நிகழ்நிரலின் செய்தி வெளிப்பலன். இந்நிகழ்நிரல் பிழை வகையைக் காட்டுவது.

**Error register - பிழை பதிவகம் :** இது ஒரு தனிச் சேமிப்பிடம் பிழை ஏற்படின், இதன் தனி இருமி நிலைகள் சரியாக அமையும்.

**Escape character - விடுபடு உரு** : ஒரு குறிமுறையில் தெரிவிக்கப்படும் அடுத்தடுத்து வரும் உருக்களைக் காட்டும் ஓர் உரு. இது நடப்புநிலையிலுள்ள குறிமுறைமையிலிருந்து வேறுபடுவது.

**Escape sequence - விடுபடு வரிசை** : இதில் வினாக்குறி (?) மேற்கோள் குறி "" முதலியவை இருக்கும். **Esdi, enhanced small device interface - ஈஎஸ்டிஐ** : உயர்வாக்கிய சிறு

கருவியமைப்பு இடைமுகம். கணிப் பொறியிலுள்ள கடின இயக்கி வகை.

**Even parity check -** a parity check where the number of ones (zeros) in a group of binary digits is expected to be even. **இருமைச் சமன் கட்டுப்பாடு :** இக்கட்டுப்பாட்டில் இரும எண் தொகுதியிலுள்ள ஒன்றுகளின் (சுழிகள்) எண்ணிக்கை சமமாக இருக்கும்.

**Event -** a processing action altering data files. **நிகழ்வு :** தகவல் கோப்புகளை மாற்றும் முறையாக்கும் செயல்.

**Events, kinds of - நிகழ்வுகளின் வகைகள் :** இவை சாளர இயங்கு தொகுதியின் ஒருங்கிணைந்த பகுதிகள். அரிய பயன்பாடுகளை உருவாக்க உதவுபவை. இவை சுட்டெலி நிகழ்வுகள், அமைப்பு நிகழ்வுகள், விசைப்பலகை நிகழ்வுகள், சுமை நிகழ்வுகள், பயனாளி நிகழ்வுகள் எனப் பல வகை.

**Event triggering - நிகழ்வுகள் தூண்டல் :** விஷுவல் பேசிக் பயன்பாட்டில் இரு வேறுபட்ட விசை நிகழ்வுகள் உள்ளன. முதல்வகை பயனாளி நிகழ்வு. இதைப் பயனாளி பயன்படுத்துவார். இரண்டாம் வகை அமைப்பு நிகழ்வு. இதில் அடங்குவன: 1. நேரங்குறிப்பியின் செயல்கள். 2. தகவல் அணுக்கப் பிழைகள். 3. படிவ நிலை மாற்றங்கள். 4. கட்டுப்பாட்டு நிலை மாற்றங்கள். இந்நிகழ்வுத் தூண்டல் ஒரு நிகழ்நிரலிலுள்ள அனைத்துச் செயல்களையுங் கட்டுப்படுத்துகிறது.

**Exception principle system -** the system reporting only those results different from predesignated results. **விலக்குநெறிமுறை :** முன்னரே தெளிவாகக் குறிக்கப்பட்டுள்ள முடிவுகளிலிருந்து வேறுபட்ட முடிவுகளைத் தெரிவிக்கும் முறை.

**Exchange -** the interchange of contents between two locations. **பரிமாற்று :** இரு இடங்களுக்கிடையே உள்ளடக்கங்களை மாற்றிக் கொள்ளுதல்.

**Exchangeable disk store -** a backing store device in the device magnetic disks are loaded into a disk transport, eg. A capsule having 6 disks. **மாற்றுவட்டுச் சேமகம் :** தாங்கு சேமகக் கருவியமைப்பு. இதில் வட்டுப் போக்குவரத்துப்

பொறிநுட்பத்தில் காந்தவட்டுகள் பொருத்தப்பட்டிருக்கும். எ-டு 6 வட்டுகள் கொண்ட பொதிகை

**Exchange instruction -** an instruction found in some assembly language systems. It is used to interchange the operands of two registers, eg. The contents of x register are placed in y register. **பரிமாற்றுகட்டளை :** சில கோவை மொழியமைப்புகளில் காணப்படுவது. இரு பதிவகங்களின் செயலிடங்களை ஒன்றுக்கு மற்றொன்று மாற்றப் பயன்படுவது.

**Exchange message -** this is a device placed between a communication line and a computer. It takes care of certain communication functions to free the computer from other work. **பரிமாற்றுசெய்தி :** கணிப்பொறிக்கும் செய்தித் தொடர்பு வழிக்கும் இடையிலுள்ள கருவியமைப்பு இது. கணிப்பொறியைப் பிற வேலையிலிருந்து விடுவிக்கச் சில செய்தித் தொடர்பு வேலைகளை இது மேற்கொள்ளும்.

**Exclusive or operation -** the logical operation applicable to two operands to produce a result based on the bit patterns of the operands. **தனியன் அல்லது செயலி :** முறைமைச் செயல். இரு செயலிடங்களுக்குரியது. இவ்விடங்களின் இருமி கோலங்களுக் கேற்ப முடிவை உண்டாக்குவது.

**Execution -** carrying out one or more instructions in a computer programme. **நிறைவேற்றல் :** ஒரு கணிப்பொறி நிகழ்நிரலில் ஒன்றுக்கு மேற்பட்ட கட்டளைகளைச் செய்து முடித்தல்.

**Execution time -** the time taken by a computer to work thro a set of instructions. **நிறைவேற்றுநேரம் :** ஒரு தொகுதிக்கட்டளைகளைச் செய்து முடிக்க, ஒரு கணிப்பொறி எடுத்துக் கொள்ளும் நேரம்.

**Executive programme -** this programme consists of a number of complex routines residing wholly or partly in the main memory. Its function is to monitor and supervise certain basic control functions. **நிறைவேற்றுநிகழ்நிரல் :** இது பல சிக்கலான நடைமுறைச் செயல்களைக் கொண்டது. இவை முதன்மை நினைவகத்தில் முழுதுமாகவோ பகுதியாகவோ அமைந்திருப்பவை. சில அடிப்படைக் கட்டுப்பாட்டு வேலைகளைக் கண்காணிப்பதே இதன் வேலை.

**Exit -** the last instruction in a programme. It is generally a branch from the routine into another part of the programme.

**வெளியேற்றம் :** ஒரு நிகழ்நிரலின் இறுதிக்கட்டளை. நடைமுறைச் செயலியின் கிளை. நிகழ்நிரலின் அடுத்த பகுதிக்குச் செல்வது.

**Exit for statements -** by using this statement we can leave the for loop at any point in the process.

**வெளியேற்றுகூற்று :** இக்கூற்றைப் பயன்படுத்திச் செயலின் எந்நிலையிலும் வளையத்திற்காக என்று விட்டுவிடலாம்.

**Exponent -** a number or symbol written at the upper right of another number to show it is to be multiplied by itself a certain number of times, eg. The number $10^6$ bytes mean 1 million bytes where 6 is the exponent of 10.

**அடுக்குக்குறி :** இது ஓர் எண் அல்லது குறி. மற்றொரு எண்ணின் மேல் வலப்பக்கத்தில் எழுதப்படுவது. பல தடவைகள் அது தன்னைத் தானே பெருக்கிக் கொள்ளும் என்பது பொருள். எ-டு $10^6$ இருமிகள் என்பது 1 மில்லியன் எண்மிகள் ஆகும். இங்கு 6 என்பது 10ன் அடுக்குக்குறி.

**Exponent form - அடுக்குகுறி வடிவம்:** இது அறிவியல் கணக்கீடுகளில் பயன்படுவது. எ-டு 000000000000127. இது பின் வருமாறு எழுதப்படும் $0.127 \times 10^{-12}$.

**Extended precision arithmetic -** an operation giving an answer more accurate than double precision arithmetic.

**விரிவுத் துல்லிய எண்கணிதம்:** இரு துல்லிய எண்கணிதத்தை விட மிகத் துல்லியமான விடையைக் கொடுக்கும் செயல் இது.

**Extensible language -** a programming language. It can be modified by adding new features.

**விரிவுமொழி :** ஒரு நிகழ்நிரல் மொழி. புதிய இயல்புகளைச் சேர்த்து இதை மாற்றியமைக்க இயலும்.

**Extent -** the physical location in a mass storage device allocated for use by a particular data set.

**விரிவளவு :** ஒரு பேரளவுச் சேமக் குருவியமைப்பிலுள்ள இடங்கள். ஒரு குறிப்பிட்ட தகவல் தொகுதிப் பயன்பாட்டிற்காக ஒதுக்கப்பட்டவை.

**External logic -** the logic circuits residing outside the boundary of a central computer system, eg. Mini computer or micro computer.

**புறமுறைமை :** ஒருமைக் கணிப்பொறித் தொகுதிக்கு வெளி எல்லையில் அமையும் முறைமைச் சுற்றுகள். எ-டு சிறு கணிப்பொறி, நுண்கணிப் பொறி.

Extract - the removal of a selected part from an item of information.

பிரிபகுதி : ஒரு செய்தி இனத் திலிருந்து தெரிவு செய்த பகுதியை நீக்குதல்.

Extract instruction - பிரி பகுதிக்கட்டளை : ஒரு செய்தி இனத்தின் தெரிவு செய்த பகுதிகளை ஒரு தனிப்பட்ட இடமாக வைக்கும் கட்டளை.

E- zines in tamil - தமிழ் மின் இதழ்கள் : சிறியவையும் பெரியவையுமான தமிழ் இடையத் தளங்கள் (வெப் சைட்ஸ்) 1000 உள்ளன. தமிழ் இடைய அடைவுகள் மூன்று உள்ளன. கணியன் தமிழ்ச் செய்தி தொடங்கி நின்று விட்டது. பிற இதழ்களாவன. தமிழ்நாளிதழ், சினிமாதிரைப் படம். அருள்-ஆன்மீகம், மாணவன் மாணவன் இதழ், வெப் உலகம். இவற்றில் முதல் நான்கு சிங்கப்பூரைச் சார்ந்தது. ஐந்தாவது சென்னையில் நடத்தப் பெறுவது.

## F

Face - the side bearing the printing of a punched card like the card face.

முகம் : பொத்தலிட்ட அட்டையின் அச்சு தாங்கு பக்கம். அட்டை முகத்தைப் போன்றது.

Face attribute - முகஇயல்பு : பாடத்தை விளக்கிக் காட்டப் பயன்படும் அச்செழுத்தை இது சுட்டுவது.

Facility arrangement - the allocation of core memory and external devices by the executive as required by the programme to be executed.

வசதி ஏற்பாடு : நிறைவேற்றியினால் உள்ளக நினைவகமும் புறக்கருவியமைப்புகளும் ஒதுக்கப்படுதல். நிறைவேற்ற வேண்டிய நிகழ்நிரலுக்கு இவை தேவை.

Facsimile - a process involving the electronic transmission of images generally from one system to a remote receiving station. Images are

electronically scanned and converted into transmission signals. Later they are sent to the receiving station. The signals are then converted at the receiving station to create a duplicate of the original image.

உருநகலி : தொலைநகல். பொதுவாக, ஓர் அமைப்பிலிருந்து தொலைவிலுள்ள பெறும் நிலையத்திற்கு உருக்களின் மின்னணுக்களை செலுத்துவதை உள்ளடக்கிய முறை. உருக்கள் மின்னணு முறையில் அலகிடப்பட்டுச் செலுத்தும் குறிகைகளாக மாற்றப்படுகின்றன. பின் இவை பெறும் நிலையத்திற்கு அனுப்பப்படுகின்றன. இங்குக் குறிகைகள் முதல் உருவின் இரட்டிப்பாக மாற்றப்படுகின்றன.

**Failure logging -** the automatic recording of state of various computer systems following the detection of machine fault. **தவறு பதிதல்:** எந்திரத் தவறைக் கண்டறிந்ததும் பல கணிப்பொறித் தொகுதிகளின் நிலையைத் தானாகப் பதிவு செய்யும் நிலை.

**Fallback -** the manual or electronic system suitable for the computer system in case of breakdown. **மீட்பு :** பழுது ஏற்படும் பொழுது, கணிப்பொறித் தொகுதிக்காக மாற்றீடு செய்யப்படும் மின்னணு அல்லது கைவழித் தொகுதி.

**Fast access storage -** the section of a computer storage from which data are obtained more rapidly. **மீவிரைவுச் சேமிப்பு :** கணிப்பொறிச் சேமிப்பின் ஒரு பகுதி. இதிலிருந்து மிக விரைவாகத் தகவல்கள் பெறப்படும்.

**Fast time scale -** in simulation by an analog computer a scale in which the time duration of a simulated event is less than the actual time duration of the event in the physical system under study. **விரைவுநேர அளவுகோல் :** பகர்ப்பில் ஒப்புமைக் கணிப்பொறி அளவுகோலால் இது நடைபெறுவது. இதில் பகர்ப்பு நிகழ்வின் காலஅளவு, ஆய்விலுள்ள தொகுதியின் உண்மை நேர அளவைவிடக் குறைவாய் இருக்கும்.

**Fatal error -** an error in a computer programme causing running of the programme to be
terminated. **முடிவுப்பிழை :** கணிப்பொறியிலுள்ள பிழை நடைபெறும் நிகழ்நிரலை முடியுமாறு செய்வது.

**Fault -** any physical condition causing a component of a data processing system to fall in performance. **அறுகை :** இது ஓர் இயல்நிலை செயல்திறன் வீழ்ச்சியைத் தகவல் முறையாக்கு தொகுதியின் பகுதியில் உண்டாக்குவது.

**Fault time -** down time **அறுகை நேரம் :** கீழிறங்கு நேரம்.

**Feed -** causing data to be entered into a computer for processing. **ஊட்டம் :** முறையாக்கலுக்கு ஒரு கணிப்பொறியில் தகவலைச் செலுத்தல்.

**Feedback -** 1) the response by the system to an input 2) the use of an output to either the same or another process. **பின்னூட்டம் :** 1. ஓர் உட்பலனுக்கு ஒரு தொகுதி துலங்கல். 2. ஒரே முறை அல்லது பிற முறைக்கு வெளிப்பலனைப் பயன்படுத்தல்.

**Feed tape -** the mechanism feeding tape for reading. **ஊட்டு நாடா :** நாடாவிற்கு ஊட்டுதல் அளிக்கும் பொறிநுட்பம்.

**Femto -** one thousand million millionth, $10^{-16}$ eg. Femto chemistry. **பெம்டோ :** ஓராயிரம் மில்லியன் மில்லியனாவது, $10^{-16}$ எ-டு பெம்டோ வேதிஇயல்.

**Fetch -** retrieve data. **கொணர் :** தகவல்களை மீட்பு செய்.

**Fetch cycle -** execute cycle **கொணர்சுழற்சி :** நிறைவேற்று சுழற்சி.

**F-format -** 1) in data management a fixed length logical record format. 2) in fortran a real variable formatted as feed. Here μ is the width of the field and d represents the number of digits to appear after the decimal point. **எஃப் படிவமைப்பு :** 1. தகவல் மேலாண்மையில் நிலையான நீண்டுள்ள முறைமைப் பதிவகப் படிவமைப்பு. 2. பார்ட்ரானில் ஊட்டி என்னும் படிவமைப்புள்ள உண்மை மாறிலி. இங்கு μ என்பது புல அகலம். D என்பது பதின்மப்புள்ளிக்குப் பின் தோன்றும் இலக்கங்களின் எண்ணிக்கையைக் குறிப்பது.

**Fibre optical transmission - ஒளிஇழைச் செலுத்துகை :** தகவல்செல்லும் ஊடகம். இதன் வழியாக அகல் அலை வரிசை விரைவாகச் செல்ல இயலும்.

**Field -** an area within a record storing a particular type of data. **புலம் :** பதிவகத்திலுள்ள பகுதி. குறிப்பிட்ட வகைத் தகவலைச் சேமிப்பது.

**File -** the data structure used to facilitate input and output data using devices such as disc. **கோப்பு :** வட்டு முதலிய கருவி யமைப்புகளைப் பயன்படுத்தி உட்பலன், வெளிப்பலன் வசதி களை உண்டாக்கும் தகவல் அமைப்பு.

**Files access, types of - கோப்பு அணுக்க வகைகள் :** 1. படி 2. எழுது 3. நிறைவேற்று, **file, closing - கோப்பை மூடல் :** கோப்பு வண்ணப்பியைக் கொண்டு இதைச் செய்யலாம் எ-டு, close (fd); இங்கு fd என்பது கோப்பு வண்ணப்பியைக் குறிக்கும். இது மூட வேண்டிய கோப்போடு தொடர்புள்ளது.

**File conversion -** the process of converting data files from one format to another. Eg. Manually kept records to files created on a magnetic medium. **கோப்பு மாற்றம் :** தகவல் கோப்புகளை ஒருபடிவமைப்பிலிருந்து மற்றொரு படிவமைப்பிற்கு மாற்றுதல். எ-டு: கையால் எழுதி வைத்திருக்கும் ஆவணங்களைக் காந்த ஊடகத்தால் கோப்புகளாக உருவாக்கல்.

**File, creating - கோப்பை உருவாக்கல் :** உருவாக்கு என்னும் சார்பலனைக் கொண்டு புதிய கோப்புகளை உருவாக்கலாம். பழைய கோப்புகளைத் திரும்ப எழுதலாம். எ-டு: int fdl; fdl - create (file - name)

**File identification -** this is the code p mode; devised to identify a file. **கோப்பு அடையாளமறிதல் :** ஒரு கோப்பை அடையாளமறிய வடிவமைக்கப்படும் குறிமுறை.

**File, kinds of - கோப்பு வகைகள்** : 1. உயர்நிலைக் கோப்பு 2. தாழ்நிலைக் கோப்பு. 3. யூனிக்ஸ் கோப்பு. 4. மூலக் கோப்பு. 5. விபிபி கோப்பு. விரிவு அவ்வப்பதிவுகளில் காண்க.

**File layout -** the description of the arrangement of the data in a file. **கோப்புத்திட்ட அமைப்பு** : ஒரு கோப்பில் தகவல் அமைந்திருக்கும் முறையை விளக்கல்.

**File maintenance -** the data processing operation in which a master file is updated on the basis of one or more transaction files. **கோப்புப் பேணுகை :** இது தகவல் முறையாக்கும் நடவடிக்கை, இதில் ஒன்றுக்கு மேற்பட்ட நடவடிக்கைக் கோப்புகளின் அடிப்படையில் முதன்மைக் கோப்பை உருவாக்கல்.

**File name -** the set of alphanumeric characters used to identify and describe a file in a file label. This is a string. **கோப்புப்பெயர் :** ஒரு கோப்புக் குறியத்தில் ஒரு கோப்பை அடையாளங் காணவும் வண்ணனை செய்யவும் பயன்படும் எண்ணெழுத்து உருக்களின் தொகுதி. இது ஒரு சரம்.

**File organization -** the arrangement of files on the storage media. **கோப்பு அமைப்பு :** சேமிப்பு ஊடகங்களில் கோப்புகள் அமைந்திருத்தல்.

**File, opening - கோப்பைத் திறத்தல் :** திற என்னும் சார்பலனைக் கொண்டு இதைத் திறக்கலாம். இது கோப்பு வண்ணப்பி என்னும் முழுஎண்ணைத் திருப்பி அனுப்பும். எ-டு int fd;fd= open(file-name' rwmode);

**File processing -** the file processing involving all operations which are connected with the creation and use of files. The operations include. Creation, validation, comparing, collating, sorting and merging. **கோப்பு முறையாக்கல் :**கோப்புகளைப் பயன்படுத்த உருவாக்கப்படும் செயல்கள்: 1. உருவாக்கல் 2. செல்லுபடியாக்கல் 3. ஒப்பிடல் 4. ஒழுங்கு படுத்தல் 5. வகைப்படுத்தல் 6. இணைத்தல்.

**File properties - கோப்புப் பண்புகள் :** 1. வட்டு, நாடா முதலியவற்றில் தகவல்களைச் சேமிக்கலாம். 2. இவை எந்திரம் நின்ற பின்னும் நீடித்திருக்கும். 3. வேண்டும் பொழுது கணிப்பொறியில் போட்டுப் பார்க்கலாம்.

**File protection -** a mechanical device or computer command preventinge rasing of or writing upon a magnetic tape.this procedure allows a programme to read the data from the tape. **கோப்புப் பாதுகாப்பு :** காந்த நாடாவில் எழுதப்படுவதையோ அழிக்கப்படுவதையோ தடுக்கும் கருவியமைப்பு அல்லது கணிப்பொறிக் கட்டளை. இம்முறை நாடாவிலிருந்து தகவல்களைப் படிக்க நிகழ்நிரலை அனுமதிக்கும்.

**File reference -** the operation involving looking up and retrieving the information on file for a special item. **கோப்புப் பார்வை :** இது ஒரு செயல். இதில் ஒரு சிறப்பினத்திற்காகக் கோப்பில் தகவலைப் பார்த்தல் அல்லது மீட்டல்.

**File transfer protocol, ftp - கோப்புமாற்ற மரபுச்சீரி, எஃப்டிபி:** இரு ஒரு செயல். இதைக் கொண்டு தகவல் இறக்கம் செய்ய இயலும்.

**File structure - கோப்பு அமைப்பு :** இதில் தகவல் ஒழுங்குமுறை அடங்கும். இம்முறை புலங்கள், பதிவுருக்கள் தொகுதிகள், கோப்புகள் எனப் பல வகைகளைக் கொண்டது.

**Files, reading and writing - கோப்புகளைப் படித்தலும் எழுதலும் :** படி என்னும் சார் பலனைக் கொண்டு ஒரு கோப்பைத்

திறக்கலாம். அதே போல எழுது என்னும் சார்பலனைக் கொண்டு அதை எழுதலாம். இவ்விரண்டையும் செய்வதற்கு முன் தொடர்புடைய கோப்புக்குச் செல்லுபடியாகக் கூடிய கோப்பு வண்ணப்பி இருக்கின்றதா என்று பார்க்க வேண்டும். இதற்குத் திற, உருவாக்கு சார்பலனைப் பயன்படுத்தலாம். இவ்விரு சார்பலன்களுக்கும் மூன்று சுட்டளவுகள் தேவை. அவையாவன. 1. கோப்பு வண்ணப்பி 2. தாங்கி (சேமிப்பின் பெயர்) 3. மாற்றவேண்டி எண்மிகளின் எண்ணிக்கை.

**Files, resources -** these are special texts containing references to bit maps, text, or other data the application uses. The unique thing about these files is that they enable to change this data without recompiling the application programme. **மூலக்கோப்புகள் :** இவை தனிப்பாடங்களைக் கொண்டிருக்கும். இவற்றில் பயன்பாட்டிற்குரிய இருமப்படங்கள், பாடம் அல்லது பிற தகவல்களுக்குரிய குறிப்புதவிகள் இருக்கும். இவற்றின் தனிச்சிறப்பு இதுவே. இத்தகவலைப் பயன்பாட்டு நிகழ்நிரலை மீள் தொகுக்காமல் மாற்றலாம்.

**Filter -** a type of query to select and display records to match a certain condition. **வடிகட்டி :** ஒரு குறிப்பிட்ட நிலைக்கு இணக்கமாக இருக்குமாறு செய்யப் பதிவுருக்களைத் தெரிந்தெடுக்கவும் திரையில் காட்டவும் பயன்படும் ஒருவகை வினா அல்லது கொக்கி.

**Filter, kinds of- வடிகட்டி வகைகள் :** 1. தன்வடிகட்டி இது கருவிப்படையில் உள்ளது. பதிவுருக்களைக் கூட்ட இதைத் தட்ட வேண்டும். இவ்வுருக்கள் மின்னோட்டப் புல மதிப்பிற்கு இணையாக அமையும். 2. தவறுவடிகட்டி தவறுநிலையைச் சரி செய்யப் பயன்படுவது.

**Filter window - வடிகட்டும் சாளரம் :** ஒரு வினாவில் நிலைமைகளைச் சுட்டிக் காட்டப் பயன்படும் சாளரத்தைப் போன்ற உறுப்பு.

**Firmware - கெட்டிப்பொருள் :** படிப்பதற்கு மட்டுமுள்ள நினைவகத்தில் சேமிக்கப்படும் நிகழ்நிரல் அல்லது தகவல். மென்பொருளால் இதை மாற்ற இயலாது. மின்சாரம் நிற்கும் பொழுது இது இழப்புக்கு உள்ளவாதில்லை. பா. **Rom.**

**First in first out, fifo - முதலில் வந்தது முதலில் போதல் :** ஒரு நினைவகத்தில் செய்தியைச் சேமிக்கும் மீட்கும் முறை. முதலில் வந்த தகவல் முதலில் மீட்கப்படும். ஒ. **Last in first out**

**Fixed storage - நிலைச்சேமிப்பு :** கணிப்பொறிக் கட்டளை களால் மாற்ற இயலாத தகவல்களுக்குரிய சேமிப்பு. எ-டு காந்த வகைச் சேமிப்பு.

**Flags - கொடிகள் :** நன்கு அமைந்த வடிவம் உண்டு. இவை குறிகாட்டிகளே. எ-டு சி மொழியில் ± வெளிப்பலன்களைப் பெற இவை பயன்படுபவை. குறிப்பாக இட நிரவலுக்கும், நிறைகுறை காட்டல்களுக்கும் பயன்படுபவை.

**Flag, kinds of - கொடி வகைகள் : 1. மென்பொருள்கொடி:** ஒரு தனி நிலைமையின் நிகழ்நிரல் வட்டப் பகுதியினைத் தெரிவிக்கப் பயன்படுவது. **2. வன்பொருள்கொடி:** இது குறிப்பிடப்பட்ட நேரங்களில் சிறப்பு நிகழ்வுகள் தோன்றுமாறு செய்வது. பொதுவாகக் கொடிகள் சில நிலைமைகளைச் சரிபார்க்கப் பயன்படுபவை.

**Flash rom-** a type of read only memory. Here the contents of memory chip can be erased and rewritten thro software changes. It is very easy to update. **வீசுரோம் :** படிப்பதற்கு மட்டுமுள்ள ஒரு வகை நினைவகம். இங்கு நினைவக நறுவலின் உள்ளடக்கங்கள், பொருள் மாற்றங்கள் மூலம் அழிக்கப்படலாம்; மீண்டும் எழுதப்படலாம். இதை மேம்படுத்துவது எளிது.

**Flat-file data base - தட்டைக்கோப்புத் தகவல்தளம் :** இது ஒரு தனித்தகவல் தளம் உள்ள தகவல் தளக்கோப்பு. இது ஒரு தனிப்பயனாளிக்கோ பயனாளிகளுக்கோ பயன்படுவது. எளிமையும் வரம்பும் கொண்டது.

**Flip-flop -** a bistable circuit eg. A circuit capable of storing a bit of information and of assuming two stable states (0 and 1) as long as power is supplied. Flip-flops may be grouped together to form registers. **எழுவிழுசுற்று :** இருநிலைச் சுற்று. எ-டு மின்னாற்றல் இருக்கும் வரை இருமத் தகவலைச் சேமித்து, அதை இரு நிலைகளில் (0,1) வைக்கும் சுற்று. எழுவிழு சுற்றுகள் சேர்ந்து. பதிவகங்களைத் தோற்றுவிப்பவை.

**Floating lines - மிதவை வரிகள் :** கணிப்பொறியில் இரு போடு நிலைகள் ஒன்றில் இருக்கும் குறிகைகள். எ-டு உயர் மின்னழுத்தம் = +5v, குறை மின்ன ழுத்தம் = +1v.

**Floating point number - மிதவைப்புள்ளி எண்** : மிதவைப்புள்ளி குறியிடலால் தெரிவிக் கப்படும் எண்.

**Floating point representation - மிதவைப்புள்ளி குறியிடல்** : இது ஒரு குறிமான முறை. இதில் தசமப் புள்ளி பொருத்தப்படுவதில்லை. கணிப்பொறி யில் இந்த எண்களைக் குறிப்பிடும் பொழுது, குறி இரு பகுதிகளைக் கொண்டிருக்கும். எண்ணின் பின்னப் பகுதியை ஒரு பகுதி கொண்டிருக்கும். அடுத்த பகுதி எண்ணின் அடி அடுக்கைக் குறிக்கும். எ-டு. திட்டக்குறிமானம் 0.0000256, அறிவியல் குறிமானம் 0.256x$^{104}$, மிதவைப் புள்ளி குறியீடு. 0.256 e-04.

**Floppy disk - நெகிழ்வட்டு:** பிளாஸ்டிக் பொருளாலானது. காந்தப்படலப் பூச்சு பூசப் பட்டிருக்கும். இலக்க வடிவில் கணிப்பொறித் தகவல்கள் சேமிக்கப்பட்டிருக்கும். விலை மலிவு. ஆனால் நம்புமை குறைவு. தட்டையான வட்ட மான ஊடகம். திறன் வேறுபடுவது - **1kb, 1mb.**

**Floppy disk controller - this is either a hardware or software used to control the orderly transfer of data between a computer and a floppy disk drive. நெகிழ்வட்டுக் கட்டுப்படுத்தி** : இது ஒரு மென்பொருள் அல்லது வன்பொருள். கணிப்பொறிக்கும் நெகிழ்வட்டு இயக்கிக்கும் இடையே ஒழுங்காகத் தகவல் மாறுவதைக் கட்டுப்படுத்துவது.

**Floppy disk drive, fdd - a device used to handle one or more floppy disks. நெகிழ்விட்டு இயக்கி, நெவஇ** : ஒன்றிற்கு மேற்பட்ட நெகிழ் வட்டுகளைக் கையாளப் பயன்படுங் கருவியமைப்பு. அதாவது, இதில் தகவலைப் பதிவு செய்யும் ஊடகம் நெகிழ்வட்டு.

**Flow - 1) sequence of data. 2) succession of events. ஓட்டம்** : 1. தகவல் வரிசை 2. நிகழ்வுத் தொடர்வு.

**Flowchart - a diagram using symbols connected by arrows to show the sequence of actions necessary to solve a particular problem. வழிமுறைப் படம்** : அம்புக் குறிகளால் இணைக்கப்பட்ட குறியீடுகளைப் பயன்படுத்தும் படம். ஒரு குறிப்பிட்ட சிக்கலுக்குத் தீர்வுகாணத் தேவையான செயல் வரிசையைக் காட்டுவது.

**Flowchart, advantages of - வழிமுறைப்பட நன்மைகள்** : 1. துல்லியமானது. 2. கருத்துகளை நுட்பமாகக் குறிப்பது. 3. புரிந்து கொள்வது எளிது. 4. சிக்கலைத் தீர்ப்பது.

**Flowchart symbols - வழிபடக் குறியீடுகள் :** செயல்களைக் குறிக்கும் திட்டமான குறியீட்டுத் தொகுதி. பெட்டிகள் வரிசையையும், வயிரவடிவம் ஆய்வையும் முடிவுகளையும் ஏனைய வடிவங்கள் உட்பலன், வெளிப்பலன் இணைப்புப் புள்ளி ஆகியவற்றையும் குறிப்பவை. பா. பக்கம் 50. **Folder - மடிப்பட்டை, மடிப்பி :** இது ஒரு சிறிய மஞ்சள் நிறப்படம்.

**Folder, kinds of - மடிப்பி வகைகள் :** சாளரம் இரு பகுதிகளைக் கொண்டது. அதன் இடப்பக்கத்தில் மடிப்பிகளின் பட்டியல் இருக்கும். இம்மடிப்பிகள் மின்னஞ்சல் செய்திகளைத் தேக்கி வைக்கப் பயன்படுபவை. பின்வருவன திட்டமான மடிப்பிகளும் அவற்றின் நோக்கங்களும். **1. உள்பெட்டி -** உள்வரும் செய்திகள் இங்குச் சேமிக்கப்படுதல். **2. புறப்பெட்டி -** வெளிச் செல்லும் செய்திகள் தற்காலிகமாக இங்குச் சேமிக்கப்படுதல். **3. அனுப்பப்பட்ட இனங்கள் -** அஞ்சல் பணியாளிக்குச் செய்தி அனுப்பப்பட்டபின், புறப்பெட்டியிலிருந்து அது நீக்கப்படும். அதன்படி மட்டும் மடிப்பியில் சேமித்து வைக்கப்படும். **4. நீக்கப்பட்ட இனங்கள் -** பிற மடிப்பிகள் எவையேனும் ஒன்றிலிருந்து நீக்கப்பட்ட எல்லாச் செய்திகளும் இங்குச் சேமித்து வைக்கப்படுதல். **5. வரைவுகள் -** இம்மடிப்பியில் பார்வை விரைவி தானாக எல்லாச் செய்திகளையும் சேமித்து வைத்தல்.

**Font -** a collection of printing characters of a particular size and style. **அச்செழுத்துத் தொகுதி :** அச்சுருக்களின் தொகுதி, குறிப்பிட்ட அளவும் பாணியும்கொண்டது.

**Font tag - அச்செழுத்துத் தொகுதி ஒட்டு :** ஆற்றல் வாய்ந்தது. இத்தொகுதியின் இனத்தைச் சுட்டியறியலாம்.

**Footer - அடிக்குறிப்பு :** பக்கத்திற்கு அடியில் பயன்படும் குறி. இதை வேண்டியவாறு உருவாக்கலாம். ஆராய்ச்சி நூல்களில் பயன்படுவது. ஒ. **Header.**

**Force - விசை :** ஒரு துணைக் கட்டளையை நிறைவேற்ற ஒரு கணிப்பொறி நிகழ்நிரலின் இயக்கத்தில் குறுக்கிடுதல். இக்கட்டளை, கட்டுப்பாட்டை நடைமுறைச் செயலின் மற்றொரு பகுதிக்கு மாற்றுவது.

**Forester research findings - பாரஸ்டர் ஆராய்ச்சி முடிவுகள் :** இவை வலையத்தளம் பற்றியவை. 1. வலையத் தளங்களில் 90% வடிவமைப்பு அமைதி தருவதாக இல்லை. 2. விற்பனை இழப்பு 50% 3. வருகை தருபவர்களில் 40%

திரும்புவதில்லை. 4. வணிகப் பெயர் இழப்பு. ஏனெனில் ஒவ்வொரு 10 பேரும் சராசரி அடுத்த 10 பேருக்குத் தரக்குறைவைப் பற்றிச் சொல்லுதல். 5. தவறான மீள்வடிவமைப்புகளால் 2 மில்லியன் அமெரிக்க டாலர்களுக்கு மேல் வீணாகச் செலவழிதல். **Form - படிவம் :** இது புலங்கள் அல்லது கட்டுப்பாடுகளின் திரட்டு. பள்ளி விண்ணப்பப் படிவம் போன்றது. பயனாளி தன் உட்பலனை அளிக்க உதவுவது. தகவலை அட்டவணையில் பதிவு செய்யவும் பார்க்கவும் பதிப்பிக்கவும் உதவுவது. இதில் பொத்தான்கள், பாடப் பெட்டிகள், செலுத்துசொல் கட்டளைகள் சரிபார்ப்புப் பெட்டிகள் முதலியவை அடங்கும்.

**Form designing - படிவமைப்பு உருவாக்கல் :** தன் வலவன் தெரிவைப் பயன்படுத்தி இதை வடிவமைக்கலாம்.

**Form module, fm - படிவ அலகு, பஅ :** இது ஒரு பயன்பாட்டின் பார்க்கக்கூடிய பகுதி. குறிப்புதவிகளைக் கொண்டது.

**Form window -** this is used to design the different forms an application will contain. **படிவச் சாளரம் :** ஒரு விண்ணப்பத்திலுள்ள வேறுபட்ட படிவங்களை வடிவமைக்க இது பயன்படுவது.

**Formal language -** an abstract mathematical object used to model the syntax of a programming language. **முறைசார்மொழி :** கருத்துப் பொருளான கணிதப்பொருள். நிகழ்நிரல் மொழியின் தொடரியலை வடிவமைக்கப் பயன்படுவது.

**Format -** 1) the arrangement of data into a specified layout. 2) the designated placement of text and margins and other elements in hard copy. 3) the programme to set up text arrangements for outputting. **படிவமைப்பு :** 1. குறிப்பிட்ட திட்ட வரையில் தகவல்களை அமைத்தல். 2. வன்படியில் பாடம், விளிம்பு மற்றும் பிற கூறுகளை உரியவாறு அமைத்தல். 3. வெளிப்பலனிற்காகப் பாடத்தை நிறுவும் நிகழ்நிரல்.

**Format string - படிவமைப்புச் சரம் :** கூற்றுகளின் படிவமைப்பைக் காட்டும் உருக்களைக் கொண்டது இது. ஒவ்வொரு உருவிற்கு முன் % குறி வரவேண்டும். ஒவ்வொரு எண் குறிக்கும் முன்பு உம்குறி & வர வேண்டும்.

**Formatting -** 1) setting up the order of the information. This is input to a computer. 2) arranging the layout of the data. This is output from the computer. **படிவம் அமைத்தல் :** 1. தகவல் வரிசை அமைத்தல்.

இது கணிப்பொறிக்கு உட்பலன் 2. தகவல் திட்டவரை அமைத்தல். இது கணிப்பொறிக்குப் புறத்தே அமையும் வெளிப்பலன்.

**Formatting, alternate method of - படிவமைப்பு மாற்றுமுறை :** ஒரு குறிப்பிட்ட பாணியில் உருவாக்கி, இதை ஓர் ஆவணத்திற்குப் பயன்படுத்தலாம். வரி இடைவெளிவிடல், பத்தி வரிசையாக்கம், ஒதுக்கிச் செய்தல் ஆகியவை இதில் தேவையற்றவை.

**Formatting changes - படிவமைப்பு மாற்றங்கள் :** இவை பாட நடையை மாற்றுபவை. எழுத்து பெரியதாகவும் சாய்ந்ததாகவும் இருக்கும். அளவு, நிறம் முதலியவை எழுத்துப் பண்புகள். இவற்றை வேண்டியவாறு பயன்படுத்தலாம்.

**Formatting, kinds of - படிவமைப்பு வகைகள் :** 1. பாடப் படிவமைப்பு. 2. பக்கப் படிவமைப்பு. விரிவு அவ்வப்பதிவில் காண்க.

**Formatting, text - பாடப்படிவம் அமைத்தல் :** இது இரு வகை. 1. வன்படிவம் அமைத்தல், 2. மென்படிவம் அமைத்தல்.

**Forth-போர்த் :** ஓர் உயர்நிலை நிகழ்நிரல் மொழி. விரைவு மிகுதி. நினைவகத்தைச் சிக்கனமாகப் பயன்படுத்தலாம்.

**Fortran - பார்ட்ரான் :** ஓர் உயர் நிலை மொழி. அனைத்துலக வணிக எந்திரத்தால் முதன் முதலில் உருவாக்கப்பட்டது. எண் பயன்பாடு, அறிவியல் பயன்பாடு ஆகியவற்றிற்குப் பயன்படுவது. மிகப் பழையது, மிகப்பரவலான உயர்நிலை மொழிகளில் ஒன்று. வணிகத்துறை, தொழில்துறை ஆகியவற்றிலும் பயன்படுவது. இம்மொழி தொகுக்கப்பட வேண்டிய ஒன்று. Formula translator வாய்பாடு பெயர்ப்பி.

**Frames - சட்டங்கள் :** வேறுபட்ட பகுதிகளாகத் திரை பிரிக்கப்பட்டுள்ளது. இப்பகுதிகளே திரைகள். சட்டத்தொகுதி ஒட்டுகளைக் கொண்டு, இவற்றை உருவாக்கலாம். அளவைக் குறிக்க இத்தொகுதி ஒட்டுடன் இரு பண்புகள் பயன்படுத்தப்படுகின்றன. அவை பத்திகளும் வரிசைகளும் ஆகும். இவற்றின் மதிப்புகள் குறும் படங்களாகவோ விழுக்காடுகளாகவோ கொடுக்கப்படும்.

**Framing -** units of data marking the boundary of fields or characters for data transmission. **வரையறைப்படுத்தல் :** தகவல் செலுத்துகைக்காக உருக்கள் அல்லது புல எல்லையைக் குறித்தல்.

**Frankston, bob - பாப் பிராங்ஸ்டன் :** காட்சிக் கணிப்பானை ஆப்பிளுக்காக 1979 இல் அமைத்தவர். பா. **Bricklin**

**Freddy williams prof - பேரா. பிரடி வில்லியம்ஸ் :** பேரா. கில்பர்னின் ஆசான், முதல் கணிப்பொறியை நிறுவியவர்.

**Free field -** a property of information retrieval device permitting recording of information medium without regard to preassigned fixed fields. **தடையிலாப் புலம் :** மீட்புக் கருவியமைப்பின் தகவல் பண்பு. முன்னரே ஒதுக்கப் பெற்ற நிலையான புலங்களைக் கருத்தில் கொள்ளாமல், தகவல் ஊடகத்தைப் பதிவு செய்ய அனுமதிப்பது.

**Frequency -** the number of times per second that a periodic event repeats itself. The unit is hertz. **அதிர்வெண் :** ஒரு கால நிகழ்வு தன்னைத் தானாகத் திருப்பிக் கொள்ளுதல். இது ஒரு வினாடிக்கு இத்தனை தடவைகள் என்று அமையும். அலகு ஹெர்ட்ஸ்.

**Frequency division multiplexing -** a method used to transmit several signals along a single data communications circuit. **அதிர்வெண் பிரிவைப் பகுதியாக்கல் :** ஒரு தனித் தகவல் தொடர்ச் சுற்றுவழியாகப் பல குறிகைகளைச் செலுத்தும் முறை.

**Friction feed -** a method by which paper is moved between the primary roller and the punch roller in a printer as in a standard typewriter. **உராய்வூட்டல் :** இது ஒரு முறை. அச்சியற்றியில் இதில் முதன்மை உருளைக்கும் துணை உருளைக்கும் இடையே தாள் நகரும். ஒரு திட்டமான தட்டச்சுப் பொறியில் நகர்வதுபோல் இது நகரும்.

**Fso, file system object - எஃப்எஸ்ஓ, கோப்புமுறைப் பொருள், கோமுபொ.**

**Fso object model- எஃப்எஸ்ஓ பொருள் மாதிரி :** இது விஷூவல் பேசிக்கின் ஒரு புதிய பண்பு. ஒரு பொருள் அல்லது நோக்க அடிப்படையில் அமைந்த கருவி. மடிப்பிகள், கோப்புகள் ஆகியவற்றைக் கொண்டு வேலை செய்வதற்கு உதவுவது. மடிப்பிகளை ஆக்குவது, நகர்த்துவது, நீக்குவது. கோப்புகளை முறையாக்குவது.

**Fud - fear, uncertainty and doubt பஃட் :** அச்சம், உறுதியின்மை, ஐயம், அஉஐ. கணிப்பொறியை மக்கள் வாங்காததற்குக் காரணங்கள்.

**Full page display -** a terminal displaying at least 80 columns (80 character) across and 55 lines of copy (the average 81/2 x 11 inch page capacity) on the screen. **முழுப்பக்கக் காட்சி :** 80 பத்திகளையும் (குறுக்கே 80 உருக்கள்) படியின் 55 வரிகளையும் (சராசரி 81/2 x 11 அங்குலப் பக்கத்திறன்) திரையில் காட்டும் முனையம். **Function - சார்பலன் :** இது ஒரு செயல்வகை அல்லது ஒரு வகைத் துணை நடைமுறைச் செயல். இதற்குத் திட்டமான சுட்டளவுகள் உண்டு. மதிப்பு மூலம் சி மொழியில் இச்சுட்டளவுகளைச் செலுத்த இயலும் ஒரு சார்பலன் ஒரு மதிப்பை மட்டுமே திருப்பியனுப்ப இயலும் நிகழ்நிரலில் ஒவ்வொரு சார்பலனும் அறுதியிடப்பட வேண்டும். திரளில் சார்பலனை அடக்கலாம். பா. **Library functions.**

**Functional requirements - சார்பலன் தேவைகள் :** இவை ஆவணமாக்கலைக் குறிக்கும்; நிகழ்நிரலைத் தொடர்ந்து, தொகுதி என்ன செய்ய வேண்டும் என்பதை விளக்கமாகத் தெரிவிக்கும்.

**Function, body of - சார்பலன் அமைப்பு :** இது மாறு அறுதியிடும் பகுதி, முறையாக்கு பகுதி, திருப்பு கூற்று என்னும் முப்பகுதிகளைக் கொண்டது.

**Function declaration - சார்பலன் அறுதியீடு** : ஒரு சார்பலனை முறையாக்கவும் மிதவையைத் திருப்பவும் வேண்டுமானால், அது முதன்மைச் சார்பலனாலேயே அறுதியிடப் படவேண்டும். இதுவே சார்பலன் அறுதியீடு எனப்படும். ஓர் எளிய சார்பலன் அறுதியீட்டிற்குரிய பொதுப்படிவமைப்பு பின்வருமாறு : datatype - தகவல் வகை , function name -சார்பலன் பெயர்.

**Function, kinds of - சார்பலன் வகைகள் :** 1) பயனாளிக்குரிய சார்பலன், 2) திரட்டுகள் பலன், 3) உட்பலன் சார்பலன், 4) வெளிப்பலன் சார்பலன்.

**Function, library, kinds of - திரட்டுசார்பலன் வகைகள் :** சி மொழி சில கணிதச் சார்புகளை அனுமதிக்கிறது. இவையே திரட்டு சார்பலன்கள் எனப்படும். அவற்றில் சில பின்வருமாறு: கெட்ஸ், புட்ஸ், ரேண்டமைஸ், ஸ்டர் செட், அப்ஸ் முதலியவை.

**Function, naming - சார்பலனைப் பெயரிடல் :** பயனாளிக்குரிய சார்பலனுக்குச் செல்லத்தக்க மாறிப்பெயரை அளிக்கலாம் முதன்மை நிகழ்நிரலையே சி மொழியில் ஒரு சார்பலனாகக் கருதலாம். சி மொழி நிறைவேற்றப்படும்பொழுது,

நிறைவேற்றல். இம்முதன்மைச் சார்பலனிலிருந்தே தொடங்குகிறது. ஆகவே, ஒரே ஒரு முதன்மைச் சார்பலன் மட்டுமே இருக்க இயலும்.

**Functions frequently used - அடிக்கடிப் பயன்படும் சார்பலன்கள்** : சைன், காஸ், டேன், லாக் முதலியவை.

**Functions, nesting - கூடுகைச் சார்பலன்கள்** : நிறைவேற்றலுக்காக ஒரு சார்பலனுக்கு மற்றொரு சார்பலன் தேவைப் படும். இவ்வகைச் சார்பலன் வரையறையே கூடுகை சார் பலன் வரையறை எனப்படும். கொடுக்கப்பட்ட மதிப்பெண்களிலிருந்து மாணவர்களின் சராசரி மதிப்பெண்ணையும் தேறிய மாணவர்களின் விழுக்காட்டையும் இச்சார்பலன் மூலம் கண்டறியலாம்.

**Function, structure of - சார்பலன் அமைப்பு** : சி மொழியில் சார்பலன்களுக்குத் திட்டமான அமைப்பு உண்டு. ஒரு சார்பலனின் பொது அமைப்பு பின்வருமாறு.

**Function name** - சார்பலன் பெயர் (**list of parameters** - சுட்டளவுகளின் பட்டி)

**Parameter - declaration** சுட்டளவு அறுதியீடு

... ... ... ... ... ...

... ... ... ... ... ...

... ... ... ... ... ...

சார்பலன் பெயரை அடைப்புக்குறி தொடரும். இது காற் புள்ளியால் பிரிக்கப்பட்ட சுட்டளவுகள் பட்டியலைக் கொண்டிருக்கும். பின் இச்சுட்டளவுகள் அறுதியிடப்படும். அதற்குப் பின் சார்பலன் அமைப்பு கொடுக்கப்படும்.

**Function switch - a network having a number of inputs and outputs. - சார்பலன்சொடுக்கி** : பல உட் பலன்களையும் வெளிப்பலன் களையுங் கொண்டுள்ள வலையமைவு.

**Function table - a computer device converting multiple inputs into a single output. சார்பலன் அட்டவணை** : இது ஒரு கணிப்பொறியமைப்பு. மடங்கு உட்பலன்களை ஒரு தனி வெளிப்பலனாக மாற்றுவது.

**Fundamental control structures - அடிப்படைக் கட்டுப்பாட்டு அமைப்புகள்** : இவை கணக்கிடுதலைச் செய்வதற் குரிய

நுணுக்கங்கள். இவை திரும்பத் திரும்ப வருபவை. இவை பின்வருமாறு: 1. வரிசையாக்கல் 2. பிரித்தல் 3. தொடர்ந்து செல்லுதல். இவற்றை அவ்வப்பதிவுகளில் காண்க.

## G

**Galilieo - கலீலியோ (1564-1642):** நழுவுகோல் என்பது ஒரு கணிப்பீட்டுக் கருவி. இதை இவர் புனைந்தார். மின்னணுக் கணிப்பான் வரும்வரை இது பயன்பட்டது.

**Game chip - விளையாட்டு நறுவல் :** நுண்மின்னணுப் பகுதி. இது இல்லக் கணிப்பொறியில் பயன்படுவது. விளையாட்டுகளுக்குத் தேவைப்படும் முறைமைச் சார்பலன்களைக் கொண்டது. **Games - விளையாட்டுகள் :** கணிப்பொறிப் பயன்பாடுகள். கேளிக்கை அதிகம்; கல்வி குறைவு. காட்சித்திரையில் நிகழ்ச்சிகள் தோன்றும். இவற்றைத் திறத்தோடு இயக்க வேண்டும். இல்லக் கணிப்பொறிகளில் இவை இயக்கப்படுபவை. இவை மூன்று வகை: 1. திற விளையாட்டுகள்; சதுரங்க ஆட்டம். 2. வீர விளையாட்டுகள்; தேடுதல் 3. கேளிக்கை விளையாட்டுகள்; பல விளையாட்டுகள்.

**Gap digit -** a digit present in a word. It is not a part of the information conveyed by the word, eg. A parity bit. **இடைவெளி இலக்கம் :** ஒரு சொல்லிலுள்ள இலக்கம். சொல் கொண்டு செல்லும் தகவலின் பகுதியன்று. எ-டு சம இலக்கம்.

**Garbage - குப்பை :** கூளம். கணிப்பொறியிலுள்ள தேவையில்லாத பொருளற்ற தகவல்களின் தொகுதி.

**Garbage collection - குப்பைத் திரட்டு :** தேவையில்லாத தகவல் தொகுதி.

**Gate -** an electronic switch acting as a decision marker in digital systems by giving a binary output either 1 or 0 depending on the combination of binary input; otherwise known as logic circuit. **வாயில் :** ஒரு மின்னணுச் சொடுக்கி, இலக்கத் தொகுதிகளில் முடிவு செய்பவையாகச் செயற்பட்டு 1 அல்லது 0 என்னும் இரும வெளிப்பலனைக் கொடுக்கும். இச்செயல் இரும உட்பலனைக் கூடுகையைப் பொறுத்தது. வேறுபெயர் முறைமைச்சுற்று.

**Gate, kinds of - வாயில் வகைகள் :** 1. உம் வாயில் (and gate) 2. அல்லது வாயில் (or gate) 3. இல்வாயில் (nor gate) 4. இராவாயில் (nand gate),

**Geek - மடமை, மடையன்**(இழிவழக்கு)

**Geek speak - மடையர் பேசுகிறார் :** கசப்பைத் தரும் பயனாளி உலகம். இதில் மக்களும் மனிதரும் ஒன்றே.

**General programme -** a computer programme designed to solve a specific type of problem. For this purpose values of appropriate parameters are supplied. **பொதுநிகழ்நிரல் :** இது ஒரு கணிப்பொறி நிகழ்நிரல். குறிப்பிட்ட வகைச் சிக்கலை மட்டுமே தீர்க்க வடிவமைக்கப்பட்டது. இதற்குத் தோராய சுட்டளவுகளின் மதிப்புகள் வழங்கப்படும்.

**General purpose computer -** a computer capable of operating on different programmes used for the solution of a wide **variety of problems.**
**பொதுநோக்கு கணிப்பொறி :** விரிவான பல வகைச் சிக்கல்களைத் தீர்க்க உதவும் வேறுபட்ட நிகழ்நிரல்களை இயக்கவல்ல கணிப்பொறி.

**General purpose programme -** a programme designed to do some standard operation. Eg. Sorting file processing functions.
**பொதுநோக்கு நிகழ்நிரல் :** ஒரு திட்டமான செயலைச் செய்ய வடிவமைக்கப்பட்ட நிகழ்நிரல். எ-டு கோப்பு முறையாக்கு சார்பலன்களைப் பிரித்தல்.

**Generate - இயற்று :** பொது நோக்கு நிகழ்நிரலின் குறிப்பிட்ட பதிப்பை உண்டாக்க இயற்றியைப் பயன்படுத்தல்.

**Generation - தலைமுறை :** கணிப்பொறித் தலைமுறைகளைக் குறிப்பது. நான்கு தலைமுறைகள் உள்ளன.

**Generation number - தலைமுறை எண் :** காந்த நாடாச் சுருளில் கோப்புச் சீட்டின் ஒரு பகுதியைக் குறிப்பது. இது கோப்பின் வயதைக் குறிப்பது.

**Generative grammar - ஆக்க இலக்கணம் :** ஒரு விதித் தொகுப்பு; முறைசார் மொழியில் செல்லுபடியாகக்கூடிய வெளிப்பாட்டைத் தெரிவிப்பது. இது சொல் பகுதிகள் தொகுப்பு அடிப்படையில் நடைபெறுவது. இதில் நெடுங்கணக்கும் அடங்கும்.

**Generator - இயற்றி :** ஒரு நடைமுறைச் செயல். பொதுச் செயலுக்குரிய குறிப்பிட்ட பதிப்பைச் செய்வது.

**Gigo, garbage in, garbage out - கைகோ :** குப்பைஉள், குப்பை வெளியே; இதன் பொருள், உட்பலன் தவறாக இருக்குமானால், எவ்விடையும் செல்லத்தக்கதன்று.

**Gimps, great internet mersene prime search - ஜிம்ப்ஸ் :** மெர்சினி முதன்மைத் தேடல் பேரீணையம்; இது ஒரு கணிதத் திட்டம். பொருளும் புகழும் தருவது. பிரெஞ்சு துறவி மெர்சினி பெயரால் அமைந்தது. மெர்சினி முதன்மை எண்களைக் கண்டறிவது.

**Global scope - முழு எல்லை :** எல்லைகளில் ஒரு வகை. மிக ஆற்றல் வாய்ந்தது. ஒரு மாறியை முழுமையுள்ளதாக்கப் பொது அறுதியிடு கூற்று பயன்படுகிறது.

**Global search and replace -** a text editing function of a word processing system. In this system a text is scanned for a given combination of characters. Such a combination is replaced by another set of characters.
**முழுமையாகத் தேடலும் மாற் றீடு செய்தலும் :** சொல் முறையாக்கு முறையின் பாடப் பதிப்புப் பணி. இதில்,கொடுக்கப்பட்ட உருக்களின் கூடுகைக்குரிய பாடம் தேடப்படும். இத்தகைய கூடுகை மற்றொரு உருக்கள் தொகுதியால் மாற்றீடு செய்யப்படும்.

**Global variable -** a variable referred to throughout a main program. **முழுமாறி :** முதன்மை நிகழ்நிரல் முழுவதும் பார்வைக்கு எடுத்துக் கொள்ளப்படும் மாறிலி.

**Gnutella - நூட்டில்லா :** வலையமைவுப் பணியகங்களில் ஒன்று. ஒரு பயனுள்ள தகவல் தொடர்பு மாதிரி. நல்ல எதிர்கால வாய்ப்புள்ளது.

**Gopher - காப்பர் :** ஆவணங்களை இணைக்கும் பழைய முறை. எச்டிஎம்எல் இதை மாற்றீடு செய்துள்ளது.

**Go to, go to -** a branching instruction used in high level programming languages. **கோட்டு :** செல்க. கிளைக்கட்டளை. உயர்நிலை நிகழ்நிரல் மொழிகளில் பயன்படுவது.

**Govindsamy n. Prof. - பேரா. நா. கோவிந்தசாமி :** இவர் மறைந்த மாணிக்கம். சிங்கப்பூரைச் சார்ந்தவர். தமிழ் இணைய முன்னோடி. இவர் தொடங்கிய கணியன் தமிழ்ச் செய்தி (1977) நிற்கும் வரை வெற்றியுடன் நடைபெற்றது. நாள்தோறும் 600 பேர் பயன்படுத்தினர். தமிழ் இணைய 99 திறவு பலகைக்குரிய (தமிழக அரசு) உட்பலன் இவர் அமைத்த கணியன் திறவு

பலகையிலிருந்து பெறப்பட்டது. தமிழ் இணைய உலகம் இவருக்கு நன்றிக் கடன்பட்டுள்ளது. இவர்தம் அரிய பணி கணியன் குடும்ப மின் இதழ்கள் தோன்ற வழி வகுத்தது.

**Graceful degradation - சீரானபடி இறக்கம் :** கணிப்பொறி எந்திரம் பழுதுபடல். பழுது ஒரு சில பகுதிகளில் மட்டும் இருப்பதால், முழுப்பழுது ஏற்படுவதற்கில்லை.

**Graphical visual display device -** a computer input-output device. It enables the user to manipulate graphic material in a visible two-way real time communication. It has a light pen, keyboard and a visual display unit monitored by a controller; otherwise known as graphoscope. **வரைகலை காட்சி வெளிப்பாட்டுக் கருவியமைப்பு :** கணிப்பொறி உட்பலன் வெளிப்பலன் கருவியமைப்பு. இருவழி மெய்ந்நேரப் பார்வைச் செய்தித் தொடர்புக்குரிய வரைகலை பொருள்களைக் கையாளப் பயனாளிக்கு உதவுவது. இதில், ஒளிஎழுதி, விசைப் பலகை,

காட்சியலகு ஆகியவை இருக் கும். இவ்வலகு கட்டுப்பாட்டுப் பகுதியால் கண்காணிக்கப்படும். வேறு பெயர் வரைகலை நோக்கி.

**Graphics -pictorial information displayed on a vdu. It can be usually be manipulated using a light pen or keyboard. வரைகலை**: காட்சித் திரையில் காட்ட்ப்படும் படத்தகவல். வழக்கமாக ஓர் ஒளி எழுதியை அல்லது விசைப்பலகையைப் பயன்படுத்தி இதைக் கையாளலாம்.

**Graphics business -வணிக வரைகலை** : பலவகைப்படங்களும் கட்டப்படங்களும் இதில் அடங்கும். இவை விற்பனை, ஆதாயம், இழப்பு, பொருள்பட்டியல் முதலியவற்றைக் குறிப்பவை. எ-டு பட்டை வரைபடம்.

**Graphics characters - small shapes occupying the same space as a letter or number on a vdu. It is used to improve games, program and graph. வரைகலை உருக்கள்** : எழுத்து அல்லது திரையில் தோன்றுபவை. நிகழ்நிரல், விளையாட்டு, வரைபடம் முதலியவற்றை மேம்படுத்தப் பயன்படுபவை.

**Graphics display unit - the unit presenting graphical information to the user. வரைகலை காட்சி அலகு** : இவ்வலகு வரைகலைத் தகவல் களைப் பயனாளிக்கு அளிப்பது.

**Graphics for applications - பயன்பாடுகளுக்குரிய வரை கலை** : பயன்பாட்டிற்கு வரை கலையை உருவாக்கிப் பயன்படுத்தப் பல வழிகளில் விஷுவல் பேசிக் உதவுகிறது. ஓர் பயன்பாட்டின் இடைமுகத்திற்குப் பாணி, காட்சியமைப்பு ஆகிய இரண்டையும் வரை கலை சேர்க்கிறது. கோடுகள், வட்டங்கள், சிறு படங்கள் ஆகியவை வரை கலைப்பொருள்கள் ஆகும். இவற்றை எளிதாகவும் விரைவாகவும் விஷுவல் பேசிக்கில் பின்வருமாறு காட்ட இயலும். 1) படிவத்தின் பின்னணியாகப் படத்தைச் சேர்த்தல். 2) உருக் கட்டுப்பாடு, 3) கோட்டுக் கட்டுப்பாடு, 4) வடிவக்கட்டுப்பாடு, 5) எழுச்சி யூட்டும் கட்டுப்பாடு, 6) படப் பெட்டிக் கட்டுப்பாடு. விரிவு அவ்வப்பதிவுகளில் காண்க.

**Graphics mode-operating the computer in such a way it displays graphics to the best effect. - வரைகலை முறை** : சிறந்த பயனளிக்கும் வகையில் வரை கலை திரையில் உண்டாகுமாறு கணிப்பொறியை இயக்குதல்.

**Graphics set - the group of graphics symbols provided by the manufacturer of a microcomputer. It is usually marked on a group of keys. வரைகலைத்தொகுதி**: வரை கலைக் குறியீடுகள் தொகுதி. நுண்கணிப்பொறி உற்பத்தியாளரால் வழங்கப்படுவது. இது வழக்கமாகத் திறவுத் தொகுதியில் குறிக்கப்படுவது.

**Graphics tablet** - the popular type of digitizing device using a flat tablet and a stylus for graphic input. This device offers an efficient method of converting object shapes into computer storable information.

**Graphics terminal - a terminal with a screen adapted for displaying high resolution graphics. வரைகலை முனையம்** : உயர் பகுப்பு வரைகலையைக் காட்டுமாறு அமைந்துள்ள திரையுடன் கூடிய முனையம்.

**Grosh's law - this law states that the processing power of a computer is proportional to the square of its cost. கிராஷ் விதி** : ஒரு கணிப் பொறியின் முறையாக்கு திறன் அதன் ஆக்க விலை இரு படிக்கு நேர்வீதத்தில் உள்ளது என்பது இவ்விதி.

**Group code - a systematic error checking code. Used to check the validity of a group of characters transferred between two terminals. குழுக்குறியீடு** : முறையான பிழை சரிபார்க்கும் குறியீடு. இரு முனையங்களுக்கிடையே மாற்றப்படும் உருக்கள் தொகுதியின் செல்லுபடி திறனைச் சரிபார்க்கப் பயன்படுவது.

**Grouping of records - placing of records together in a group to either conserve storage space or reduce access time. ஆவணங்களைத் தொகுதி யாக்கல்** : ஒரு தொகுதியில் ஆவணங்களை ஒருங்குசேர வைத்தல், சேமிப்பு இடத்தைப் பாதுகாக்கவும் அல்லது அணுக்க நேரத்தைக் குறைக் கவும் இது நடைபெறுவது.

**Groupings, standard set of - திட்டத் தொகுதிகள்**: இவை பின்வருமாறு 1) கோப்பு, 2) பதிப்பி, 3) காட்சி, 4) படிவமைப்பு, 5) கருவி, 6) சாளரம், 7) உதவி,

**Group mark - a special character used to indicate the end of a group of characters in store. தொகுதிக் குறி** : சேமிப்பி லுள்ள உருக்கள் தொகுதியின் முடிவைக் குறிக்கப் பயன்படும் தனிஉரு. **Grove, andrew s. -எஸ்.ஆண்ட்ரூவ் குரோவ் (1936 -)** : இவர் நுண்முறையாக்கிகளை உற்பத்தி செய்யும் இண்டல் நிறுவனத்தின் முளை, நறுவல் தொழில்நுட்ப வித்தகர் பிறப்பால் அங்கேரியர்/பொறி இயலார். இவர் தன்னை எந்த ஒரு துறையின் தந்தை என்றும் கூறிக்கொள்ள விரும்பவில்லை. இன்று இந்த அளவுக்குக் கணிப்பொறிகள் வளர்ந்துள் ளதற்கு நறுவல் தொழில் நுட்பமே காரணம்.

**Gulp - a series of bytes considered as a unit. விழுமி** : எண்மிகளின் (பைட்டு கள்) வரிசை. ஒர் அலகு பா.bit, byte.

**Gurunet - குருஇணையம்**: குரு வலையம். இது ஒரு பயன் பாட்டகம். திரு.முரளி என்பவரால் அமைக்கப்பட்டது. இவர் இந்து நாளிதழில் வலை யம் பேசுகிறது என்னும் தொடர் கட்டுரை ஒவ்வொரு வியாழக்கிழமையும் எழுதுபவர். எந்த ஒரு சொல், சொற்றொடர் பற்றியும் தகவல் தருவது. இதன் தகவல் தளம் அதற்கேற்ப அகராதி அமைப்பைப் பெற்றுள்ளது.

## H

**Hacker - computer programmer கணிப்பொறி நிகழ்நிரலர்**.

**Hact - stop: நிறுத்து** .

**Hammer - a small pivoted flat head striking an embossed character against the paper in an impact printer. Eg. Daisywheel printer. சுத்தி** : மையமாகப் பொருந்தியுள்ள சிறிய தலை. ஒரு தாக்கு அச்சியற்றியில் தாளுக்கு எதிராகப் புடைப்புருவை அடிப்பது.

**Hamming code - a code system used for detecting and correcting errors in a flow of digital information. ஹேமிங் குறியீடு** : இலக்கத்

தகவல் நுட்பத்தில் பிழைகளைக் கண்டு சரிசெய்யப் பயன்படும் குறியீட்டு முறை.

**Hard copy - data printed on paper eg, programme listing. வன்படி** : தாளில் அச்சிடப் படும் தகவல். எ.டு. நிகழ்நிரல் பட்டியலிடல்.

**Hard disk - a rigid disk of plastic coated with a magnetic film for storing computer data. வன்தட்டு** : பிளாஸ்டிக்காலான விறைப்பான தட்டு. கணிப் பொறித் தகவல் சேமிக்க மெல்லிய படலம் போர்த்தப் பட்டிருக்கும்.ஒ floppy disk.

**Hard disk drive, hdd - fixed permanently in the pc. The max. Storing capacity is 17 gb. வன்தட்டு இயக்கி, எச்டிடி** : வதஇ. தனியாள் கணிப்பொறியில் நிலையாகப் பொருத்தப் பட்டிருப்பது. இதன் உயர் வரை சேமிப்புத் திறன் 17 ஜி.பி.

**Hardware - any electronic or mechanical equipment making up an electronic system. Eg. Cpu. - வன்பொருள்** : வன்னியம். மின்னணு அல்லது எந்திரக் கருவித் தொகுதி. ஒரு மின்னணுத் தொகுதியை உண்டாக்குவது. எ.டு. மையச் செயலகம்.ஒ. software, firmware, brainware.

**Hardware availability ratio - it is expressed as the ratio of difference between accountable time and down time otherwise known as service ability ratio. , வன்பொருள் கிடைப்பு வீதம்** : கணக்கிடப்படும் நேரம், இறங்குநேரம் ஆகிய இரண்டிற்குமுள்ள வேறுபாட்டுத் தகவு. வேறுபெயர் பணித்திறன் வீதம்.

**Hashing - 1) a direct addressing technique. 2) any computer operation transforming one or more fields into a different arrangement. It is generally more compact and easily manipulated. Otherwise known as hash coding. கலவையாக்கல்** : 1) நேரடியாக முகவரி எழுதும் நுணுக்கம். 2) ஒன்றுக்கு மேற்பட்ட புலங்கள் வேறுபட்ட அமைவாக மாற்றும் கணிப்பொறிச் செயல். பொதுவாக, இது மிக நெருக்கமானது எளிதாகக் கையாளக் கூடியது. வேறுபெயர் கலவைக் குறியிடல்.

**Hdlc - high level data link - எச்டிஎல்சி**: உயர்நிலைத் தகவல் இணைப்பு.

**Hdml, handheld device markup language - எச்டிஎம்எல்** : கைப் பிடிக் கருவியமைப்பு குறிமொழி.

**Hdtp, handheld device transfer protocol -எச்டிடிபி:** கைப்பிடிக் கருவியமைப்பு மாற்றுச் சீரி.

**Head - a small electro - magnetic device able to read, record and erase data on a magnetic storage medium, eg. A disk. Otherwise known as read / write head. தலை** : ஒரு சிறு மின்னணுக் காந்தக்கருவி, காந்தச் சேமிப்பு ஊடகத்திலுள்ள தகவலை எழுத, படிக்க, பதிய, அழிக்க உதவுவது. எ-டு வட்டு, வேறு பெயர் படி / எழுது தலை.

**Header - the area at the top of a page. It can be created as we desire. தலைக் குறிப்பு** : ஒரு பக்கத்தின் மேலுள்ள பகுதி. நாம் வேண்டியவாறு இதை உரு வாக்கலாம். ஒ. Footer.

**Heading tag -தலைப்பொட்டு**: ஒட்டுகளில் ஒருவகை. இது எச்டிஎல் ஆவணத்தைக் கவர்ச்சியுள்ளதாக்கும்.

**Help - assistance;உதவி.**

**Hesitation - a short automatic suspension of a main programme to carry out all or part of another operation. Eg. Fast transfer of data from a peripheral unit. தயக்கம்** : ஒரு செயலைப் பகுதியாகவோ முழுதுமாகவோ நிறைவேற்றும் ஒருமுதன்மை நிகழ்நிரல். குறுகிய நேரம் தானாக நிற்றல் எ-டு. வெளிப்புற அலகிலிருந்து விரைவாகத் தகவலை மாற்றல்.

**Hexadecimal numbers - அறுபதின்ம எண்கள்** : உயர் மதிப்புள்ள இரும எண்களை மீக நீண்ட இரும வரிசையாய்க் குறிக்கலாம். இதைத் தவிர்க்க அறுபதின்ம எண் பயன்படுகிறது. இம்முறையில் 16 எண் குறியீடுகள் பயன்படுத்தப்படுகின்றன. அவையாவன : 0, 1, 2, 3, 4, 5, 6, 7, 8, 9, **a, b, c, d, e, f** இதில் **a, b, c, d, e, f** என்னும் எழுத்துகள் 10, 11, 12, 13, 14,15 என்னும் மதிப்புகளை முறையே பெறுகின்றன. அறுபதின்ம முறையின் அடி எண்மதிப்பு 16 ஆகும் இந்த எண்களின் இட மதிப்பு வலமிருந்து இடம் 16இன் இரு மடங்காகும். இரும எண் வரிசையின் ஒவ்வொரு 4 இருமிகளும் ஓர் அறுபதின்ம எண்ணைக் குறிக்கும். காட்டாக, **01101011** என்னும் இரும எண்ணை எடுத்துக்கொள்க. இதைக் கீழ்க்கண்டவாறு நன்னான்கு இருமிகளாகப் பிரித்து எழுதலாம். பின் ஒவ்வொரு 4 இருமிகளையும் சமமான அறு பதின்ம எண்களாக எழுதுக.

**0110 ....> 6b**

இவ்வாறு இரும எண்களை அறுபதின்ம எண்களாக எளிதாக மாற்றி எழுதலாம். இதே போல் ஓர் அறுபதின்ம எண்ணை இரும எண்களாகவும் எளிதில் மாற்றலாம். எ.டு. **3e1 . . . > 0011 1110 0001 ...> 1111100001.** பதின்ம எண்களின் அறு பதின்ம எண்களாக மாற்ற, இரும எண் மாற்றத்திற்கு 2 ஆல் வகுத்தது போல, இங்கு 16 ஆல் வகுத்து அறுபதின்ம எண்ணைப் பெறலாம். எடுத் துக்காட்டு பின்வருமாறு :

69172 என்னும் பதின்ம எண்ணை அறுபதின்ம எண்ணாக மாற்றல்.

ஆகவே $(6972)_{10} = (10e34)_{16}$

**Hidden line - a graphic display of a three dimensional object in line form. மறைவரி** : வரிவடித்தல் முப் பரும வரைகலைக் காட்சி.

**Hierarchial data base -படிநிலைத் தகவல் தளம்**: இது முதன்மையாக முதன்மைக் கணிப்பொறிகளில் பயன்பட்டது. இதில் பதிவுருக்கள் மரம் போல் இருக்குமாறு வகைப்படுத்தி அடுக்கப்படும். பதிவுரு வகைகளுக்கிடையே உள்ள தொடர்பு தாய் சேய் தொடர்பு போன்றது.

**Hierarchial file - a file with a grandfather - father - son structure.** படிநிலை வரிசைக் கோப்பு :**தாத்தா தந்தை மகன் என்னும் படிமரபுள்ள கோப்பு.**

**High level languages - உயர்நிலை மொழிகள்** : பயன் பாட்டு நிகழ்நிரல்களைச் செயற்படுத்த இவை உருவாக்கப்பட்டுள்ளன. மொழி யமைப்பைப் பயன்படுத்திப் புரியக்கூடிய குறிமுறைகளைப் பயனாளி அறிந்து கொள்ளலாம். இவற்றைச் செயற்படுத்த, இவை எந்திர மொழியாக்கப் பட வேண்டும். இதற்குத் தொகுப்பியைப் பயன்படுத்த வேண்டும். பொதுவான உயர் நிலை மொழிகளாவன :1) பேசிக் 2) கோபல் 3) போர்ட்டன் 4) விஷூவல் பாக்ஸ்புரோ 5) விஷூவல் பேசிக், விபி 6) ஜாவா 7) விஷூவல் c++.

**High speed printer, hsp - a printer printing 600 lines per minute. உயர் விரைவு அச்சியற்றி, எச்எஸ்பி** : ஒரு நிமிடத்திற்கு 600 வரிகள் அச்சியற்றும் கருவி.

**High speed reader - the fastest input device existing at a particular time. உயர்விரைவு படிகருவி** : குறிப்பிட்ட நேரத்தில் அதிக அளவு உட்பலனைக் கொடுக்கும் கருவி.

**High resolution graphics - images displayed on a vdu showing fine detail. உயர் பகுப்பு வரைகலை** : காட்சித்திரையில் காட்டப்படும் மிக நேர்த்தியான விளக்கமுள்ள உருக்கள்.

**Hit rate - the ratio of the number of records addressed in a run to the number of records in a file expressed as percentage. - ஓட்ட வீதம்** : ஓர் ஓட்டத்தில் அணுக்கமுள்ள ஆவணங்களின் எண்ணிக்கைக்கும் கோப்பிலுள்ள ஆவணங்களின் எண்ணிக்கைக்குமுள்ள தகவு, விழுக்காடாகத் தெரிவிக் கப்படுவது.

**Hll - high level language.உநிமொ** : உயர்நிலை மொழி.

**Hold - the preservation of data in one storage. பிடிப்பு** : ஒரு சேமிப்பில்சேமிக்கப்படும் தகவல் அளவு.

**Hold facility- a method of interrupting the operation of an anolog computer. பிடி வசதி** : ஓர் ஒப்புமைக் கணிப்பொறியின் செயலை விளக்கும் முறை.

**Home computer - a microcomputer. இல்லக் கணிப்பொறி** : நுண் கணிப்பொறி.

**Home page -தொடக்கப்பக்கம்** : மின்னஞ்சலில் வருவது. ஒரு வலையத்தளத்தின் முதல் பக்கம். தளத்தைப் பற்றிய செய்திகளையும் தளத் திலுள்ள பிறபக்கங்களோடு உள்ள இணைப்புகளையும் கொண்டது.

**Hopper, grace -கிரேஸ் ஹாப்பர்** : கணிப்பீட்டில் முன்னோடியாக அமைந்த பெண்மணி. அமெரிக்காவில் 1940 களில் திறப்பியுள்ள கணிப் பொறிகளை அமைக்க உதவியவர். அவற்றிற்குரிய மென்பொருள் உருவாக்கவும் உதவியவர். இவர் தம் அருஞ் செயல்களில் மூன்று : 1) உயர்நிலை மொழியான கோபலை உருவாக்கியவர். 2) உயர்நிலை மொழிகளை எந்திர மொழியாக மாற்றும் தொகுப்பியை உருவாக்கியவர். 3) முதல் கணிப்பொறிப் பிழையைக் கண்டறிந்தவர். பா. **Computer, history of**.

**Horizontal rule tag -கிடைமட்டக் கோட்டு ஒட்டு** : கிடை மட்ட வரி வரையப் பயன்படுவது. வேறுபெயர் <hr> ஒட்டு.

**Host computer - 1) a computer having overall control in a communication network. Eg. Prestel. 2) a computer preparing programmes for execution on another type of computer.**

**ஒம்பு கணிப்பொறி** : 1) ஒரு தகவல்தொடர்பு வலையமைவில் முழுக் கட்டுப்பாடுள்ள கணிப்பொறி. எ-டு. பிரிஸ்டெல். 2) மற்றொரு வகைக் கணிப்பொறியில் செயற்படுத்த நிகழ்நிரல்களை உருவாக்கும் கணிப்பொறி.

**Hosting - ஒம்புதல்** : தொடக்கப் பக்கத்தை வலையத்தின் ஒரு பகுதியாக்கி, இணையப் பயனாளிகள் அனைவரும் அதைப் பார்க்குமாறு செய்தல். தவிர, நம் கணிப்பொறியிலிருந்து எச்டிஎம்எல் குறிமுறையைப் பணியாளிக்கு (சர்வர்) மாற்றுவதும் ஆகும்.

**Host processor - a micro processor having overall control of other microprocessors in a multiprocessor system. ஒம்பு செயல்முறையாக்கி** : இது ஒரு நுண் முறையாக்கி, ஒரு பன்ம முறையாக்கித் தொகுதியிலுள்ள நுண்முறையாக்கிகளை முழுவதும் கட்டுப்படுத்துவது.

**House-keeping - routineswithin a programme not directly concerned with solution of the problem நடைமுறை ஒழுங்கு** : ஒரு நிகழ்நிரலிலுள்ள நடைமுறைகள். இவை ஒரு சிக்கலுக்குத் தீர்வு காண்பதோடு நேரடியாகத் தொடர்புடையன அல்ல.

**Html, hyper text markup language - எச்டிஎம்எல், மீப் பாடக் குறிமொழி**.

**Html, advanced concepts and trends in -எச்டிஎம்எல் லில் முற்போக்குக் கருத்துகளும் போக்குகளும்** : இது இன்று எல்லோரும் நன்கு அறிந்த ஒன்று. வேறுபட்ட மேய்விகளில் உள்ள ஒட்டுகளில் சிறு வேறுபாடுகள் உள் ளன. ஆகவே இதற்குத் திட்டமான ஒட்டுகள் உண்டாக்க வேண்டும் என்னும் தேவை ஏற்பட்டது. ஜனவரி 2000 திட்டம் என்பது எச்டிஎம்எல் 40 ஆகும். இதன் உட்கருத்து இதுவே: எல்லா மேய்விகளும் ஒரே பெயருள்ள ஒட்டுகளைப் பயன்படுத்த வேண்டும். இது திட்டத்தில் குறிப்பிடப்பட்டுள்ள பண்புகளுக்கும் பொருந்தும். இதனால் எல்லா மேய்விகளும் ஒரே மாதிரியான எச்டிஎம்எல் பக்கத்தைக் காட்டும். இது இன்றுவரை எட்டாத உண்மை. இருப்பினும், குறிப்பிட்ட பண்புகளும் ஒட்டுகளும் உள்ள மேய்விகளும் உள்ளன. வலையத்தில் (வெப்) ஒம்புவதற்குமுன் ஒன்றிற்கு மேற்பட்ட மேய்வியைப் பயன்படுத்தி எவ்வாறு ஆவணம் நன்கு காட்சிக்கு உள்ளாகிறது என்று பார்ப்பது அறிவுடைமை ஆகும்.

ஓர் இணைப்பாகச் செயலாற்ற நங்கூர ஒட்டில் ஓர் உருவைப் பயன்படுத்தலாம். இவ்வுரு ஓர் இணைப்பு என்பதை மேய்வி, பயனாளிக்குக் குறிப்பால் காட்டும். பயனாளி உருவைத் தட்டி இணைப்புக்குச் செல்கிறார். ஒரே உருவிற்குரிய வேறுபட்ட பகுதிகளுக்கான வேறுபட்ட **இணைப்புகளை வரையறை செய்ய எச்டிஎம்எல் நமக்கு உதவுகிறது. உருவின் ஒருபகுதி மேல் சுட்டெலி நகரும்** பொழுது, அதை ஒத்த இணைப்பு இருப்பதைக் குறிப்பால், அது காட்டும். இவற்றிற்கு சுட்டெலி நுண்ணுர்வு உருக்கள் என்று பெயர்.

பயனாளியால் வழங்கப்படும்.குறிப்பிட்ட அட்டவணைச் சொற்களைக் கொண்டு, எச்டிஎம்எல் ஆவணங்களை நாம் தேட இயலும். இச்சொற்களை அடையாளமறிதலும் ஒரு விரைந்த தொழில் முறையாகிவிட்டது.

எச்டிஎம்எல் என்பது விஷவல் பேசிக் படி எழுத்தையும், ஜாவா படி எழுத்தையும் சேர்க்க வாய்ப்பளிக்கிறது. இதில் வினையுறு எக்ஸ் கட்டுப்பாடுகளும் அடங்கும். இவை எல்லாம் எச்டிஎம்எல் ஆவணத்தில் இருக்கும். பொருளறி மற்றும் ஆப்லெட் ஒட்டுகளைப் பயன்படுத்தி, இதைச் செய்ய இயலும். இவ்வசதிகளைப் பயன்படுத்தி, ஆவணங்களை ஒன்றுக்கு மற்றொன்று வினைகொள்ளக்கூடியதாகச் செய்யலாம். மேலும், ஆவணத்தில் பல முற்போக்கு இயல்புகளையும் புகுத்தலாம்.

**Html, definition of - எச்டிஎம்எல் இலக்கணம்** : இச்சொல்லின் விரிவு **hyper text markup language** என்பதாகும். மீப்பாடக் குறிமொழி. மீபாகுமொ. இது ஓர் ஆவணத்தின் அடக்கப்பொருள். இந்த ஆவணம் பாடம், படம் முதலியவற்றால் பிற ஆவணங்களோடு இணைப்பு கொள் வது. இது ஒருமொழி ஆவணத்துடன் தொடர்புள்ள படங்களையும் மீப்பாடத்தையும் காட்டுவது எப்படி, உலகளாவிய இடையத்தில் உள்ள ஏனைய ஆவணங்களோடு இணைப்புகளை உண்டாக்குவது எப்படி என்பதை இது மேய்விக்கு அறிவுறுத்தும். ஆவணங்களைக் கவர்ச்சியாகக் காட்டவும் உதவுவது.

**Html document, creation of எச்டிஎம்எல் ஆவணத்தை உருவாக்கல்** : இந்த ஆவணங்களை உருவாக்கப் பதிப்பிப்பி (சொல்முறையாக்கி) தேவை. காட்டாகக் குறிப்புத்தாளை, சாளரங்களைப் பயன்படுத்தும் பொழுதும், டாஸ் பதிப்பிப்பி யை டாசைப் பயன்படுத்தும் பொழுதும். பயன்படுத்தலாம். நம் பணியைப் போட்டுக் காட்ட ஒரு மேய்வியும் தேவை: இணைய

ஆராய்வி, வலைக் காட்சிக் செலுத்தி. இணைய இணைப்பும் பயனுள்ளதாக இருக்கும். இதன் பயன்களாவன: இணையத்திலுள்ள எச்டிஎம்எல் ஆவணக் குறிமையைச் சுமை இறக்கம் செய்யவும் ஆராயவும், கிடைக்கக்கூடிய ஆவணங்களோடு இணைப்புகளை உண்டாக்கவும், இணையத்தில் நம் ஆவணங்களை வெளியிடவும் உதவும்.

அங்காடியில் பல மென் பொருள்கள் உள்ளன. இவை எச்டிஎம்எல் ஆவணங்களை உருவாக்க உதவுபவை. எ-டு மைக்ரோசாஃப்ட் சொல் 97, முன்பக்கம், இணையக்காட்சிக் கோப்பி, காட்டாக, மைக்ரோசாஃப்ட் சொல்லைப் பயன்படுத்தி, நம் பாடத்தைத் தட்டச்சு செய்து படிவமைப்பு செய்யலாம். படத்தை ஒட்டலாம், ஆவணத்தை எச்டிஎம்எல் ஆவணமாகச் சேமிக்கலாம். இது தானாகவே நமக்குத் தேவைப்படும் ஒத்தமையும் குறிமையை உருவாக்கும்.

**Html document, structure of எச்டிஎம்எல் ஆவன அமைப்பு** : இந்த ஆவணம் ஒவ்வொன்றும் எச்டிஎம்எல் ஒட்டோடு தொடங்கும். இந்த ஆவணத்தைத் தொடர்வது என்ன என்ன என்பதை இந்த ஒட்டு குறிக்கும் இந்த ஆவணத்தில் இருபகுதிகள் உண்டு 1) தலைப் பகுதி 2) உடல் பகுதி.

**தலைப் பகுதி**: ஆவணத்தின் தலையைச் சுட்டிக் காட்டுவது இப்பகுதி. இது தலை ஒட்டோடு தொடங்கும். இதைத் தலைப்பு ஒட்டு தொடரும். இதற்குப்பின் ஆவணத் தலைப்பு வரும். நம் தகவலுக்காகவே இத்தலைப்பு உள்ளது. மேய்வியின் தலைப்புப் பட்டையில் காட்டப்படும். தலைப்பு, தலைப்பு முடிவு ஒட்டோடு முடியும் தலைப் பகுதியை முடிக்க </head> ஒட்டைப் பயன்படுத்த வேண்டும்.

**உடல் பகுதி** ! இப்பகுதியில் ஆவணம் மட்டும் இருக்கும். இப்பகுதி உடல் ஒட்டோடு தொடங்கும். அடுத்து வருவது ஆவணங்களின் பாடம் உடல் முடிவு ஒட்டோடு இது முடியும். ஆவணத்தின் கடைசிவரி எச்டிஎம்எல் முடிவு ஒட்டாகும். இந்த ஆவணம் முடிவதை இந்த ஒட்டு குறிக்கும்.

**Html, history of -எச்டிஎம்எல் வரலாறு : டிர்ன் பெர்னர்லீ** என்பார் ஓர் ஆராய்ச்சியாளர். இவரே இதை முதன்முதலில் கருத்தில் கொண்டவர். கொண்ட ஆண்டு 1989. பின் இது மிகப் பரவலாகி கோபரை மாற்றீடு செய்தது.

**Html, kinds of - எச்டிஎம்எல் வகைகள் :1)dhtml**-டிஎச்டிஎம்எல் **2)xml**-எக்ஸ்எம்எல் விரிவு அவ்வப்பதிவுகளில் காண்க **html tags - எச்டிஎம்எல் ஒட்டுகள் :** இம்மொழியைப் பயன்படுத்தி நம் ஆவணத்தை எவ்வாறு திரையில் காட்ட லாம் என்பதை மேய்விக்கு அறிவுறுத்தலாம். இந்த அறிவுறுத்தல்கள் அல்லது குறிகளே ஒட்டுகள் எனப்படும். நம் ஆவணத்தின் உள்ளடக்கங்களைக் கொண்டு என்ன செய்ய வேண்டும் என்பதை முடிவு செய்ய, இந்த ஒட்டுகளை மேய்வி பயன்படுத்தும். இந்த ஒட்டுகளில் ஒரு திறவுச் சொல் இருக்கும். இச்சொல் கோண அடைப்புகளைக் (<>) கொண்டிருக்கும். இச்சொல்லே ஒட்டின் வேலையைச் சுட்டிக்காட்டும். எ-டு.

<head> - தலை

<title> - தலைப்பு

<html> - எச்டிஎம்எல்

பொதுவாக, இந்த ஒட்டுகள் வேற்றுமைப் பொருள் உடையவை அல்ல. **<head>, <head>, <head>, <head>** என்பதெல்லாம் ஒன்றே. பெரும்பான்மை ஒட்டுகள் இணையாக இருக்கும் முதல் ஒட்டு. **Start tag** - தொடங்கு ஒட்டு இது ஒரு பயன் தொடங்குவதைக் குறிக்கும். இரண்டாவது ஒட்டு **end tag** - முடிவு ஒட்டு. ஒரு பயன் முடிவதைக் குறிக்கும். இவ்விரு வகை ஒட்டுகளும் ஒன்றே.

**Html tags, kinds of - எச்டிஎம்எல் ஒட்டு வகைகள் :** இவை பின் வருமாறு 1) **start tag** - தொடங்கு ஒட்டு 2) **end tag** - முடிவு ஒட்டு 3) **nested tags** - கூடுகை ஒட்டுகள் : தலைப்பு ஒட்டு தலை ஒட்டோடு சேரும். இத்தலை ஒட்டு மீண்டும் எச்டிஎம்எல் ஒட்டோடு கூடும். இதேபோல உடல் ஒட்டு எச்டிஎம்எல் ஒட்டோடு சேரும். இவ்வகை ஒட்டுகளே **கூடுகை ஒட்டுகள்** ஆகும். எச்டிஎம்எல் ஆவணங்களை எழுதும் பொழுது இந்த ஒட்டுகள் அடிக்கடி பயன்படும். ஒட்டுகளைச் சேர்க்கும் பொழுது, புற ஒட்டோடு உள் ஒட்டு முழுதுமாகச் சேர்ந்திருக்க வேண்டும். ஒட்டுக்கு முன்பும் பின்பும் தவறாது கோணக்குறி இட வேண்டும். (<>). 4) **bold tag** - பெரிய எழுத்து ஒட்டு. 5) **italics tag** - சாய்வெழுத்து ஒட்டு. 6) **underline tag** - கீழ்க்கோடிடல் ஒட்டு. 7) **centre tag** - மைய ஒட்டு. அதாவது பாடத்தை 4 லிருந்து 5 வரை உள்ள எழுத்துகளால் காட்டவேண்டும். இவை எல்லாம் இணை இணையாகவே பயன்படும்.

8) **br tag** - பிஆர் ஒட்டு : இது வரிமுறிவை உண்டாக்குவது.

9) **p tag** - பி ஒட்டு : இது பத்தி ஒட்டு. ஒரு புதிய பத்தியை உண்டாக்கப் பயன்படுவது.

10) **anchor tag** - நங்கூர ஒட்டு.

11) **small tag** - சிறிய ஒட்டு: சிறிய எழுத்துப் பாடத்தைக்காட்டுவது.

12) **bit tag** - பெரிய எழுத்து ஒட்டு : பெரிய எழுத்தில் பாடத்தைக் காட்டுவது.

13) **dl tag** - வரையறை ஒட்டு.

14) **form tag** - படிவ ஒட்டு.

15) **input tag** - உட்பலன் ஒட்டு.

**Hub - the hole in the middle of a reel of magnetic tape. குடத்துளை :** காந்த நாடாச் சுருளின் நடுவிலுள்ள துளை.

**Human body- wetware : நனைபொருள்.**

**Hybrid computer - any mixed computer system in which analog and digital computing devices are combined. கலப்பினக் கணிப்பொறி:** இது ஒரு கலப்புக் கணிப்பொறித் தொகுதி. இதில் ஒப்புமை மற்றும் இலக்கக் கணக்கீடும் கருவியமைப்புகள் ஒருங் கிணைந்திருக்கும்.

**Hyper text - மீப்பாடம் :** மீ உரை. இது ஓர் ஆவணத்தின் உள்ளடக்கம். பாடம், படம், இணைப்புகள் ஆகியவற்றைக்கொண்டது. இவை ஏனைய ஆவணங்களுடன் தொடர் புள்ளவை.

**Hyper text markup language - மீப்பாடக் குறிமொழி :** list. **Html.**

**Hyper text navigation - மீப்பாடச் செலுத்துகை :** வலைய வடிவமைப்பில் ஒரு பெரும் பகுதி இது. இதற்குப் பின்வரும் முடிவுகள் தேவை : 1) இணைப்புகள் தோற்றம் 2) பயனாளிகள் எங்கே செல்ல வேண்டும், ஓர் இணைப்பு அவர்களை எங்கு அழைத்துச் செல்கிறது என் பதை விளக்க வேண்டும். 3) பயனாளியின் நடப்பு இடத்தை ஐயமறக் காணல். 4) தகவல் கட்டமைப்பு. பொதுவாகச் செலுத்துகை என்பது ஒரு பக்கத்தைக் திருப்புவதை மட்டுமே குறிக்கும்.

**Hyper visor - a control programme enabling two operating systems to share a common computing system. மீப்பார்வையாளி:** இது ஒரு

கட்டுப்பாட்டு நிகழ்நிரல். இதில் இரு இயங்குதொகுதிகள் ஒரு பொது கணக்கிடும் தொகுதியைப் பகிர்ந்து கொள்ளும்.

## I

**Ial, international algebraic language.**

ஐஏஎல் : **அனைத்துலக இயற்கணித மொழி : இது பின் ஆல்கல் மொழியாக மாறிற்று.**

**Ibm, international business machine - ஐபிஎம் :** அனைத்துலகத் தொழில் எந்திரம், அதொஎ.

**Ibms, intelligent guiding management system - ஐபிஎம்எஸ் :** நுண்ணறி வழிபடுத்து மேலாண் அமைப்பு : சென்னை தரமணி டைடல் பூங்காவில் உள்ளது. இது ஒரு கணிப்பொறிக் கட்டுப்படுத்தும் அமைப்பு. பூங்காவில் உள்ள பல பகுதிகளின் வேலைகளைக் கண்காணிப்பது. முதன்மையாக 2500 தீயறி கருவியமைப்புகளின் வேலையைக் கட்டுப்படுத்துவது (04-04-2000).

**Ic, integrated circuit - ஐசி :** ஒருங்கிணைசுற்று, ஒசு.

**Icon -** a symbol displayed for a user by a programme of an operating system. It represents an event or object. System based on this concept generally a pointing device is included. Eg. A mouse, a light pen. **நுண்படம் :** ஓர் இயங்கு தொகுதியின் நிகழ்நிரலால் பயனாளிக்காகக் காட்டப்படும் குறியீடு. இது ஒரு பொருள் அல்லது நிகழ்வைக் குறிக்கும். பொதுவாக இக்கருத்தின் அடிப்படையில் அமைந்த தொகுதிகள் குறிகாட்டும் கருவியமைப்பாக இருக்கும். எ-டு சுட்டெலி, ஒளி எழுதி.

**Icons commonly used - பொதுவாகப் பயன்படும் நுண் படங்கள் :** இவை கருவிப் பட்டையில் உள்ளவை. 1) சேமி : தட்டில் செய்தியைச் சேமிக்க உதவுகிறது. 2) அச்சியற்று : செய்தியை அச்சியற்றுவது. 3) ஆசிரியருக்குப் பதில் : ஆசிரியருக்குப் பதில் அனுப்ப உதவுவது. 4) அனைத்துக்கும் பதில் : மூலச்செய்தியைப் பெறுபவர் அனைவருக்கும் இச்செய்தியின் படி அனுப்பப்படும். 5) அனுப்புதல் : ஒருவருக்குச் செய்தியின் படியை அனுப்ப உதவுவது. 6) முன்செய்தியும் பின்செய்தியும் : நடப்புச் செய்திக்கு முன்னும் பின்னும் உடன் செய்திகளைக் காண உதவுகிறது.

**Ide, integrated drive environment -** a type of fast head drive typically used in laptop computers. **ஐடிஇ :** ஒருங்கிணைந்த இயக்கு சூழல்.

விரைவாக இயங்கும் ஒருவகை இயக்கி; பெட்டியடக்கக் கணிப்பொறிகளில் பயன்படுவது.

**Identification -** a label having a coded name. It helps to identify any unit of data. Eg. A file name.

கணிப்பொறியுடன் புதிய வன்பொருளைச் சேர்க்கிறது

புதிய நிகழ்நிரல்களை நிறுவி அவற்றிற்குரிய குறுக்கு வழிகளை உருவாக்க அனுமதிக்கிறது.

நாள், நேரம், நேர மண்டலம் ஆகியவற்றை மாற்ற அனுமதிக்கிறது.

கவர்ச்சியான சுவர்த்தாள்கள் ஒலி முதலியவற்றைக்கொண்டு உங்கள் கணிப்பொறியைத் தனிவயமாக்க அனுமதிக்கிறது.

பின்னணி, திரை முதலிய காட்சிப்பண்புகளை மாற்றுவதற்கு அனுமதிக்கிறது.

கணிப்பொறியில் புதிய எழுத்துகளைச் சேர்க்கவும், நீக்கவும், பார்க்கவும் அனுமதிக்கிறது.

விசைப்பலகை அமைவுகளை மாற்றுவதற்கு அனுமதிக்கிறது.

சுட்டெலி அமைவுகளை மாற்றுவதற்கு அனுமதிக்கிறது.

கடவுச் சொற்களை ஒதுக்கீடுசெய்யவும் மாற்றவும் அவற்றிற் குரிய காப்பு விருப்பங்களை அமைக்கவும் அனுமதிக்கிறது.

அச்சியற்றிகளின் அமைவைச் சேர்க்கவும் மாற்றவும் நீக்கவும் அனுமதிக்கிறது.

நாள், நேரம் எண் முதலியவற்றைக் காட்டுவதில் மாற்றம் உண்டாக்க அனுமதிக்கிறது.

கணிப்பொறிக்குப் பல பயனாளிகளைக் கொண்டுவர அனுமதிக்கிறது.

நுண்படம்

**அடையாளமறிதல் :** குறிமுறைப் பெயருள்ள குறியம். ஒரு தகவல் அலகை அடையாளங்காணப் பயன்படுவது. எ-டு ஒரு கோப்பின் பெயர்.

**Identification division -** one of the four divisions of a cobol programme. **அடையாளமறிதல் பிரிவு :** கோபல் நிகழ்நிரல் 4 பிரிவு களில் ஒன்று.

**Identifier -** the valid variable. Eg. A beta pay. **அடையாளங்காட்டி :** செல்லத்தக்க மாறி, எ-டு பீட்டா பே.

**Identity element -** a logical element with binary signals. **அடையாளக்கூறு :** இருமக்குறி கைகள் உள்ள (0,1) முறைமைக்கூறு.

**Idle time -** the period during which a system or part of it is not used for lack of command. Eg. The printer may be in use but the cpu may have idle time. **பயனில் நேரம் :** கட்டளை இல்லாததால், ஒரு தொகுதி அல்லது அதன் ஒரு பகுதி இயங்காது இருக்கும் நேரம், எ-டு அச்சியற்றி இயங்கும் பொழுது, மையச் செயலகம் இயங்காது இருத்தல்.

**If else structure -** a useful one for easy handling. **இருந்தால் தவிர அமைப்பு :** எளிதாகக் கையாளுவதற்குரிய பயனுள்ள அமைப்பு.

**Ignore character - புறக்கணிப்பு உரு :** கணக்கில் கொள்ளப்பட வேண்டியதில்லை. வேறுபெயர் அழியுரு.

**Ikbs, intelligent knowledge - based system - - ஐகேபிஎஸ் :** நுண்ணறிவு அறிவமை தொகுதி, நுஅ.அதொ.

**Llakiyasalaram - இலக்கியச்சாளரம் :** இலக்கிய மின்னிதழ்.

**Image -** an exact copy of an area of store located in another part of store. **படம் :** வேறு ஒரு சேமிப்புப் பகுதியில் உள்ள ஒரு சேமிப்புப் பகுதியின் துல்லிய படி.

**Image control - படக் கட்டுப்பாடு :** இது செவ்வக வடிவப் பகுதி. இதில் படக் கோப்புகள் அமைந்திருக்கும். வரைகலையில் பயன்படுவது.

**Image processing -** a method of inputting two dimensional images to a computer and later enhancing or analyzing the imagery into a meaningful form to the user. Eg. Enhancement of drawings for animation, computer - aided - models. **படமுறையாக்கல் :** ஒரு கணிப்பொறிக்கு இரு பருமப் படங்களைச் செலுத்திப் பயனாளிக்கு உதவும் வகையில், அவற்றைப் பொருள் உள்ள வடிவத்தில் மாற்றுதல். எ.டு எழுச்சி யூட்டும் வரைபடங்களை உருவாக்கல், கணிப்பொறிவழி மாதிரிகள் அமைத்தல்.

**Imis, integrated management information system - ஐஎம்ஐஎஸ் :** ஒருங்கிணை மேலாண் தகவல் தொகுதி, ஒமேததொ.

**Immediate access -** a store in which information got back at once. **உடன் அணுக்கம் :** செய்தி உடன் கிடைக்கும் சேமகம்.

**Immediate access store -** a storage device having immediate access to data. **உடன் அணுக்கச் சேமிப்பு :** தகவலுக்கு உடன் அணுக்கமளிக்கும் கருவியமைப்பு.

**Immediate address -** the value of an operand contained in the address part of an instruction. **உடனறி முகவரி :** கட்டளையின் முகவரிப் பகுதியிலுள்ள செயலிடத்தின் மதிப்பு.

**Immediate data -** data appearing at once. **உடனறிதகவல் :** உடன் தோன்றும் செய்தி.

**Implement -** carry out something, eg. Plan. **நிறைவேற்று :** எ-டு திட்டம்.

**Implementation -** the procedures involved in installing and testing hardware and software in computer systems. **நிறைவேற்றல் :** கணிப்பொறித் தொகுதிகளில் மென்பொருள், வன்பொருள் ஆகியவற்றைப் நிலைநிறுத்தலும் ஆய்ந்து பார்த்தலும் இவற்றிற்குரிய செயல்முறைகளாகும்.

**Inaiya tamil - இணைய தமிழ் :** ஒரு மின்நூல். 2000 ஜனவரி முதல் வாரத்தில் வெளியிடப்பட்டது. ஆறாந்திணையை அரிதில் விளக்கும் அறிமுக நூல்.

**Incident -** failure to be rectified. **நேர்ச்சி :** திருத்தப்பட வேண்டிய தவறு.

**Inconsistency -** a contradictory data condition defected by software. **இசைவின்மை :** மென்பொருளால் கண்டறியப்படும் முரண்பட்ட தகவல் நிலைமை.

**Increment - உயர்வு :** குறித்த அளவுக்கு முழு எண்ணை மதிப்பில் உயர்த்தும் பயனிலையும் பெயர்ச் சொல்லும்.

**Indentation - ஒதுக்கிச்செய்தல்:** இடைவெளி விட்டுச்செய்தல். பொதுவாக, இது பத்திக்குப் பயன்படுவது. இதனால் ஆவணத்தை எளிதில் படிக்க இயலும். ஒ.**justification.**

**Index -** 1) a table of reference held in memory in some key sequence : eg. Items in a file. 2) a number used to select a particular item from array of items found in memory. **அட்டவணை :** அடைவு திறவுத்தொடர் வரிசையில் நினைவகத்திலுள்ள பார்வை அட்டவணை. எ-டு கோப்பிலுள்ள இனங்கள். குறியீட்டெண் :

நினைவகத்தில் காணப்படும் இன நெடுவரிசையிலுள்ள குறிப்பிட்ட இனத்தைத் தேர்ந்தெடுக்கப் பயன்படும் எண்.

**Index arithmetic unit -** a section of a computer doing index calculations. (addition, subtraction) **குறியீட்டு எண்கணித அலகு :** குறியீட்டுக் கணக்கீடுகள் (கூட்டல், கழித்தல்) செய்யும் கணிப்பொறியின் பகுதி.

**Indexed address -** variable address. **குறியிட்ட முகவரி :** மாறு முகவரி.

**Indexing -** a method used to retrieve information from a table in memory or file on a direct access store. **அட்டவணையிடல் :** நேரடி அணுக்கச் சேமிப்பிலுள்ள நினைவகம் அல்லது கோப்பில் அட்டவணை உண்டு. இதிலிருந்து தகவலைப் பெறும் முறை.

**Index marker -** the beginning and end of each track in a disk. **அடைவுக்குறிப்பி :** ஒரு வட்டிலுள்ள ஒவ்வொரு தடயத்தின் தொடக்கமும் முடிவும்.

**Index point -** reference point. **குறியிடல்புள்ளி :** பார்வைப் புள்ளி

**Index register -** a register having a modifier to enable data to be indirectly addressed. **குறியீட்டுப் பதிவகம் :** மாற்றியமைப்பியைக் கொண்டுள்ள பதிவகம். இது தகவலை மறைமுகமாக இனங்காண்பது.

**Index variable -** a particular variable. **குறியீட்டு மாறி :** ஒரு குறிப்பிட்ட மாறி

**Index variable, steps in - குறியீட்டு மாறியின் படிகள் :** இதிலுள்ள நான்குபடிகள் பின்வருமாறு : 1) தொடக்க மதிப்பு தொடங்கும் பொழுது, இம்மாறி முழு எண்ணாகவே இருக்கும். 2) இம்மாறியின் மின்னோட்டமாறி, இறுதி மதிப்போடு ஒப்பிடப்பட வேண்டும். திரும்பத்திரும்ப நடைபெறும் செயல்கள், ஒன்றிற்கு மேற்பட்டதாக இருக்க வேண்டும் என்பதை முடிவுசெய்ய இது தேவை. 3) விடை 'ஆம்' எனில், உடன் தேவையான செயல்களைச் செய்ய வேண்டும். 1 என்னும் வகையில் குறியீட்டு மாறியை உயர்த்துக. இரண்டாம் படி நிலைக்குச் சென்று, மீண்டும் சரிபார்த்தலைச் செய்க. 4) விடை 'இல்லை' எனில், திரும்பத் திரும்பச் செய்யும் நடைமுறைகள் முடிவுற்றன என்பது பொருள்.

**Index word -** the word used to address data stored in a table in memory. **குறியீட்டுச் சொல் :** நினைவக அட்டவணையிலுள்ள தகவலை இனங்காண பயன்படும் சொல்.

**India internet world 2000 - இந்திய இணைய உலகம் 2000 :** இது ஒரு மாநாடு. 2000 செப்டம்பர்த் திங்கள் தில்லியில் பிரகதி திடலில் நடைபெற்றுப் பொது மக்கள் கலந்து கொண்ட மாநாடு.

**Indicator -** 1) a lamp on a peripheral unit 2) a device set when a specified condition occurs. It may be tested by a programme for initiating an appropriate course of action. **நிலைகாட்டி :** 1) வெளிப்புற அலகிலுள்ள விளக்கு. 2) குறிப்பிட்ட நிலைமை உருவாகும் பொழுது அமைக்கப்படும் கருவியமைப்பு, உரிய செயல் முறையைத் துவக்க, நிகழ்நிரலால் இதை ஆய்ந்து பார்க்க இயலும்.

**Indicator chart -** a chart used by a programmer during the logical design and coding of a programme. This procedure records details about the use of indicators in the programme. **நிலைகாட்டிப்படம் :** முறைமை வடிவமைப்பிலும் நிகழ்நிரல் குறிமுறையாக்கலிலும் நிகழ்நிரலர் பயன்படுத்தும் படம். இச்செயல் முறை நிகழ்நிரலிலுள்ள நிலை காட்டிகளைப் பயன்படுத்துவது பற்றிய விவரங்களைப் பதிவு செய்யும்.

**Infinity -** any number larger than the maximum number, a computer can store this number in any register. **முடிவிலி :** கந்தழி. பெரும எண்ணைவிடப் பெரியதாக உள்ள எண். எப்பதிவகத்திலும் இந்த எண்ணைக் கணிப்பொறி சேமித்து வைக்க வல்லது.

**Infix notation -** a notation used for representing logical operators. In these operations the operator is written between the operands, eg. A & b. Here & represents the operation ‘and'. **உள்ளமை குறிமானம் :** முறைமைச் செயல்களைக் குறிக்கப் பயன்படுவது. இச்செயல்களில் செயலி, செயலிடங்களுக்கிடையே எழுதப்படும். எ-டு a& b. இங்கு & என்பது செயல் and ஐக் குறிக்கும். **Informatics, infomology -** the study of processing data to provide information. **தகவலியல் :** செய்தியளிக்க முறையாக்கப்படும் தகவல்கள் பற்றி ஆராயுந்துறை.

**Information -** that which got from the processing of data. **செய்தி :** தகவல்களை முறையாக்குவதிலிருந்து பெறப்படுவது.

**Information bits -** characters or digits. **செய்தி நுண்மிகள் :** உருக்கள் அல்லது இலக்கங்கள்.

**Information channel -** the hardware used in a data transmission link between two terminals. **செய்தி வழி :** இரு முனையங்களுக்கிடையே தகவல் செலுத்தும் இணைப்புக்காகப் பயன்படும் வன்பொருள்.

**Information processing -** data processing. **செய்தி முறையாக்கல் :** தகவல் முறையாக்கல்

**Information provider, ip - செய்தியளிப்பவர், செ.அ :** காட்சித்திரையில் காட்ட நிறையச்செய்திகளை வழங்கும் ஆள் அல்லது அமைப்பு.

**Information retrieval - செய்தி மீட்பு :** பயனாளிகள் அணுகுவதற்கு ஏற்றவாறு செய்திகளை முறையாக்கல், எ-டு நூலகப் பணிகள்.

**Information society - செய்திச் சமுதாயம்** : வருங்காலச் சமுதாயம், மின்னணுக் கருவியமைப்புகள் வழியாகத் தொடர்பு கொள்வது.

**Information technology -** பா.ா.

**Information theory - செய்திக் கொள்கை :** ஒரு செய்தித் தொடர்பு வலையமைவில் செய்திச் செலுத்தும் வீதம் பற்றிய கருத்துத் தெரிவு.

**Infotech park - செய்தித் தொழில் நுட்ப இயல் பூங்கா :** தகவல் தொழில்நுட்ப வளர்ச்சிக்காக உள்ளது. எ-டு தரமணி டைடல் பூங்கா.

**Inherited error -** an error in a result attributed to some previous stage of processing. Eg. In a single - step operation an error carried thro from a previous step **வழிவரு பிழை :** முன்னரே நடைபெறும் முறையாக்கலினால் கிடைக்கும் முடிவிலிருந்து உண்டாகும் பிழை. எ-டு ஒருபடிச்செயலில், முன்னரே உள்ள படியிலிருந்து பிழை தொடர்கிறது.

**Inhibit-prevent-தடு:** நிறுத்து.

**Inhibiting signal -** a signal preventing an operation from being performed.

**Initial instructions - தொடக்க அறிவுறுத்தல்கள் :** ஒரு கணிப் பொறியில் சேமித்து வைக்கப்பட்டுள்ள நடைமுறைச் செயல்கள் நிகழ்நிரலைச் சுமை யேற்றப் பயன்படுவது.

**Initialization -** a process carried out at the beginning of a programme by suitable means.

**தொடங்கல் :** தகுந்த வழி வகைகளால் ஒரு நிகழ்நிரலில் தொடக்கத்தில் நிறைவேற்றப் படும் செயல்.

**Inkjet printer -** a printer using a technique of projecting droplets of ink at paper to form the required image.

**மைப்பீச்சு இயற்றி :** வேண்டிய உருவை உருவாக்கத் தாளில் மைத்துளிகளைத் தெளிக்கும் நுட்பத்தைக் கொண்ட அச்சியற்றி. ஒ. **Laser printer.**

**Inkjet printer, technique of - மைப்பீச்சு அச்சியற்றியின் நுட்பம் :** இதன் அச்சுத் தலையில் பல துளைகள் இருக்கும். ஒருங்கினை தடையளிப்பி விரைவாக வெப்பப்படுத்தப்படும். இது வெப்பம் அடையும்பொழுது, அதற்கருகிலுள்ள மை ஆவியாகித் துளைவழியாக வெளிவரும்; தலைக்கு அருகிலுள்ள தாளில் புள்ளியை உண்டாக்கும்.

ஓர் உயர்பகுப்புத்திறனுள்ள மைப்பிச்சு அச்சியற்றியில் 50 துளைகள் இருக்கும். ஓர் அங்குலத்திற்கு 300 புள்ளிகளை அச்சியற்றுபவை பன்மத் தலைகளைக் கொண்டவை. ஒரு தலை ஒரு நிறத்திற்கு. இதனால் வண்ண அச்சிடல் எளிதாகும். அச்சியற்றும் விரைவு ஒரு வினாடிக்கு 120 உருக்கள்.

**Input -** information fed into a computer

**உட்பலன் :** உட்பாடு. கணிப்பொறியினுள் செலுத்தும் செய்தி. ஒ. **Output.**

**Input box - உட்பலன் பெட்டி :** இது பயனாளியிடமிருந்து கட்டளையைப் பெறப் பயன்படுவது.

**Input box function - உட்பலன் பெட்டிச் சார்பலன் :** இப்பெட்டியிலிருந்து பெறப்படும் விளைவு. இதற்கு இப்பெட்டி உதவுகிறது.

**Input device -** the device sending data into a computer eg. Mouse.

**உட்பலன் கருவியமைப்பு :** கணிப்பொறிக்குள் தகவலைச் செலுத்தும் கருவியமைப்பு. எ-டு சுட்டெலி. ஒ. **Output device.**

**Input devices - உட்பலன் கருவியமைப்புகள் :** இவை பின்வருமாறு விசைப்பலகை, சுட்டெலி, கட்டுப்பாட்டுக் கோல்.

**Input tag - உட்பலன் ஒட்டு :** இதன் இயல்புகள் : வகை, பெயர், அளவு, மதிப்பு. <article data-mw-proofreadpage-wrapper=""><header data-mw-proofreadpage-wrapper=""></header><footer data-mw-proofreadpage-wrapper=""></noinclude></footer></article> சுற்று. இதில் படிகப் பெருக்கிகள், தடையளிப்பிகள், இரு முனை வாய்கள், மின்ஏற்பிகள் ஆகியவை எல்லாம் சேர்ந்து ஒரு சிறிய தனித்துள்ள சிலிகன் நறுவலில் அமைந்திருக்கும். இச்சுற்று வந்த பின்னரே கணிப்பொறி விரைந்து வளரலாயிற்று. இந்த ஒருங்கிணை சுற்று நறுவல் 1964 இல் புனையப் பெற்றது.

**Intel - இண்டல் :** அமெரிக்க நிறுவனம் நுண்முறையாக்கிகள் உருவாக்குபவர்கள். இதன் மூளை ஆண்ட்ரூ குரோவ், எ-டு இண்டல் 8080, 8086, 8088. பா. **Grove.**

**Intel e-business forum - இன்டல் மின்வணிக அரங்கம் :** மும்பையில் செயல்படுவது, இட்டியத்தை உருவாக்கியுள்ளது. இணைய வளர்ச்சியில் அதிகம் நாட்டம் செலுத்திவருவது.

**Intelligent chip - நுண்ணறிவு நறுவல் :** மீயுணர்வுள்ள நறுவல் வகை. செயற்கை நுண்ணறிவைச் சார்ந்தது. நிறைவிலாக் காசோலைகளைப் படிக்கப் பயன்படுவது.

**Interactive programme - இடைவினை நிகழ்நிரல் :** வேறு பெயர் பயனாளி நட்பு நிகழ்நிரல். இதில் பயனாளிகளுக்கும் எந்திரமிடத்திற்கிடையே துலங்கல் தகவல் தொடர்புகள் உடனுக்குடன் கையாளப்படும்.

**Interface -** a circuit or device connecting a peripheral device to a computer in order to enable the transfer of data between the two. **இடைமுகம் :** இது ஒரு மின்சுற்று அல்லது கருவியமைப்பு. கணிப்பொறியோடு வெளிப்புறக்கருவியமைப்பை இணைப்பது. இதனால் இவ்விரு கருவியமைப்புகளுக்கிடையே தகவல் மாறுகை நடைபெறும்.

**Interface standards - இடைமுகத்திட்ட அமைப்புகள் :** மையச்செயலகம், நினைவகம் ஆகிய இரண்டினோடு திட்டப்படுத்திய வகையில் பல உட்பலன் /

வெளிப்பலன் கருவியமைப்புகள் இணைக்கப்படுகின்றன. இவையே இடைமுகத் திட்ட அமைப்புகள். எ-டு ஆர்எஸ் 232c

**Interlace - இடைப்பின்னல்** : சேமிப்பு நாடாவில் ஒன்றிலிருந்து மற்றொன்று பிரிக்கப்பட்ட இடங்களுக்கு அடுத்தடுத்து நினைவக இட எண் வழங்கல். அணுக்க நேரத்தைக் குறைக்க இது செய்யப்படுகிறது.

**Inter leaving - இடைவிடல்** : இது ஒரு நுணுக்கம். பன்ம நிகழ்நிரலாக்கலில் பயன்படுவது. இதில் ஒரு நிகழ்நிரலின் துண்டுகள் மற்றொரு நிகழ்நிரலில் செருகப்படும். ஒரேசமயம் இரு நிகழ்நிரல்களையும் நன் முறையில் இயக்க இம்முறை உதவுவது.

**Interlock - இடைப்பூட்டு** : வன்பொருள் அல்லது மென்பொருளில் நிறைவேற்றப்படும் பொறிநுட்பம். ஒரு கணிப்பொறித் தொகுதியில் ஒன்றிற்கு மேற்பட்ட முறைகளை ஒருங்கிணைக்கப் பயன்படுவது.

**Interlude - இடைநிகழ்வு** : சிறியனவாகவுள்ள தொடக்கச் செயல்களைச் செய்ய வடிவமைக்கப்பட்ட நிகழ்நிரல். எ-டு குடும்ப மேலாண்மை.

**Internal arithmetic - உள்எண் கணிதம்** : மையச் செயலகத்தில் கணிப்பொறி எண்கணித அலகில் நடைபெறும் எண்கணிதச் செயல்கள்.

**International protocol address - அனைத்துலகத் திட்ட மரபு முகவரி.** பா. **Network addressing.**

**International standards organization -** பா. **Iso.**

**Internet-இணையம்** : சுருக்கம் net. வலையமைவுகளின் வலையமைவு இணையமாகும். சிறியனவாகவும் பெரியனவாகவுமுள்ள பல வலையமைவுகள் உலகம் முழுவதும் இணைக்கப்படுகின்றன. இன்று இணையத்தில் 50 மில்லியன் கணிப்பொறிகள் உள்ளன. 100 மில்லியன் பயனாளிகள் உள்ளனர். இணையத்துடன் தொடர்பு கொண்டு, உலக அளவில் செய்தித் தொடர்பு கொள்ளலாம். கணிப்பொறி வளர்ச்சியில் ஓர் எல்லைக்கல் இணையம். இது உலகை ஒரு சிற்றூராக மாற்றியுள்ளது. உலகத்தைப் பார்க்கும் மாயச்சாளரமாகவும் உள்ளது. ஒ. **World wide web.**

**Internet account - இணையக் கணக்கு :** இது தொடங்குவதற்குரியது.

**Internet, advantages of - இணைய நன்மைகள் :** இவை பின்வருமாறு : 1) இது ஒரு தகவல் களஞ்சியம், இதில் மில்லியன் கணக்கு அளவுள்ள தகவல் பக்கங்கள் உள்ளன. 2) எந்தத் தகவலை வேண்டும் மென்றாலும் எப்பொழுதும் தெரிந்து கொள்ளலாம். கல்வி, விளையாட்டு, தேர்வு முடிவுகள் 3) இணையப் பக்கங்களில் பெரும்பான்மைப் பொத்தான்களைக் கொண்டுள்ளன. இவற்றைச் சொடுக்கக் கீழிறக்கம் ஏற்படும். 4) இதில் நிறைய மென்பொருள் உள்ளது, இதில் எதை வேண்டுமானாலும் ஒருவர் கணிப்பொறிக்கு மாற்றிப் பயன்படுத்திக் கொள்ளலாம். 5) டெல்நெட் (தொலை இணையம்) என்பது ஒரு கருவியமைப்பு, இதன்மூலம் தகவல் அணுக்கம் பெறலாம். எக்கணிப்பொறியிலும் சேமித்து வைத்த நிகழ்நிரல்களை ஓட விடலாம். 6) மின்னஞ்சல் மூலம் பல பயனாளிகளுடன் உலக அளவில் தொடர்பு கொண்டு, பயனுள்ள கலந்துரையாடல் நடத்தலாம். 7) நல்ல வணிக வாய்ப்புள்ளது.

**Internet booth, community - சமுதாய இணைய நிலையங்கள் :** நன்கு வகுக்கப் பட்டுள்ள திட்டத்தில் தமிழக அரசால் 1500 நிலையங்கள் அல்லது சாவடிகள் அமைக்கப்படும். இலண்டனில் அமைந்துள்ள வோர்ல்டுடெல் என்னும் நிறுவனத்துடன் இணைந்து தமிழக அரசு இதைச் செயற்படுத்த உள்ளது. 2005 ஆம் ஆண்டிற்குள் இந் நிலையங்கள் 10,000 என்னும் அளவுக்கு உயரும் (1999).

**Internet connections in india - இந்தியாவில் இணைய இணைப்புகள் :** நாஸ்கம் அளவைப்படி 1988 நவம்பர் வரை 17 இலட்சம், 1999 டிசம்பர் வரை 61 இலட்சம். பயனாளிகள் 2.1 மில்லியன். இணைய ஆற்றல் இனி இந்தியாவில் வளரவேண்டும். கம்பிவடத் தொலைக்காட்சி இணைப்புகளைப் பயன்படுத்தினால் இணையம் வரும் ஆண்டுகளில் 37 மில்லியன் வீடுகளை அடையலாம். தனியாள் கணிப்பொறி வளர்ச்சி 25% அளவே உள்ளது. 2004 க்குள் இது பலமடங்காகப் பெருகும்.

**Internet connection requirements - இணைய இணைப்புத் தேவைகள் :** அவையாவன: 1) கணிப்பொறி 2) தொலைபேசி 3) இருசெயலி 4) இணைப்புப் பணி வழங்குபவர்.

**Internet crimes - இணையக்குற்றங்கள் :** கணிப்பொறிக் குற்றங்கள். இவற்றிற்கு நிலையான தீர்வுகள் இல்லை.

சட்டங்களும் இவற்றை கட்டுப்படுத்த இயலா. அவ்வளவு சந்து பொந்துகள் உள்ளவை அவை. இக்குற்றங்களில் முதன்மையானவை 1) தகவல் திருட்டு. 2) ஒற்றறிதல் 3) பணவரவு அட்டையில் ஏமாற்றுதல். 4) பாலியல் படங்கள் 5) தீரவிரவாத அமைப்புகளின் ஆதிக்கம். இக்குற்றங்களால் ஆண்டுக்குப் பலகோடி ரூபாய் அளவுக்குப் பண இழப்பு ஏற்படுகிறது.

**Internet growth factors - இணைய வளர்ச்சிக் காரணிகள் :** இவை பின்வருமாறு. 1) தகவல் தேவை நாளுக்கு நாள் அதிகமாகி வருதல். 2) கேளிக்கை அவா

3) பொருளீட்டல்

**Internet, history of - இணைய வரலாறு** 1960 களில் அமெரிக்கப் பாதுகாப்புத் துறை, இணையத்தின் இன்றியமையாத் தேவையை உணர்ந்தது.இது தங்கள் நாட்டிலுள்ள கணிப்பொறி ஒருங்கிணைப்பையே நம்பி இருக்க வேண்டி இருந்தது. ஏதோ ஒரு காரணம் பற்றி, இவ்வொருங்கிணைப்பில் ஓர் வலையமைவு பழுதுபட்டால் முழு ஒருங்கிணைப்பும் சிதையும்.ஆகவே,கணிப்பொறி ஒருங்கிணைப்புத்திட்டம் ஒன்றை அது உருவாக்கியது.

இத்திட்டம் தகவல் தொடர்பு விதிகளைத் தொகுத்தது.இதனால் ஒரு கணிப்பொறி,மற்றொரு கணிப்பொறியோடு தொடர்பு கொள்ளலாம் என்னும் நிலை உருவாயிற்று.இதில் ஒரு வலையம் (net) பழுதுபட்டால் ஏனைய வலையங்கள் வேலைசெய்யும்.இது நன்கு பரவியது.வணிக அமைப்புகள்,பல்கலைக்கழகங்கள் முதலிய கல்வி நிலையங்கள் இணையத்தைப் பயன்படுத்திப் பெருநன்மை பெறலாயின.ஆக,இணையம் 40 ஆண்டு நடைமுறை வரலாறு உடையது. தமிழக அரசும் 1999 இல் தமிழ் இணையத்தைத் தொடங்கியுள்ளது.ஆந்திராவும் இதில் முன்னோடியாக உள்ளது.பிற மாநிலங்களும் இதில் நாட்டம் செலுத்தி வருகின்றன. இணையம் இன்று உலகத்தைத் தன் கைக்குள் வைத்துள்ளது.இதன் தந்தை விண்டன் செர்ஃப்.பா.**computer, history of.**

**Internet magazines, tamil - தமிழ் இணைய இதழ்கள் :**' பல இதழ்கள் உள்ளன.மேலும் பல வர உள்ளன. எ-டு மின்னம்பலம். அனைத்துலகத் தமிழ் இதழ். சென்னையிலுள்ள டிஷ் நட் வெளியிடுகிறது. பா. **Tamil internet**.

**Internet pirates - இணைய திருடர்கள் :** இணையக் குற்றங்கள் செய்பவர்.இவற்றைப் போக்க டிவிடி வட்டு உதவும்.

**Internet service provider, isp - இணையப்பணி வழங்குபவர், இபவ:** இந்த அமைப்பு குறிப்பிட்ட கட்டணத்தில் தங்கள் இணையத்தைப் பயன் படுத்திக் கொள்ள பயனாளிக்கு அனுமதி வழங்கும். இதைப் பயன்படுத்துபவர் இந்த அமைப்பில் தன் பெயரைப் பதிவு செய்துகொள்ள வேண்டும். பதிவு முடிந்தவுடன் இப்பணி வழங்குபவர் பின் வருவன வற்றைப் பயன்படுத்துபவர்களுக்கு அளிப்பார்.

**1) பயனாளி :** தனித்த பெயர்

**2) கடவுச் சொல் :** மறைவு குறிமுறை

**3) மின்னஞ்சல் முகவரி** மின்னஞ்சல்களை அனுப்பப் பெற. **4) அணுக்கத் தொலைபேசி எண்கள்:** இவை இணைப்பி வழங்குபவரிடம் தொடர்பு கொள்ளப்பயன்படும்.

**Interpreter - மொழிபெயர்ப்பி :** இது ஒரு மொழிபெயர்ப்பு அமைவு நிகழ்நிரல்; உயர் மொழி நிகழ்நிரலை எந்திர மொழி நிகழ்நிரலாக்குவது. இதில் செயல் விரிவாகவும் விளக்கமாகவும் நடைபெறும்.

**Interrupt system -** the means of interrupting a programme and proceeding with at a later time. **குறுக்கீட்டு அமைப்பு :** ஒரு நிகழ்நிரலைக் குறுக்கிட்டு நிறுத்திப் பின் நடைபெற விடும் வழிவகை.

**Intranet - அக இணையம் :** இணையத் தொழில் நுட்பத்தைப் பயன்படுத்தி தொழில் துறையை வளர்த்தல். இணையம் உலகளவில் நடைபெறுவது. ஆனால், அகஇணையம் ஒரு நிறுவனத்திற்குள் மட்டுமே நடைபெறுகிறது. இதன் முதன்மை நோக்கம் வேலைகளை ஒழுங்குப்படுத்தி நேரத்தைச் சேமித்துச் செலவுகளைக் குறைத்து ஆதாயத்தை அதிக மாக்கல்.

**Inversion -** the process of creating an inverted file from a file organized in some different way. **தலைகீழாதல் :** சிறிது வேறுபட்ட வழியில் உருவாக்கிய கோப்பிலிருந்து ஒரு தலைகீழான கோப்பை உருவாக்கும் முறை.

**Inverter -** a logic element with one binary input digit signal to carry out the logical function of negation. **தலைகீழாக்கி :** ஒருமுறை

மைக்கூறு, ஓர் இரும உட்பலன் குறிகையைக் கொண்டது. இல்லை எனும் முறைமைச் செயலைச் செய்வது.

**Invigilator -** a device checking the performance of a control unit. **மேலாளி :** ஒரு கட்டுப்பாட்டு அலகின் செயல்திறனைச் சரிபார்க்கும் கருவியமைப்பு.

**Invisible failure -** a failure of either software or hardware. It does not have any noticeable effect on the operating system. **காணாப்பிழை :** மென்பொருள் அல்லது வன்பொருள் பிழை, இயங்குதொகுதியில் இது பார்க்கத்தக்க விளைவை உண்டாக்காது.

**Isdn, international services digital network - அனைத்துலக இலக்கப் பணி இணையம், அஇபஇ :** இது மிக முன்னேறிய தொலைத் தொடர்பு வலையமைவு. உயர்விரைவும் செலவு நன்மையுள்ள வலை யமைவை அமைக்க உதவுவது. வருங்கால உலகின் மெய்யான தொலைத் தொடர்புத் தேவைகளுக்குரிய தீர்வை அளிப்பது. இது நம்புமை அளிப்பது, உடன் தகவல் இணைப்பைத் தருவது. மிக விரைவான ஒப்புமை இரு செயலியைவிட (மோடம்), இந்த இணைப்பி பல மடங்கு விரைவுள்ளது. தற்பொழுது உலகிலுள்ள அகக் கட்டமைப்பு மூலமோ குரல் மூலமோ நகல் மூலமோ நடைபெறுவது. பா. **Csi, vsnl, isp.**

**Iso, international standards organization - அனைத்துலகத் தர அமைப்பு, அதஅ :** ஓர் அனைத்துலக முகமையகம். அமெரிக்க அன்சைபோல் (ansi - american national standards institute) சிறப்பாக இயங்குவது தகவல் பரிமாற்றத்திற்குரிய தரங்களை உருவாக்கி வருவது. எ-டு உருக்குறிமுறை.

**It, information technology - ஐடி, தகவல் தொழில்நுட்பவியல் :** மின்னணுவியல், கணித்தல், தொலைத்தொடர்பு ஆகிய மூன்றின் கூட்டு. இதன் மூளைக் கணிப்பொறி. வாழ்க்கையின் அனைத்து துறைகளிலும் பெரும் புரட்சி உண்டு பண்ணி வருவது. நாம் தற்போது தகவல் தொழில்நுட்ப காலத்தில் வாழ்கின்றோம். வருங்காலத்தில் தகவல்கள் பெருகுமே தவிரக் குறையா.

**It act - தொழில்நுட்பவியல் சட்டம் :** தொழில்நுட்பவியலில் நடைபெறும் குற்றங்களைத் தடுக்க இந்திய அரசு இயற்றியச் சட்டம். ஐ. நா. முன்மாதிரிச் சட்டத்தை அடிப்படையாகக் கொண்டு இயற்றப்பட்டது.குறிப்பாக இணையக் குற்றங்களைத்

தடுக்க இச் சட்டம் கொண்டு வரப்பட்டுள்ளது. 17-10-2000 அன்று நடைமுறைக்கு வந்தது.

**It business network - தொழில்நுட்ப வணிக இணையம் :** 19-10-2000 அன்று இந்தியாவும் ஆஸ்திரேலியாவும் ஒரு முறை சாரா உடன்பாட்டுக் குறிப்பாணையில் கையெழுத்திட்டன. இது தொழில்நுட்ப வணிகம் பற்றியது. இதற்கு இணையம் அமைக்கப்படும். இருநாடுகளிலுள்ள தொழில்நுட்ப நிறுவனங்கள் தங்கள் தொழிலைப் பெருக்க இவ்விணையம் உதவும்.

**Item -** a single unit of information **தகவல் இனம் :** ஒரு தனிச் செய்தியலகு.

**Item advance -** a method used for operating successively upon a group of items in memory. **தகவல் இனம் முற்பாடு :** நினைவகத்திலுள்ள இனத் தொகுதியில் அடுத்தடுத்து மேற்கொள்ளும் செயலுக்குரிய முறை.

**Item design** - the designing of a record or a file in order to achieve efficient processing. **தகவல் இன வடிவமைப்பு :** பயனுள்ள முறையாக்கலைப் பெற ஒரு கோப்பு அல்லது ஆவணத்தை வடிவமைத்தல்.

**Iteration** - a repetition of one or more statements in a programme : eg. A sequence of statements in a do loop. **திரும்பத்திரும்பச் செய்தல் :** ஒரு நிகழ்நிரலில் ஒன்றுக்கு மேற்பட்ட கூற்றுகளை மீண்டும் மீண்டும் செய்தல். எடுத்துக்காட்டு : செய்வளையத்தில் கூற்றுத் தொடர் வரிசை

**Iteration, kinds of - திரும்பத் திரும்பச் செய்தலின் வகைகள் :** 1) வரம்புள்ளவை, 2) வரம் பற்றவை.

**J**

**Jam - a machine fault- பழுது :** எந்திரப் பிழை.

**Java - ஜாவா :** உயர்நிலை மொழி.

**Java bug - ஜாவா பிழை** : ஜாவா மொழியில் ஏற்படும் குறை. நிகழ்நிரல்களைச் சிதைப்பது.

**Jvm, java virtual machine - ஜேவிஎம்**, ஜாவா மாய ஏந்திரம்.

**Job** - a programme and data to be processed by a computer. **வேலை :** நிகழ்நிரலும் தகவலும், கணிப்பொறியினால் முறையாக்கப்பட வேண்டியது.

**job control language, jcl - வேலைக் கட்டுப்பாட்டு மொழி, வேகமொ** : ஓர் இயங்கு தொகுதியோடு தொடர்புள்ள மொழி.

**job control programme** - the instructions to the operating system stating the conditions necessary to run a job, eg. Input | output requirements. **வேலைக் கட்டுப்பாட்டு நிகழ் நிரல் :** இயங்கு தொகுதிக்குரிய கட்டளைகள் வேலையைச் செய்வதற்குத் தேவையான நிபந்தனைகளைக் கூறுவது எடுத்துக்காட்டு : உட்பலன் / வெளிப்பலன் தேவைகள்.

**joss** - a time sharing language. **ஜாஸ் :** நேரப்பகிர்வு மொழி.

**jovial** - a programming language based on international algebraic language, **ஜோவியல் :** நிகழ்நிரலாக்கும் மொழி, அனைத்துலக இயற் கணித மொழியின் அடிப்படையில் அமைந்தது.

**journal** - a file containing messages within an operating system.

**தாள்குறிப்பு** : ஓர் இயங்கு தொகுதியிலுள்ள கோப்பு: செய்திகளைக் கொண்டது. **Joystick - a vertical lever moving the cursor vertically or horizontally. கட்டுப்பாட்டுக்கோல் :** செங் குத்துக்கோல் குறிப்பியைச் செங்குத்தாக அல்லது கிடைமட்டமாக நகர்த்துவது.

**Jump - an instruction in machine code causing a computer to stop executing a programme to move to another part of the programme. தாவல்:** எந்திரக் குறிமுறையிலுள்ள கட்டளை ஒரு நிகழ் நிரல் நிறைவேறுவதை நிறுத்தி, அதை மற்றொரு நிகழ்நிரலின் ஒரு பகுதிக்குச் செல்லுமாறு கணிப்பொறியைச் செய்வது.

**Junk- garbled data, eg, signals accumulating in communications. கூளம் :** குழம்பிய தகவல் எடு செய்தித் தொடர்பில் குவியும் குறிகைகள்.

**Justification- spacing of text or graphics to produce an even vertically aligned right or left hand margin. நெருக்கிச் செய்தல் :** பாடம்

அல்லது வரைகலைக்கு இடைவெளிவிட்டுச் செங்குத்தாகவும் சமமாகவும் வரிசையாகவும் உள்ளதுமான விளிம்பு அல்லது ஓரத்தை இடப்பக்கம் அல்லது வலப்பக்கம் அமைத்தல்.ஒ.**indentation.**

## K

**Kanian family of e-zines - கணியன் குடும்ப மின்னிதழ்கள் :** இவை நான்கு : 1) தமிழ் நாளிதழ் 2) சினிமா திரை யுலக இதழ் 3) அருள் ஆன்மிகம் 4) மாணவன் மாணவர் இதழ்.

**Kanithamizh sangam - கணித்தமிழ்ச் சங்கம் :** சென்னையில் செயற்படுவது நோக்கம் கணிப் பொறித் தமிழை வளர்ப்பது. தலைவர் அ. இளங்கோவன், செயலர் ஆண்டோ பீட்டர் கணி தமிழ் 2001 என்னும் நான்கு நாள் விற்பனை விழாவைச் சென்னையில் நடத்தியது (24-12-2000 - 27-12-2000).

**Katiesoft- கேட்டிசாஃப்ட் :** ஒரு பயன்பாட்டகம் ஒரே சமயத்தில் 4 தளங்களைக் கண்ணோட்டமிடவும் பார்க்கவும் பயன்படுவது.

**Kbps - kilobits per second.** கேபிபிஎஸ் : **ஒரு வினாடிக்கு இத்தனை கிலோபிட்டுகள்.**

**Kcs - a thousand characters** per second. கேசிஎஸ் : **ஒரு வினாடிக்கு ஆயிரம் உருக்கள்.**

**Keely, bert - பெர்ட் கீலி:** மைக்ரோ சாப்ஃட் நிறுவனத் தின் சிற்பி. பலகை வடிவத் தனியாள் கணிப்பொறியை வடிவமைத்து அறிமுகப்படுத்த உள்ளார். பெர்ட் கீலி புகைப்படத்துடன்

**Kernel -** 1) a set of procedures controlling the real resources in a virtual machine. 2) a message handling facility of a control system. **தகவல் கரு** : 1) ஒரு மாய எந்திரத்தில் மெய்யான மூலங்களைக் கட்டுப்படுத்தும் நடவடிக்கைத் தொகுதி 2) ஒரு கட்டுப்பாட்டுத் தொகுதியின் செய்தியைக் கையாளும் வசதி.

**Key - 1)** the common field within a record utilized in identifying an item. 2) an individual button of a keyboard used to generate a code to represent a character. **திறவு :** 1) ஓர் ஆவணத்திலுள்ள பொதுப்புலம்; ஒரு தகவல் இனத்தை அடையாளமறியப் பயன்படுவது. 2) விசைப்பலகையின் தனிப் பொத்தான்; ஓர் உருவைக் குறிக்க ஒரு குறிமுறையை இயற்றுவது.

**Keyboard - விசைப்பலகை:** திறவுப்பலகை. ஓர் உட்பலன் கருவியமைப்பு. இதிலுள்ள சொடுக்கிகள் ஒரு குறிமுறையை இயற்றுவது. இக்குறிமுறை தனி உருக்களைக் கொண்டிருக்கும். இவை எழுத்து, இலக்கம், குறி, கட்டளை ஆகியவையாகும்.

**Keyboard events - விசை திறவுப் பலகை நிகழ்வுகள் :** இவை விசைப்பலகை உட் பலனைக் கண்காணிக்குமாறு நிகழ்நிரலுக்கு உதவுபவை. இந்த உட்பலன் நிகழ்நிரலுக்குச்செல்வது. தவிரத் தேவைப் பட்டால் உட்பலனைச் செல்லுபடியாக்குவது மாற்றுவது. இந்நிகழ்வுகளின் முதன்மை நோக்கம் உட்பலனைச் செல்லுபடியாக்கலே. பின்வரும் மூன்று நிகழ்வுகளும் விசைப் பலகையுடன் தொடர்புள்ளவை.

**1) திறவழுத்தல் (keypress) :** திறவு அழுத்தப்படும் பொழுது உண்டாவது.

**2) திறவுகீழ் (keydown) :** திறவு அழுத்தப்படும் பொழுது உண்டாவது.

**3) திறவுமேல் (keyup) :** திறவு விடுபடும் பொழுது உண்டாவது. தொழில் முறையில் உட்பலனைச் சரிபார்ப்பதற்குரிய கட்டுப்பாட்டை இந்நிகழ்வுகள் அளிக்கின்றன. **Keyboard shortcuts -திறவுப் பலகைக் குறுக்கு வழிகள்** : எந்நிகழ்நிரலுக்கும் இக்குறுக்கு வழிகளை உருவாக்கலாம். இதற்கு அப்பயன்பாட்டு உரையாடல் பெட்டிப் பண்புகளைப் பயன்படுத்த வேண்டும்.

**Key, primary -தொடக்கத்திறவு** : இத்திறவு ஒரு தகவல் தள அட்டவணையிலுள்ள ஆவணத்தைச் சிறப்பாக இனங்காண்பது. தொடர்புறு தகவல்தளங்களில் இத்திறவு ஒன்றுக்கு மேற்பட்ட புலங்களைக் கொண்டிருக்கும்.

**Keyword - the significant word in a phrase in information retrieval systems. Eg. In the title modern medicine, the word medicine is the keyword. திறவுச்சொல்** : செய்தி மீட்பு முறைகளில் ஒரு சொற்றொடரிலுள்ள சிறப்புச் சொல். தற்கால மருத்துவம் என்னுந் தலைப்பில் மருத்துவம் என் பது திறவுச்சொல்.

**Kilobard -கிலோபாஃட்** :ஒரு வினாடிக்கு ஓராயிரம் இருமிகள்.

**Kilburn, tom prof. -பேரா.டாம் கில்பர்ன்:** 1948இல் மான்செஸ்டரில் உள்ள முதல் கணிப்பொறியை அமைத்தவர். ஒரு நிகழ்நிரலை ஓடவிடவும் சேமிக்கவல்ல நினைவகத்தைக் கொண்டது இக்கணிப்பொறி.தற்கால முன்னேற்றங்கள் எல்லாம் இதனோடு

நெருங்கிய தொடர்புடையவை. கணிப் பொறிக் காலத்தின் மறக்கப்பட்ட முன்னோடி இவர்.

**Knowledge management - அறிவு மேலாண்மை :** தகவல் தொழில்நுட்பத்தின் உயிர் நாடி.

**Knowledge management, types of- அறிவு மேலாண்மை வகைகள் :** இப்பயிற்சி வகைகள் பின்வருமாறு : 1) உள் இணையத்தை அமைத்தல். 2) தகவல் களஞ்சியம் அமைத்தல். 3) முடிவுகளைச் செயல்படுத்தல் 4) குழுப்பணியை நிறைவேற்றல். 5) அறிவுப் பணியாளர் குழுவை உருவாக்கல். 6) புதிய அறிவுப் பங்களிப்புகளை நிறுவுதல். 7) அறிவு அடிப்படையில் அமைந்த பணிகளைத் தொடங்கல். 8) அகவல்லாண்மையின் மூலங்களைக் கண்டறிதல்.

**Krishnamoorthy v. Dr.-முனைவர். வி. கிருட்டினமூர்த்தி :** அண்ணா பல்கலைக் கழகத்திலிருந்து ஓய்வுபெற்ற பேராசிரியர், தகவல் தொழில் நுட்பவியல் அறிவுரையாளர். இவர்தம் சிறந்த பங்களிப்புகளில் ஒன்று பொன்மொழி. இது தமிழ்ச் சொல்முறை யாக்கி. இதில் இவர் 7000 சொல் வளமுள்ள அகர வரிசையை அடக்கியுள்ளார். இவற்றிற்கு இணையாக ஆங்கிலக் சொற்களையும் கொடுத்துள்ளார்.இது எழுத்துப் பிழையைத் திருத்த உதவுவது.இவர் ஒளியுரு அறிதல் மென் பொருள் உருவாக்குவதில் முழு மூச்சுடன் ஈடுபட்டுள்ளார்.

**K56flex - கே56பிளக்ஸ் :** 56 கேபிபிஎஸ்களில் வேலைசெய்யும் இருபண்பிகளுக்குரிய திட்ட அமைப்பு. ராக்வெல் அனைத்துலக கழகத் தாலும் லூசண்ட் தொழில் நுட்பங்களாலும் உருவாக்கப்பட்டது. 1998 க்கு பின் இதன் பெயர் வி-90.

## L

**Label - குறியம் :** இது எண்ணெழுத்து அடிப்படையில் அமைந்தது. புலப் பெயர்களைத் தெரிவிப்பது.

**Lace - துளையிடு :** அட்டை வரிசை.

**Language - a set of symbols,words and rules used to write a programme of instructions for a computer, eg. Basic.மொழி:**குறியீடுகள் சொற்கள் விதிகள் ஆகியவற்றைக் கொண்ட தொகுதி.கணிப்பொறிக்குரிய கட்டளை நிகழ் நிரலை எழுதப் பயன்படுவது. எ-டு.பேசிக்.

**Large scale integrated circuit,lsi circuit-பேரளவுத் தொகையாக்கு** ஒருங்கினை சுற்று,பேதொஒசு:**எதில் 30000 பகுதிகள் உண்டு.4ஆம்** தலைமுறைக் கணிப்பொறியில் பயன்படுவது.

**Large scale integration, lsi - a process of making integrated** circuits with between 100 and 5000 logic gates in the chip. பேரளவுத் தொகையாக்கல், பேஅதொ:**நறுவலில் 100 -5000 முறைமை வாயில்கள் உள்ள ஒருங்கிணை சுற்றுகளை அமைக்கும் முறை. இது நுண்முறையாக்கியில் உள்ளது.**

**Laser - லேசர் :** ரேடார் போன்று தலைப்பெழுத்துச் சுருக்கச் சொல். கதிர்வீச்சு தூண்டுமிழ்வு ஒளிப்பெருக்கம் laser, light amplification by.stimulated emission of radiation. ஆற்றல் வாய்ந்ததும் ஒருங்கிணைந்ததுமான ஒளிக்கற்றையை உருவாக்கவல்ல கருவி, கணிப்பொறிக்கு மூத்தது. பல துறைகளிலும் அருஞ் செயல்களைச் செய்து வருவது, எ-டு கண்ணறுவை, ஒளியச்சு.

**Laser memory - லேசர் நினைவகம் :**ஒருவகை கூர்மையான நினைவகம். லேசர் ஒளியால் உண்டாவது. Printer : லேசர் அச்சியற்றி : **இதில் மின்னணு முறையில் கட்டுப்படுத்தப் படும் லேசர் ஒளிக்கற்றை அச்சிடவேண்டிய உருவின் மேல் விழும். ஒளிகடத்தும் உருளையில் அச்சியற்றல் நடை பெறுவது. குறைவிரைவு லேசர் அச்சியற்றி ஒரு நிமிக்கு 4-16 பக்கங்கள் அச்சிடும். உயர் விரைவு அச்சியற்றி ஒரு நிமிக்கு 10,000 வரிகள் அச்சிடும். லேசர் அச்சியற்றியில் அச்சுத் தலை இல்லை. ஆகவே, இது தாக்கா அச்சியற்றி** எனப்படும். இதில் கிடைக்கும் வெளிப்பலன் மிக நேர்த்தியாக இருக்கும். ஒ.inkjet printer.

**Laser printing -லேசர் ஒளியச்சு :**லேசர் ஒளியால் நடை பெறுவது; கணிப்பொறிவழி நடை பெறுவது. அச்சுத்துறையில் ஒரு பெரும் மாற்றத்தை உண் டாக்கியது. பா. Deskto printing.

**Last in first out, lifo -கடைசியில் வந்தது முதலில் வருதல், கவமுவ :** ஒரு நினைவகத்தில் செய்தியைச் சேமிக்கும் மீட்கும் முறை. இதில் கடைசியில் சேமிக்கப் பட்ட தகவல் முதலில் மீட்கப்படும். ஒ. First in first out.

**Latency : the time delay required for an even to be initiated from the moment when the event is called.**

**உள்ளுறை காலம் :** ஒரு நிகழ்வு கோரப்படும் பொழுது, அது தொடங்கத் தேவைப்படும் தாமத நேரம்.

**Lattice file : தட்டிக் கோப்பு :** ஓர் இயங்கு தொகுதியிலுள்ளது. இதில் தனி ஆவணங்கள் ஒன்றிற்கு மேற்பட்ட உரிமையாளரைக் கொண்டிருக்கும்.

**Layout : வடிவரை :** ஒரு மின் சுற்றின் வடிவமைப்பு. அச்சுச் சுற்றுப் பலகையிலுள்ள பகுதி களின் வடிவமைப்பு.

**Leader : முன் செல்லகம் :** 1) துளையிடப்படாத நீள்தாள். தாள் நாடாச் சுருளில் பதிவு செய்யப்பட்ட தகவலுக்கு முன் செல்வது. இதில் ஊட்டத் துளைகள் மட்டுமே இருக்கும். 2) ஆவணத் தொகுதிக்கு முன் செல்லும் ஆவணம். தொகுதிக்குப் பொதுவான தகவலைத் தருவது. Leap frog tesi -தாவுதவளை
ஆய்வு : **நினைவகத்திலுள்ள நிகழ்நிரலால் நிறைவேற்றப் படும் ஆய்வு. வேறுபட்ட இடங்களில் இது மேலும் ஆய்வுகளை நடத்தும். பின் தான் மற்றொரு நினைவுப் பகுதிக்குச் செல்லும், ஏனைய இடங்களில் மேலும் ஆய்வுகளைத் தொடரச் செய்யும்.**

**Leg - கால்** : நடைமுறைச் செயலிலுள்ள ஒட்டு.

**Leibniz wheel - லிப்ளிஸ் ஆழி :** கூட்டல், கழித்தல், பெருக்கல், வகுத்தல் ஆகிய நான்கு அடிப்படைச் செயல்களைத் திருத்தமாகச் செய்ய வல்லது. அமைத்தவர் லிப்னிஸ் (1646 - 1716) ஜெர்மன் மெய்யறிவாளர், கணித அறிஞர். பா. Computer, history of .

**Length-நீளம் :** உருக்களின் எண்ணிக்கை சொல்லையேர் ஆவணத்தையோ உருவாக்குவது.

**Letter quality printer -எழுத்துத்தர அச்சியற்றி :** இதில் உருக்கள் தொடருக்குரிய வரிகளில் குறிக்கப்படும். ஆகவே, வெளிப்பயன் நன்றாக இருக்கும். எ-டு மைப்பீச்சு அச்சி யற்றி.

**Librarian -திரட்டகர் :**திரட்டகத்தைக் கட்டுப்படுத்துபவர். இதில் எல்லாக் காந்தக் கோப்புகளும் நிகழ்நிரல்களும் வைக்கப்பட்டிருக்கும்.

**Librarian programme -திரட்டகர் நிகழ்நிரல் :** ஒரு குறிப்பிட்ட கணிப்பொறியின் இயங்கு தொகுதியின் பகுதியாக அமையும் நிகழ்நிரல்.

**Library - திரட்டகம் :** நிகழ்நிரல் தொகுப்பு, பயன்பாட்டு நிகழ் நிரலால் பயன்படுத்தப்படுவது.

**Library functions -திரட்டகச்சார்பலன்கள் :** சி மொழியில் அனுமதிக்கப்படும் சி கணிதச்சார்புகள். இவை உள்ளார்ந்த பண்புள்ளவை. தொகுப்பி இவற்றை மதிப்பீடுசெய்யும். ஒரு நிகழ்நிரலர் ஒவ்வொரு சார்பலனின் மதிப்பையும் கருத்தில் கொள்ளவேண்டும். ஏனெனில், சார்பலன் இம்மதிப்பைச் செயற்படுத்தவேண்டியுள்ளது. இம்மதிப்பு சார்பின் மாறி எனப்படும். ஒவ்வொரு சார்பலனுக்கும் ஒவ்வொரு வகைச் சார்பின்மாறி உண்டு. ஒவ்வொரு சார்பலனும் குறிப்பிட்ட வகை முடிவை உண்டாக்குவது. எ-டு சைன், காஸ், டேன். சி நிகழ்நிரலிலிருந்து இச்சார்பலன்களில் எந்த ஒன்றையும் பெறலாம். இதற்குக் குறிப்பிட்ட தலைக்குறிப்புக் கோப்பைச் சேர்க்கவேண்டும். சரக்கையாளலுக்கும் கணிதக் கணக்கீடுகளுக்குமுள்ள சார் பலன் களை இக்கோப்பு கொண்டிருக்கும். இச்சார்பலன்கள் மொத்தம் 41.

**Library functions, kinds of -திரட்டகச் சார்பலன்களின் வகைகள்:** இவை பின்வருமாறு. 1. நன்கறிந்தவை: சைன், காஸ், டேன். 2 முக்கோணவியல் சார்ப்லன்கள்: டோசை, டோலோவர், டோப்பா, 3) தலைக்குறிப்புச் சார்ந்தவை. (i) ஸ்ட்டியோ எச் கெட்ஸ், புட்ஸ். (ii) ஸ்ட்ரிப் எச்- ரேண்ட். **lib 145 list**

ஸ்ரேண்ட் (iii) சரம் எச் - ஸ்டர்கேட், ஸ்டர்செட்

**Library programme - திரட்டக நிகழ்நிரல்:** நிகழ்நிரல் திரட்டகத்தில் உள்ள நிகழ்நிரல்

**Light emitter diode, led - ஒளியுமிழ் இருமின்வாய், ஒஉஇவா :** காட்சிக்கருவி மின்னணுக் கருவிகளில் சிவப்பு, பச்சை, மஞ்சள் ஆகிய நிறங் களைக் காட்டப் பயன்படுவது.

**Light pen -ஒளி எழுதி:**ஒளிதூவல் தூவல் போன்ற கருவியமைப்பு. இதன் நிலையைச் கணிப்பொறி திரையில் அறிய வல்லது. |

**Line - கம்பி :** வழி. இருமுனைகளுக்கிடையே செய்தி கொண்டு செல்லும் கம்பி இணைப்பு. தொலை பேசிக் கம்பி.

**Linear programme -ஒருபடி நிகழ்நிரல் :** ஒரு படிச்சமன் பாடுகளால் தெரிவிக்கப்படும் சிக்கலுக்குத் தகுந்த தீர்வு காணப் பயன்படுவது.

**Line control-வரிக்கட்டுப்பாடு:**பா.control, classification of.

**Line editor -வரிப்பதிப்பிப்பி**: பாடப் பதிப்பிப்புமுறை. அச்சிடப்படவேண்டிய தனித்த பாட வரிகளை இது கோப்பில் சேமித்து வைக்கும். பதிப்பியற்றி என்றுங் கூறலாம்.

**Lineprinter -வரி அச்சியற்றி:**ஒரு சமயம் ஒரு வரியை மட்டும் அச்சிடுவது. ஒரு நிமிக்கு அச்சியற்றும் விரைவு 150 - 2500 வரிகள், 15 அங்குல வரியில் 96-160 உருக்கள் இருக்கும். இது உருளை அச்சியற்றி, தொடர் அச்சியற்றி என இரு வகை.

**Link - இணைப்பு :** 1) செய்தித் தொடர்பு வழி, எ-டு செயற்கை நிலா. 2) ஓர் ஆவணப்பகுதி அடுத்த ஆவணத்திற்குச் செல்ல உதவுவது, இது எச்டிஎம்எல் லின் ஒரு திறன்.

**Liquid crystal display, lcd - நீர்மப்படிகக் காட்சி, நீபகா** : இலக்கக் கருவியமைப்புகளில் அதிகம் பயன்படுவது. எ-டு. கணிப்பான்கள், கடிகாரங்கள்.

**Lisp, list processing -லிஸ்ப், பட்டியல் முறையாக்கல், பமு :** 1960 களில் உருவான கணிப் பொறிமொழி. செயற்கை நுண்ணறிவுத் துறையில் அதிகம் பயன்படுவது.

**List - பட்டியல் :** தகவல் இனங்கள் கொண்ட தொகுதி. முன்னரே ஒழுங்காக வடிவமைக்கப் பட்டது.

**List box - பட்டியல் பெட்டி :** தெரிவுகளின் தொகுப்பைக் கொண்டது.

**List box control -பட்டியல் பெட்டி இணைப்பு :** இது படிவத்தில் குறிப்பிட்ட அளவு இடத்தை அடைப்பது. இதில் சுருள்பட்டைகள் தோன்றும்.

**List, kinds of - பட்டியல் வகைகள் :** இவை மூவகை 1) வரிசைப் பட்டியல், 2) வரிசையிலாப்பட்டியல், 3) வரையறைப் பட்டியல். **வரிசைப் பட்டியல்:** இது எம்எஸ் சொல்லில் உருவாக்கப்பட்ட எண்ணிட்ட பட்டியல் போன்றது. தகவல் இனத்திற்குமுன் பின்வருவன இருக்கும். 1) அரபு எண்கள் : 1, 2, 3. 2) உரோம எண்கள் சிறியது பெரியது : i, ii, iii; i, ii, iii, 3) நெடுங்கணக்கு சிறியது பெரியது : a, b, c, a, B, C. எ-டு <||> ஆப்பிள்கள். **வரிசையிலாப் பட்டியல்:** எம்எஸ் சொல்லைப் பயன்படுத்தி உருவாக்கப்பட்ட தெறிப்புப் புள்ளிகளைப் போன்றது. இது. இதில் பட்டியல் இனத்திற்குமுன் வட்ட அல்லது சதுர அடைப்புக் குறி இருக்கும். எ.டு. :<||> உருளைக் கிழங்கு. **வரையறைப்பட்டியல் :** உறுப்புகளை வரையறை

செய்யப் பயன்படுவது. வரையறை இனத்திற்கு முன் வரையறை உறுப்பு இருக்கும் எ-டு, <dt> dir.

**List processing - பட்டியல் முறையாக்கல்** : பட்டியலிலுள்ள தகவல்களை முறைப்படுத்தல்.

**List structure - பட்டியல் அமைப்பு** : இது தகவல் இனத் தொகுதி. இதிலுள்ள இனங்கள் இணைக்கப்பட்டிருக்கும்.

**Load - நிரல் ஏற்றல்** : கணிப்பொறியில் நிகழ்நிரல் தகவல்களைச் செலுத்தல். விளையாட்டு நிகழ்நிரல்.

**Load event - நிரல்ஏற்று நிகழ்வு** : படிவத்தை நிரல் ஏற்றல்.

**Loader - நிரல் ஏற்றி** : இது ஓர் அமைப்பு நிகழ்நிரல். கணிப்பொறி நினைவகத்தில் எந்திர மொழி நிகழ்நிரலைச் சேமிக்கப்பயன்படுவது.

**Local area network, lan - உள்ளூர் பகுதி வலையமைவு, உபவஅ** : குறும்பரப்பு வலையமைவு. இரண்டுகல் தொலைவிற்குள் அமைவது. இத்தொலைவில் இருப்பவர்கள் இதைப் பயன்படுத்துவர்.

**Local scope - உள்ளிட எல்லை:** வரையறை எல்லை. ஒரு சார்பலனுள் ஒரு மாறி அறுதியிடப்படும் பொழுது, அச்செயல் முறையின் குறிமுறை இம்மாறியைப் பார்க்க இயலும். இதுவே உள்ளிட எல்லை என்பது. பா. **Global scope, module scope.**

**Location - அமைவிடம்:** நினைவக நுண்ணறை. இதில் தகவல் கட்டளை சேமிக்கப்பட்டிருக் கும்.

**Location constant - அமைவிட மாறிலி** : ஒரு கணிப்பொறி நிகழ்நிரலிலுள்ள கட்டளையை இனமறியும் எண்; உயர்நிலை நிகழ்நிரல் மொழியில் எழுதப்படுவது.

**Lock - பூட்டு** : ஓர் இயங்கு தொகுதியில் மூலத்தின் தனிப்பயனை, ஒரு செயலுக்குக் கொடுக்கும் முறை.

**Log - குறிப்பகம்** : பணிவரிசைகளின் தொகுப்பு. கணிப்பொறி வேலைகளின் குறிப்பகம்.

**Logic circuit- முறைமைச் சுற்று** : முறைமைச் சார்பலனை அளிக்கும் கணிப்பொறி மின்சுற்று.

**Logic clause - முறைமை உட்பிரிவு** : உட்பிரிவின் ஒரு வகை பா. **Clause.**

**Logic design - முறைமை வடிவமைப்பு :** முறைமைக் குறிகளால் காட்டப்படும் படம்.

**Logic diagram - முறைமைப் படம் :** ஒரு கருவியமைப்பின் வடிவமைப்பை முறைமைக் கூறுகளாலும் அவற்றின் தொடர்புகளாலும் காட்டுதல்.

**Logic element - முறைமைக் கூறு :** முறைமைச் செயலை நிறைவேற்றும் கருவியமைப்பு.

**Logic function - முறைமைச் சார்பலன் :** ஓர் இலக்கச் சுற்றில் கட்டுதொகுதியின் செயலைத் தெரிவிக்கும் சார்பு. இது ஓர் இரும வெளிப்பலனை உண்டாக்கும் (1, 0). இது தன் உட்பலன்களிலுள்ள இருமக் குறிகைகளால் அறுதியிடப்படும். எ-டு உம்வாயில்.

**Logic gate - முறைமை வாயில் :** முறைமைச் செயலைச் செய்யும் சுற்று. எ-டு உம் வாயில்.

**Logic instruction -முறைமைக் கட்டளை :** அல்லது, இல்லை என்னும் முறைமைச் செயல்களுக்குரிய கட்டளை.

**Logic operation - முறைமைச் செயல் :** கணிப்பொறியின் எண்கணிதம் சாராச் செயல். ஒப்பிடல், தேர்வுசெய்தல், இணைத்தல்.

**Logic symbol - முறைமைக்குறி :** முறைமைப் படங்களில் முறைமைச் சார்பலனைக் குறிக்கும் வடிவம் அல்லது உரு. எ-டு <என்பது and> என்பதற்குரிய குறி.

**Logic theory - முறைமைக் கொள்கை :** முறைமைச் செயல்களைப் பற்றிய கருத்துகள் கொண்டது. இவை கணிப்பொறிச் செயல்களின் அடிப்படையில் அமைந்தவை.

**Logic unit - முறைமை அலகு :** முறைமைச் செயல்களைச் செய்யும் பகுதி. இவை எண் கணிதத்திற்கு எதிரானவை. **Logo - லோகோ :** உயர்நிலைக் கணிப்பொறி மொழி. சேமர் பேப்பர்ட் என்பவரால் புனையப்பட்டது. குழந்தைகள் எளிதில் கணிதம் கற்க உதவுவது.

**Log off, out - நிறுத்து** (கணிப்பொறி).

**Log on, in - தொடங்கு** (கணிப்பொறி).

**Loop - கட்டளைச் சுற்று :** ஒரு நிகழ்நிரலின் கட்டளைத் தொடர். இதில் இறுதிக் கட்டளை ஒரு தாவல். இதனால் தொடர் தொடரும்.

இது ஒரு மாறி, முன்னமைந்த மதிப்பை அடையும் வரை நடைபெறும்.

**Love bug i - விரும்புபிழை i :** இது இதுவரை ஏற்படாத கணிப்பொறிப் பிழை. 11-05-2000 அன்று பிலிப்போ கணிப்பொறி மாணவர் இது ஏற்படக் காரணமாக இருந்தார். இது தற்செயலாக நடந்தது. இந்நச்சுப்பிழை, கணிப்பொறி மின்னஞ்சல் அமைப்புகளை உலகெங்கும் முடங்கச் செய்தது. இம்மாணவர் பெயர் ஒனல் டி கஸ்மன். இவர் இதை எழுதினாரா என்பது இவருக்கே தெரியாது. இச்செயல் கணிப்பொறி உலகில் ஒரு பெரும் பரபரப்பை உண்டாக்கிற்று.

**Love bug II - விரும்புபிழை II :** புதிய மின்னஞ்சல் பிழை வேறுபெயர் ஹெர்பி விரும்புபிழை விட அதிக சேதத்தை உண்டாக்குவது குறிப்பாகக் கோப்புகளை துடைத்து எடுத்ததைப்போல் ஆக்கிவிடும்.

**ஓனல் டி கஸ்மன்**
(படத்தில் முன்னிருப்பவர்)

**Low level language - தாழ் நிலை மொழி :** நுண்முறையாக்கியுடன் நேரடியாகத் தொடர்பு கொள்ள வடிவமைக்கப்பட்ட கணிப்பொறி மொழி. இதை நாம் புரிந்து கொள்ள இயலாது. எ-டு. கோவை மொழி, எந்திர மொழி. செயல் விரைவு, பயனுறு நினைவகச் சேமிப்பு ஆகிய இரண்டும் இதன் சிறப்பியல்புகள்,

**Lpm - ஒரு நிமிக்கு இத்தனை வரிகள்.** Lines per minute.

**Lps - ஒரு வினாடிக்கு இத்தனை வரிகள்.** Lines per second.

## M

**Machine** - computer or processing unit. **எந்திரம் :** கணிப்பொறி அல்லது முறையாக்கும் அலகு.

**machine address** - absolute address. **எந்திர முகவரி :** தனி முகவரி.

**machine code** - coding system of the computer. **எந்திரக் குறிமுறை :** கணிப்பொறிக் குறிமுறை.

**machine instruction** - the instruction written in terms of a computer's

machine code, **எந்திரக் கட்டளை :** எந்திரக் குறிமுறைக்கேற்ப எழுதப்படும் கட்டளை.

**machine language** - the language at its level in binary form. **எந்திர மொழி :** இரும வடிவத்தில் தாழ்நிலையில் உள்ள மொழி.

**machine logic** - the design of a computer wherein its various elements are interactive. **எந்திரமுறைமை :** கணிப்பொறியின் வடிவமைப்பு. இங்கு அதன் பல கூறுகளும் இடைவினை ஆற்றுபவை.

**macro instruction** - a frequently used set of predefined instructions designed to carry out a specific operation. **பெருங் கட்டளை :** அடிக்கடிப் பயன்படும் முன்னரே வரையறை செய்த கட்டளைத் தொகுதி. குறிப்பிட்ட செயலை நிறைவேற்றுவது.

**macro language** - a computer language manipulating stored strings. - **பெருமொழி :** சேமித்த சரங்களைக் கையாளும் கணிப்பொறி மொழி.

**macro processor** - a piece of software replacing each macro instruction. Otherwise known as macro generator. **பெருமுறையாக்கி :** ஒவ்வொரு பெருங்கட்டளையை மாற்றீடு செய்யும் மென்பொருள் துண்டு. வேறுபெயர் பெருமியற்றி.

**macro programme** - a series of statements in assembly language. **பெரும் நிகழ்நிரல் :** கோவை மொழியில் உள்ள கூற்றுத் தொடர்.

**magazine** - 1) an input hopper holding documents. 2) a device forming part of magnetic card file and holding magnetic cards. **சுருள்மணை :** 1) உட்பலன் திறப்பு வாயில் பெட்டி ஆவணங்கள் உள்ளன. 2) காந்த அட்டைக் கோப்பின் பகுதியாக உள்ள கருவியமைப்பு. காந்த அட்டைகள் உள்ளன.

**Magnetic bubble memory, mbm - காந்தக் குமிழி நினைவகம் :** இருமத் தகவல்களைச் சேமிக்கும் கருவியமைப்பு. காந்தக் குமிழ்ச் சரம். காந்தப் பொருள் படலத்தில் உள்ளது.

**Magnetic card file -** a direct access storage memory. **காந்த அட்டைக் கோப்பு :** நேரிடை அணுக்கச் சேமிப்பு நினைவகம்.

**Magnetic character reader -** a character reader reading special type fonts printed in magnetic ink. **காந்த உருப்படிப்பி :** உருப்படிப்பி, காந்த மையில் அச்சிட்டுள்ள தனி வகை எழுத்துகளைப் படிப்பது.

**Magnetic disk -** a storage device. **காந்த வட்டு :** ஒரு சேமிப்புக் கருவியமைப்பு.

**Magnetic disk file -** a file of data held on a magnetic disk. **காந்த வட்டுக் கோப்பு :** காந்த வட்டிலுள்ள தகவல் கோவை.

**Magnetic drum -** a storage device. **காந்த உருளை :** ஒரு சேமிப்புக் கருவியமைப்பு.

**Magnetic ink character recognition, micr - காந்த மை உரு அறிதல், காமைஉஅ :** காந்த மை உருக்களைப் பயன்படுத்தி ஆவணத்தில் செய்திகளைப் பதித்தலும் எந்திரம் மூலம் அவற்றை அறிதலும். இம்முறை தகவல்கள் உள் அனுப்பும் நேரத்தை மிச்சப்படுத்தும். கொடுக்கப்படும் தகவல்கள் துல்லியமாகவும் பாதுகாப்பாகவும் இருக்க வழி செய்கிறது.

**Magnetic memory -** a storage device functioning by the principle of electro magnetism. **காந்த நினைவகம் :** காந்தக் கருவியமைப்பு மின்காந்த நெறிமுறையில் இயங்குவது.

**Magnetic tape - காந்த நாடா :** இது காந்தப்பொருள் கொண்டது. காந்த முனைப்புள்ளி வடிவத்தில் தகவல் சேமித்து வைக்கப்படும்.

**Magnetic tape file -** a reel of magnetic tape containing records of information. **காந்த நாடாக் கோப்பு :** ஆவணச் செய்திகளைக் கொண்டுள்ள காந்த நாடாச் சுருள்.

**Mail box -** a device exchanging data between two persons. **அஞ்சல் பெட்டி :** இருவருக்கிடையே தகவல் பரிமாற்றம் கொள்ளும் கருவியமைப்பு.

**mainframe** - a large computer. **முதன்மைக் கணிப்பொறி :** பொருங்கணிப்பொறி.

**main memory** - internal memory : rom and ram. **முதன்மை நினைவகம் :** உள் நினைவகம், ரோம், ரேம்.

**main programme** - the central part of a programme. **முதன்மை நிகழ்நிரல் :** ஒரு நிகழ்நிரலின் மையப்பகுதி.

**main storage** - the store from which instructions are executed. **முதன்மைச் சேமிப்பு :** கட்டளைகள் நிறைவேற்றப்படும் சேமிப்பு.

**management information system**, mis - **மேலாண்மைத் தகவல் அமைப்பு, மேதஅ :** தொழில் தகவல்களை அளிப்பது. பொருள்பட்டியல், விற்பனை, சம்பளப் பட்டியல், கொடுக்க வேண்டிய வர வேண்டிய கணக்கு. இவை மேலாளர்களுக்கு உதவியாக இருப்பவை.

**manipulation** - changing data to some useful form. **கையாளல் :** பயனுள்ள வடிவத்தில் தகவலை மாற்றல்.

**manual data processing**, disadvantages of - **கைவழித் தகவல் முறையாக்கலின் தீமைகள் :** இவையாவன.

1) பயனுறுதிறனும் தகவல் திருத்தமும் வரம்புடையவை.

2) கையால் செய்வதால் நேரம் அதிகமாகும்.

3) பிழைகளுக்கு ஆளாகக் கூடியது.

4) தாள்கள் முதலியவற்றைப் பயன்படுத்தவதால், பாதுகாப்பதும் பேணுவதும் கடினம்.

5) திருத்தங்களையும் மாற்றங்களையும் செய்வது கடினம். ஒ. Computerised data processing, advantages of.

**map - குறிதாள் :** காந்த வட்டில் உள்ள சேமிப்பு ஒதுக்கீட்டின் குறியீட்டெண்.

**mapnet - படஇணையம் :** இணையப்பணி. நம் முன் இணையத்தை படமாக்கிக் காட்டுவது.

**Margin - ஓரம் :** இது பக்கத்தில் இடமும் வலமும் மேலுங் கீழும் உள்ளது. இவ்வியல்புகள் எல்லா ஆவணங்களுக்கும் உண்டு. ஓரங்களை உரையாடல் பெட்டி அல்லது கோடிடுவிகளைக் கொண்டு மாற்றலாம்.

**mark** - a character used to identify the end of a set of data, eg. Tape mark. **குறி :** தகவல் தொகுதி முடிவைக் காட்டப் பயன்படும் உரு. எடுத்துக்காட்டு : நாடாக்குறி.

**marques tag - மார்குயு ஒட்டு :** தொலைக்காட்சியிலும் விளம்பர மின் பலகைகளிலும் பாடங்கள் நகர்ந்து செல்லுதல்.

**mask - மூடகம் :** 1) ஒருங்கிணை சுற்றுகள் உருவாக்குவதில் பயன்படும் ஒளிப்படத்தட்டு, 2) இருமக்கோலம் பைட் (எண்மி).

**mass data** - voluminous data unable to store in memory. **பேரளவுத் தகவல் :** நினைவகத்தில் சேமிக்க இயலாத அளவுக்குள்ள தகவல்.

**mass storage** - large capacity secondary storage. Otherwise known as external memory. **பேரளவுத் சேமிப்பு :** பெருங் கொள்திறனுள்ள இரண்டாம் நிலைச் சேமிப்பு. வேறுபெயர் : புற நினைவகம்.

**master card - a punched card holding fixed information.** முதன்மை அட்டை : **நிலையான தகவலைக் கொண்ட துளையிட்ட அட்டை**

**master data** - the constant data elements of a record. **முதன்மைத் தகவல் :** ஒர் ஆவணத்தின் மாறத் தகவல் கூறுகள்.

**master file** - a computer file having relatively permanent information. **முதன்மைக் கோப்பு :** நிலையில் நிலையான தகவலைக் கொண்ட கணிப்பொறிக் கோப்பு.

**master programme file** - the tape record of all programmes. **முதன்மை நிகழ்நிரல் கோப்பு :** எல்லா நிகழ்நிரல்களின் நாடாப் பதிவு.

**matching** - the technique of comparing the keys of two records to select items at a particular stage of processing. **பொருத்திப் பார்த்தல் :** இரு ஆவணங்களின் திறவுகளை ஒப்பிட்டுப் பார்க்கும். நுணுக்கம். ஒரு நிலையில் ஆவணங்களிலிருந்து தகவல் இனங்களைத் தெரிவு செய்தல்.

**matrix** - an arrangement of data or devices in rows and columns. As such each item is identified by two subscripts. Eg. Memory cells. **அணி :** வரிசைகளிலும் பத்திகளிலும் தகவல் அல்லது கருவியமைப்புகளின் அமைவு. இதனால் ஒவ்வொரு தகவல் இனமும் இரு கீழ்க் குறிகளால் இனங்காணப்படும். இக்குறிகள் பத்திகளிலும் வரிசைகளிலும் இருப்பவை.

**matrix printer - அணியயற்றி :** ஊசி அச்சியற்றி. ஒருவகை அச்சியற்றி. **m-commerce - எம் வணிகம் :** நடமாடும் வணிகம். கைத்தொலைப்பேசி, இருவழி வானொலி ஆகியவை மூலம் நடைபெறும் தொழில், பா. Tele conferencing, telemedicine, teleshopping.

**Mean repair time - சராசரி பழுதுநேரம் :** கொடுக்கப்பட்ட காலத்தில் அலகுத் தவறு தல்களுக்கும் ஓர் அலகைப் பேணுவதற்குச் செலவிடப்படும் நேரத்திற்கும் உள்ள வீதம்.

**Mechanical digital calculator - எந்திரத் இலக்கக் கணிப்பொறி :** கூட்டல், கழித்தல், பெருக்கல், வகுத்தல் ஆகிய அடிப்படைச் செயல்களைச் செய்யவல்ல கருவி.

**Media conversion - ஊடக மாற்றம் :** ஒரு சேமிப்பிலிருந்து மற்றொரு சேமிப்பிற்குத் தகவல் செல்லுதல். எ.டு. துளையிட்ட அட்டையிலிருந்து காந்த நாடாவுக்குச் செல்லுதல்

**Media eraser -** electro magnetic device to erase stored data. **ஊடக அழிப்பி :** சேமித்த தகவலை அழிப்பதற்குரிய மின் காந்தக் கருவியமைப்பு.

**Medium -** a material holding information eg. Magnetic tape. **ஊடகம் :** செய்தியைக் கொண்டுள்ள பொருள். எ-டு. காந்தநாடா.

**Medium scale integration, msi - நடு அளவுத் தொகையாக்கல் :** ஒருங்கிணைசுற்றுகளை உருவாக்கல், இவை நறுவலில் 20-100 முறைமை வாயில்களுக் கிடையே அமையும்.

**Medium speed -** data transmission rates between 600 and 4800 bits per second. **நடு விரைவு :** ஒரு வினாடிக்கு 600 - 4800 இருமிகள் உள்ள தகவல் செலுத்துகை.

**Mega bit -** a quantity of binary data equal to 1 million (10%) bits. **மெகாபிட் :** ஒர் மில்லியன் பிட்டுகளுக்குச் (10) சமமான இருமத்தகவல்களின் அளவு. தற்காலக் கணிப்பொறி நினைவுக்கருவியமைப்புகள், இந்த அளவுத் தகவல்களைச் சேமிக்கவல்லவை.

**Mega byte, mb -** a quantity of computer data equal to 1 million (10°) bytes, present day floppy disks store this much data. **மெகாபைட் :** 1 மில்லியன் பைட்டுகளுக்குச் (10) சமமான கணிப்பொறித் தகவல்கள் அளவு. தற்கால மென்வட்டுகள் இந்த அளவுத் தகவல்களைச் சேமிக்கவல்லவை.

**Memory -** the part of a computer system holding data and instructions for future use in binary form.

**நினைவகம் :** இது கணிப்பொறித் தொகுதியின் ஒரு பகுதி. இதில் எதிர்காலப் பயனுக்கு வேண்டிய தகவல்களும் கட்டளைகளும் இரும வடிவத்தில் சேமித்து வைக்கப் பட்டிருக்கும்.

**Memory address register, mar - நினைவக முகவரிப் பதிவகம், நிமுப :** உள்ளிட முகவரியிலிருந்து மீட்கப்படும் அல்லது சேமிக்கப்படும் சொல் செல்லும் பகுதி இது.

**Memory data register, mdr - நினைவகத் தகவல் பதிவகம், நிதப :** மீட்கப்படும் அல்லது சேமிக்கப்படும் தகவல்கள் வைக்கப்படும் பகுதி இது.

**Memory, kinds of - நினைவக வகைகள் :** இவை பின்வருமாறு.

**1) முதன்மை நினைவகம் :** இது வரம்பில் அணுக்க நினைவக (ram) அமைப்புள்ளது. அதாவது அழியும்.

**2) துணை நினைவகம் :** இது அழிவதற்கில்லை.

**3) படிப்பதற்குரிய நினைவகம் (rom) :** இது அழியாது.

**4) விரைவு நினைவகம் (cache memory) :** இதுவும் அழிவதற்கில்லை.

**5) நிகழ்நிரலாக்கும் படிப்பதற்குரிய நினைவகம் (prom) :** இதுவும் அழிவதற்கில்லை. இவையனைத்தும் கருவிவகைச் சார்ந்தவை. மூளை நினைவாற்றலின் போலிகள் எனலாம்.

**Memory storage - நினைவக சேமிப்பு :** கணிப்பொறியின் சேமிப்பு வசதிகளின் தொகு மொத்தம் உள்ளகம், உருளை, வட்டு, அட்டை, தாள் நாடா.

**Memory unit - நினைவக அலகு :** நிகழ்நிரல்களையும் தகவல் களையும் சேமிக்கப் பயன்படுவது.

**Menu -** a list of choices available in a computer programme. An important feature to be added to an application. **பட்டி :** ஒரு கணிப்பொறி நிகழ்நிரலிலுள்ள தெரிவு களின் தொகுப்பு, ஒரு பயன்பாட்டுடன் சேர்க்க வேண்டிய இன்றியமையா இயல்பு.

**Menu bar - பட்டிப் பட்டை :** விண்டோசின் பகுதி. பல பட்டிகளைக் காட்டுவது. எல்லாத்துணைத் தெரிவுகளும் வரும். அவற்றில் வேண்டியவற்றைக் தேர்ந்தெடுக்கலாம்.

**Menu control - பட்டி கட்டுப்பாடு :** விண்டோஸ் உரையாடல் பெட்டியில் பயன்படுத்தும் கீழிறக்கப்பட்டியலைப் போன்றது. <தேர்ந்தெடு> மற்றும் <தேர்ந்தெடு> ஒட்டு களைக் கொண்டு இதை உருவாக்கலாம். பட்டியலிலுள்ள வேறுப்பட்ட விருப்பங்களைக் குறிப்பிட <விருப்ப> ஒட்டு பயன்படும்.

**Menu creation, steps in - பட்டி உருவாக்கத்திலுள்ள படிகள் :**

1) படிவத்தைத் தேர்ந்தெடுக்க வேண்டும்.

2) பட்டிப் பதிப்பி இயற்றியைப் பெறவேண்டும்.

3) தலைப்புப் பாடப் பெட்டியில் முதல் பட்டிக்குரிய பாடத்தை (கோப்பு) தட்டச்சு செய்ய வேண்டும். பட்டிக்கட்டுப் பாட்டுப் பெட்டியில், பட்டித் தலைப்புப் பாடத்தைக் காட்ட வேண்டும்.

4) பெயர்ப் பாடப் பெட்டியில் பட்டிக்கட்டுப் பாட்டுக்கு வேண்டிய பெயரைக் குறி முறையில் தட்டச்சு செய்ய வேண்டும்.

5) அடுத்தது' என்பதை மற்றொரு பட்டியை உருவாக்கத் தேர்ந்தெடுக்க வேண்டும்.

6) பட்டிக் கட்டுப்பாட்டுப் பட்டியல் பெட்டியில் அனைத்து 7 பட்டிகளும் தோன்றும் வரை 1-5 வரையுள்ள படிநிலைகளைத் திருப்பிச் திருப்பிச் செய்யலாம்.

**Menu, features of - பட்டியின் இயல்புகள் :** இவை பின்வரு மாறு.

1) பயன்பாட்டோடு சேர்க்கலாம்.

2) பயன்பாட்டின் பயன்களைப் பயனாளிக்கு வழங்குவது.

3) பயன்பாட்டுக்குக் குறுக்கு வழி அமைப்பது.

4) பிற கட்டுப்பாடுகளைப் போல் இதற்குப் பண்புகளும் நிகழ்வுகளும் உண்டு.

5) கருவிப் பட்டையைக் காட்டி லும் அதிக இயல்புகளை அளிப்பது.

**Menu, kinds of - பட்டியின் வகைகள் :**

**1) முதன்மைப் பட்டி** : இது சிக்கலான நிகழ்நிரலுக்குரியது.

**2) துணைப்பட்டி** : எளிமையான நிகழ்நிரல்களுக்குரியது இது.

**Metropolitan area network, mpan - பெருநகர்ப்பகுதி வலையமைவு, பொபவ** : இது 10 கல் தொலைவிற்கு மேலுள்ளது. இந்த எல்லையிலுள்ள பயனாளிகள் இதைப் பயன்படுத்துவர்.

**Merge -** joining two sets of data together to make a single larger set. **இணைப்பு :** தனித்ததும் பெரியதுமான ஒரு தொகுதியை உருவாக்க இரு தொகுதித் தகவல்களை ஒருங்கிணைத்தல்.

**Message -** any information travelling between a source and destination. **செல்செய்தி** : மூலத்திற்கும் இலக்கிற்கும் இடையே செல்ல வேண்டிய செய்தி.

**micro** - micro processor, micro computer.
- **நுண்மி :** நுண்முறையாக்கி, நுண்கணிப்பொறி.

**micro chip** - silicon chip. **நுண்நறுவல் :** சிலிகன் நறுவல்.

**micro code** - micro structure. **நுண்குறிமுறை :** நுண் கட்டளை.

**micro computer - நுண் கணிப்பொறி :** கையில் எடுத்துச் செல்லக் கூடிய கணிப்பொறி.

**micro computer architecture - நுண்கணிப்பொறிக் கட்டமைப்பு :** இந்த அமைப்பு 8 பிட், 16 பிட், 32 பிட் எனக் குறிப்பிடப்படும்.

**micro film - நுண்படலம் :** வெளிப்பலன் கருவி.

**micro fiche - நுண்படல அட்டை :** வெளிப்பலன் கருவி.

**micro processor - நுண்முறையாக்கி :** இதில் பேரளவு சுற்றுகளும் மீப்பேரளவு சுற்றுகளும் உள்ளன. 1960-இல் அமைக்கப்பட்டது. அமைத்தவர்கள் ஜான் ஜி கெமினி, தாமஸ் குர்ட்ஸ். இது பலவகை : இண்டல் (1971-ல் தொடங்கியது) பிளாட்டினம் முதலியவை. பா. Computer, history of.

**micro programme** - a sequence written in micro instructions and stored in the control unit of the micro-processor. - **நுண் நிகழ்நிரல் :** நுண் கட்டளைகளில் வரிசையாக எழுதி நுண் முறையாக்கியின் கட்டுப்பாட்டு அலகில் சேமித்து வைக்கப்படுவது.

**microsoft corporation - மைக்ரோ சாஃப்ட் கழகம் :** உலகின் மிகப் பெரியதும் வெற்றி நடைபோடுவதுமான மென்பொருள் நிறுவனம். இதில் 32,000 பேர் வேலை செய்கின்றனர். இதை நிறுவியவர் பில் கேட்ஸ், இவரே இதன் தலைவர். பா.bill gates.

**millennium bug - 2000 ஆம் ஆண்டுப் பிழை :** எண் 1999 லிருந்து 2000 க்குச் செல்லும் பொழுது ஏற்படும் எண் மாற்றம் சரிசெய்யப்படாதிருந்தால், கணிப்பொறிகள் பெரும் அழிவை நோக்கும் எனக் கணிப்பொறி அறிஞர்கள் கூறினர். இது ஒர் ஆற்றல் வாய்ந்த கணினிப்பிழை. Y2k எனக் கணிப்பொறித் தொழில் சுருக்கெழுத்தால் குறிப்பிடப்படும். ஒரெண்

மாற்றத்தால் ஏற்பட்ட பெருங் குழப்பம். இக்குழப்பம் எவ்வகைப் பேரிழப்புமின்றி, இனிதே நீக்கப்பட்டுவிட்டது. அனைவரும் அஞ்சிய அளவுக்கு ஒன்றும் ஏற்படவில்லை. அறிவார்ந்த முன்னேற்பாடுகளால் தடுக்கப்பட்டது. குறிப்பாகச் செயல் 2000 (ஆக்க்ஷன் 2000) இதனை நீக்கியது. பா. Love bug, mtx, yk2.

**minnambalam - மின்னம்பலம் :** ஒரு மின் நாளிதழ். ஆசிரியர் திருப்பூர் கிருட்டினன். ஒரு நாளிதழுக்குரிய பல பகுதிகளையுங் கொண்டு சென்னையிலிருந்து வருவது. நன்கு நடைபெறுவது.

**mini computer - சிறு கணிப்பொறி :** நுண் கணிப்பொறியை விடப் பெரியது. விரைவானது, விலை அதிகமானது. இது 16 பிட் கொண்டது.

**mini disk** - diskette.
**நுண்வட்டு :** சிறுவட்டு.

**minuend - கழிக்கப்படும் எண் :** செயலிகளில் ஒன்று. கழித்தலில் பயன்படுவது.

**mode** - a way of operating a computer. As such it provides special facilities.
**செயற்பாங்கு :** கணிப்பொறியை இயக்கும் முறை. இது தனி வசதிகளை அளிப்பது. **Model - மாதிரி :** ஒன்றின் பகர்ப்பு கணித வடிவத்தில் இருப்பது.

**Modem - இருபண்பி : modulator - demodulator** என்பதன் சுருக்கம். இதன் பொருள் பண்பேற்றி, பண்பிறக்கி, ஆகவே, இருபண்பி எனலாம். இதற்கு வேறு பெயர் நேரடி இணைப்பி என்று பெயர். கணிப்பொறிகளை இணைக்கப் பயன்படுவது. தொலை பேசி வழிகளைப் பயன்படுத்தி, ஒரு கணிப்பொறியிலிருந்து மற்றொரு கணிப்பொறிக்குத் தகவல்களை அனுப்ப இது நமக்கு உதவுவது. இது புறப்பண்பி, அகப்பண்பி என இருவகை

**Modification - மாற்றியமைத்தல் :** இது ஒரு நுணுக்கம். இது ஒரு நிகழ்நிரலிலுள்ள முகவரியையும் கட்டளையையும் மாற்றப் பயன்படுவது. இதற்கு அவை தகவல்களாகப் பயன்படுபவை.

மற்றும் இதில் எண்கணிதச் செயல்களும் முறைமைச் செயல்களும் பயன்படுகின்றன.

**Modifier - மாற்றியமைப்பி** : ஒரு நிகழ்நிரல் கட்டளையை மாற்றப் பயன்படும் தகவல் இனம்.

**Modulator - பண்பேற்றி** : இது ஒரு கருவியமைப்பு. பண்பேற்ற அடிப்படையில் ஓர் ஊர்தியலையின் மேல் தகவல் குறிகையைப் படியவைப்பது.

**Module - பொதி** : ஒரு முதன்மை நிகழ்நிரலிலுள்ள சார்பலன் தொகுதி.

**Module key - பொதித்திறவு** : கோப்புச் சேமிப்பினுள் பொதிகையில் காணப்படும் பகுதியை அணுகவும் இனங்காணவும் பயன்படும் திறவுகோல்.

**Module, kinds of - பொதி வகைகள்** : இவை பின்வருமாறு

**1) வடிவப் பொதிகை (form modue):** பயன்பாட்டின் பார்வைப் பகுதிகட்டுப்பாடுக்குரிய பண்பு அமைப்புகளையும் குறிப்புதவிகளையுங் கொண்டது.

**2) வகுப்பு பொதி (chess module)** : பார்வைக்குப் புலப்படாதது. வடிவப் பொதி போன்றது. பயனாளி இதைக் கொண்டு தனக்கு வேண்டிய பொருள்களை உருவாக்கிக் கொள்ளலாம்.

**3) திட்ட பொதி (standard module):** மாறிலிகள், மாறிகள், செயல்முறைகள் ஆகியவற்றின் பொதியளவு அறுதியீடுகளைக் கொண்டது.

**Module scope - பொதி எல்லை** : தனி அறுதியிடு கற்றையைக் கொண்டு இந்தப் பொதி எல்லையோடு ஒரு மாறிலியை அறுதியிடலாம். வரை எல்லையில் ஒரு வகை.

**Monitor - a computer software lying in rom. It looks after various routine duties. Eg. Display graphics. கண்காணிப்பி** : படிப்பதற்குரிய நினைவகத்திறனுள்ள கணிப்பொறி மென்பொருள். பல நடைமுறைச் செயல்களைக் கவனிப்பது, எ-டு. வரைகலைகளைக் காட்டுதல்.

**Moore's law - மூர் விதி** : ஒரு தனிச் சிலிகன் நறுவலில் ஒருங்கிணைக்கப்படும் பகுதிகளின் எண்ணிக்கை ஒவ்வோராண்டும் இரட்டிப்பாகும். இம்முன்னறிவிப்பு இண்டல் நிறுவன நிறுவனரான கார்டன் மூர் என்பவரால் 1960களில்

செய்யப்பட்டது. சிற்றளவு ஒருங்கிணைப்பு முறையில் இப்பொழுது ஒருங்கிணைப்பு சுற்றுகள் உருவாக்கப்பட்டன. இம் முன்னறிவிப்பு இன்றும் பொருந்துவதாக உள்ளது.

**Motorola - மோட்டாரோலா :** மின்னணுக் கருவித் தொகுதி உற்பத்தி செய்யும் நிறுவனம். எ.டு. மோட்டாரோலா 6800, 6809 m6800 நுண்முறையாக்கி. உலக அளவில் செய்தித் தொடர்பு கொள்ளச் செயற்கை நிலாக்களை விடும் திட்டத்தையும் நிறைவேற்றிவருவது.

**Mouse- சுட்டெலி :** சுண்டெலி வடிவமுள்ளதாலும் சுண்டெலி போல் சுறுசுறுப்பாக இயங்குவதாலும் இதற்கு இப்பெயர். மேசையில் வைத்துக் கையை அசைத்துக் கணிப்பொறித் திரையில் உள்ள சுட்டியைத் திரையின் எப்பகுதிக்கு வேண்டுமானாலும் நகர்த்தலாம். இதனால் திரையிலுள்ள நுண் படங்கள் (icons), தத்தல்கள் (tabs) போன்றவற்றை இயக்கலாம். நிகழ்நிரலைச் செயற்படுத்துவதில் உயிர்நாடியாக உள்ளது.

**Mouse events - சுட்டெலி நிகழ்வுகள் :** சுட்டெலியைப் பயன்படுத்தி இவற்றை உண் டாக்கலாம். சுட்டெலி-நோக்குள்ள நிகழ்வுகள் பின்வரு மாறு. 1. **தட்டு (click)-** இடதுபக்கச் சுட்டெலிப் பொத்தானை அழுத்த இது உண்டாகும். 2 **இரட்டைத் தட்டு (double click) -** மேற்குறித்த பொத் தானை இருதடவை அழுத்த இது ஏற்படும். 3) **இழுப்பு வீழல் (drag drop) -** சுட்டெலிப் பொத்தான் கீழேவர இது உண்டாகும். 4) **மேல் இழு (drag over) -** ஒரு பொருளை இழுக்கும்பொழுது உண்டாகும். 5) **சுட்டெலி கீழ் (mouse down)-** சுட்டெலிப் பொத்தானை அழுத்த உண்டாவது. 6) **சுட்டெலி மேல் (mouse up) -** சுட்டெலிப் பொத்தானை விடு விக்கும் பொழுது ஏற்படுவது.

7) **சுட்டெலி நகர்வு (mouse move)-** ஒரு பொருளின்மீது சுட்டெலியை நகர்த்தும் பொழுது உண்டாவது. இப் பொழுது பொத்தான்கள் அழுத்தப்பட்டிருக்கா.

**Moving - நகர்த்தல் :** ஓர் ஆவணத்தின் பல பகுதிகளைத் திறவுபலகைக் குறுக்கு வழிகள் அல்லது சுட்டெலியைப் பயன்படுத்திப் பயனாளி அசைத்தல்.

**Ms-dos - எம் டிஒஎஸ் :** வட்டு இயக்க அமைப்பு. அண்மைக்காலம் வரை தனியாள் கணிப்பொறிகளில் ஒரு பரவலான இயக்கு அமைப்பாகவே இருந்தது. பல விளையாட்டுகளுக்கு நிலைக்களம்.

**Ms front page express - எம்எஸ் முன்பக்க விரைவி :** எளிதாகக் கையாளக் கூடிய வலையப் பக்கப் பதிப்பியற்றி இது வைசிவிக் (wysiwyg - what you seels what you get) என்னும் நெறிமுறையில் வேலை செய்கிறது. ஒரு பக்கத்தினை வடிவமைக்கும் பொழுது, அது திரையில் எப்படிக் காட்சியளிக்கிறதோ அப்படியே மேய்வியிலும் காட்சியளிக்கும். இதனால் நாம் மேற்கொள்ளும் வடிவமைப்பு எளிதாகிறது. இதன் நன்மைகளாவன;

1) நுண்படங்களைத் தட்டிப் பாடம், பத்திகள் ஆகிய இரண்டையும் படிவமைப்பு செய்யலாம்.

2) பெரும்பாலான எச்டிஎம் எல் ஒட்டுகளுக்குரிய நுண் படங்கள் கொண்ட கருவிப் பட்டைகள் உள்ளன. இவற்றைப் பயன்படுத்தலாம்; ஒட்டுகளை அச்சடிக்க வேண்டியதில்லை.

3) அணியப்படங்களையும் செருகலாம்.

4) ஒரு கணிப்பொறியிலிருந்தோ ஒரு வலையமைவிலுள்ள கணிப்பொறிகளைக் கொண்டோ இருப்பிலுள்ள பிற வலையப் பக்கங்களைத் திறக்கலாம்.

5) இவ்விரைவியுடன் தனியாள் தொடக்கப் பக்க மாயாவியும் உள்ளது. இம் மாயாவி நம்மைப் பல கேள்விகள் கேட்கும்; படிப்படியாகத் தொடக்கப்பக்கத்தை உருவாக்க நம்மை அழைத்துச் செல்லும்.

**Msgbox - செய்திப்பெட்டி :** பயனாளிக்கு வேண்டிய பயனுள்ள செய்தியை அளிப்பது.

**Msgbox function - செய்திப்பெட்டிச் சார்பலன் :** பயன் பாட்டை நிறைவேற்றும் பொழுது, ஒரு செய்தியைக் காட்டப் பயன்படும் சிறந்த வழி.

**Mtn - maganagar telephone**

**Nigam ltd. - எம்டி என்,மகா நகர் தொலைபேசி நிகம் நிறு வனம் (வரையறை) :** மும்பை, தில்லி ஆகிய இரண்டு இடங்களிலும் தொலைத் தொடர்புப் பணிகளை வழங்குவது.

**Mtx - எம்டிஎக்ஸ் :** விரும்பு பிழைக்கு அடுத்ததாகப் பரவிய கணிப்பொறிப் பிழை. மின்னஞ்சல் வழியாகப் பரவியது. நீக்கப்பட்டது (செப் 7, 2000) பா. Love bug, millennium bug.

**Multiaddress instruction - an instruction specifying the address of more than one operand.- பன்ம முகவரிக் கட்டளை:** ஒரு செயலிக்கு மேல் உள்ள முகவரியைக் குறிப்பிடும் கட்டளை.

**Multiple length arithmetic -பன்ம நீள எண்கணிதம் :** ஒவ்வொரு செயலியையும் சேமிக்க ஒன்றிற்கு மேற்பட்ட எந்திரச் சொற்களைப் பயன்படுத்தி நிறைவேற்றும் எண் கணிதம். நோக்கம் அதிகத் துல்லியம் பெறுதல்.

**Multiline text area - பன்ம வழிப்பாடப் பகுதி :** உட்பலன் பயனாளியிடமிருந்து பல வழிகளுக்குச் செல்லப் பயன்படும் கட்டுப்பாடு.

**Multiplex - பன்மப் பகுதி :** பலவழிகள் மூலம் தகவல்கள் செல்லுதல். குறைந்த விரைவுச் சேமிப்புக் கருவியமைப்பிலிருந்து உயர் விரைவுச் சேமிப்புக் கருவிக்குச் செல்பவை.

Multiplicand - பெருக்கப்படும் எண் : பெருக்கலில் பயன்படும் காரணிகளில் ஒன்று. ஓர் அளவை மற்றொரு அளவால் பெருக்குதல்.

N

**Name - பெயர் :** பாடப் பெட்டி யின் இயல்பு புலப் பெயரைக் குறிப்பிடுவது. இப்புலத்தில் பதிவு செய்யப்படும் பாடம் சேமிக்கப்படும்

**Nand gate - a decision making building block in digital circuits. It produces an output of binary 1 when one or more of its inputs are at binary 0. And an output of binary 0 when all its inputs are of binary 1. Nand gates are generally used in itegrated circuit packages.**

இல்லது வாயில் : **உம் வாயிலுக்கு எதிரானது. இயக்கச் சுற்றில் முடிவு செய்யும் கட்டு மானத்தொகுதி. ஒன்றுக்கு மேற்பட்ட இதன் உட்பலன்கள் இரும 0 இல் இருக்கும் பொழுது, 1 என்னும் வெளிப் பலனை உண்டாக்கும். அதன் எல்லா உட்பலன்களும் இரும 1 இல் இருக்கும் பொழுது இரும 0 வெளிப்பலனை உண்டாக்கும். பொதுவாக, இல்லது வாயில்கள் ஒருங்கிணை சுற்றுச் சிப்பங்களில் பயன்படுபவை**

**Nanosecond, ns - நேனோ வினாடி, நேவி :** ஒரு வினாடியில் 1 ஆயிரம் மில்லியனாவதற்குச் சமமான கால இடைவேளை ($10^{-9}$). 1 மீட்டர் தொலைவைக் கடக்கக் கதிரவன் ஒளிக்கு ஆகும் நேரம் 3 நேனோ வினாடிகள்.

**Napster - நேப்ஸ்டர்** : கோப்புப் பகிர்வுப் பணியகம். இசைக் கோப்புகளைப் பயனாளிகள் தங்களுக்குள் பகிர்ந்து கொள்ளப் பயன்படுவது.

**Narrative - விளக்கவுரை** : ஒரு நிகழ்நிரலின் குறிமுறையில் சேர்க்கப்ப்ட்டுள்ள கூற்றுகள். குறிமுறைச் செயல்களின் விளக்க ஆவணமாக்கலாகப் பயன்படுவது.

**Nasscom - நாஸ்காம்** : பணி நிறுவனங்களின் மென்பொருள் தேசியக் கழகம். இதன் கருத்துப்படி தற்பொழுது இணையத்தைப் பயன்படுத்துபவர்கள் இந்தியாவில் 1 மில்லியன். இது 2003க்குள் 23 மில்லியனாக உயரும்.

N**ative language - இயல் மொழி** : ஒரு கணிப்பொறி மொழி, ஒரு வகைக் கணிப் பொறிக்காக உருவாக்கப்பட்டது. கணிப்பொறித் தொகுதியிலுள்ள மென்பொருள் எல்லைக்கு ஏற்றவாறு மொழிமுறை சரியாக ஒருங்கிணைக்கப்பட்டிருக்கும்.

**Naviscope - நேவிநோக்கி** : ஒன்றில் பல வேலைகளைச் செய்வது. வெப்ப மேய்தல் செயலை விரைவுப்படுத்துவது. ஆவணங்களை வளையத்திலிருந்து மீட்டுச் செப்பமாக்க மேய்விக்கு அனுப்புவது.

**Needle printer - ஊசி அச்சியற்றி** : இது ஓர் அச்சியற்றுங் கருவி. இதில் ஊசிகள் தாளிலும் நாடாவிலும் குத்துவதால் உருக்கள் உண்டாகின்றன.

**Negation - எதிர்மை** : ஒரு தனிச் செயலிடத்தில் நிறைவேற்றப்படும் செயல். உண்டாகும் முடிவு ஒவ்வொரு இலக்க நிலையிலும் தலைகீழாக இருக்கும். எ-டு பிட்கோலம் p : 01 010 இது r:101001 ஆகத் தோன்றும்.

**Negator - எதிர்மையாக்கி** : ஒரு முறைமைக் கூறு. ஓர் இரும உட்பலன் குறிகை கொண்டது. எதிர்மறைக்குறிகையுள்ள ஓர் தனி இரும வெளிப் பலனைக் கொடுக்கும். இதன் பொருள் : ஒரு பிட்டை உட்பலனாகப் பயன்படுத்த, சுழிப்பிட் வெளிப் பலனாக உண்டாகும்.

**Nesting - கூட்டில் வைத்தல்** : ஒரு நிகழ்நிரலின் ஒரு பகுதி யை மற்றொரு பகுதியில் பதியச் செய்தல். A என்னும் நடைமுறைச் செயலை b என் னும் நடைமுறைச் செயலோடு சேர்த்தால். இதனால் b செயற்பாடு தானாகவே a யைச் செயற்படவைக்கும்.

**Nesting loop - கூடுடை சுற்று :** ஒரு நிகழ்நிரல் துணுக்கம். இதில் ஒரு சுற்றுக் கட்டளைகள் மற்றொரு சுற்றைக் கொண்டிருக்கும். இச்சுற்றுகள் தொடர்ந்து சென்று கொண்டே இருக்கும்.

**Net monitor - இணையக் கண்காணிப்பி :** வலையகப் பயணத்தின் பொழுது நல்ல தகவல்களைத் தரும்.

**Net parameters - இணையச் சுட்டளவுகள் :** இவை நாம் பெறும் அல்லது அனுப்பும் மின்னோட்ட விரைவு, தகவல் அளவு ஆகியவை; இணைய வாழ்வை வசதியுள்ளதாக்குபவை.

**Net, the - இணையம் :** உலகின் மிகப்பெரிய கணிப்பொறி வலையமைப்பு. இண்டர்நெட் என்ற சொல்லின் சுருக்கம். அகவை வேறுபாடு இன்றி அனைவரும் பயன்படுத்தும் கருவியமைப்பு. எப்பொருள் பற்றியும் செய்தியளிப்பது. உலகைப் பார்க்க உதவும் பலகணி. நன்மை தீமை ஆகிய இரண்டையுங் கொண்டது.

**Network - a series ofinter connected computer terminals providing a data communication service. Eg. Prestel. வலையமைவு :** வலையம் ஒன்றுடன் மற்றொன்று இணைந்த கணிப்பொறி முனையங்கள்: தகவல் தொடர்புப் பணியை அளிப்பது, எ-டு. பிரஸ்டல்.

**Network addressing - வலைய முகவரி :** வலையத்தை இணைக்க இரு பண்பி பயன்படும் பொழுது, தொலைவிலுள்ள கணிப்பொறிகள் அதன் தொலைபேசி எண்ணால் அடையாளங் கண்டறியப்படுகின்றன. ஒரு வலையத்தின் கணுக்களைச் செல்வழிகள் மூலம் தோற்றுவிக்கக் கணிப்பொறிகள் இணைக்கப்படுமானால், ஒவ்வொரு கணுவையும் அடையாளம் கண்டறிய வேண்டும். இதற்கு ஒரு தனி எண் கொடுக்கப்படுகிறது. இதற்கு இணைய மரபுச்சீர் opsas (internet protocol address) என்று பெயர். இந்த எண் 4 பகுதிகளைக் கொண்டது. ஒவ்வொன்றும் 255க்குக் கீழ் இருக்கும்; முற்றுப் புள்ளிகளால் பிரிக்கப்பட்டிருக்கும். எ-டு. 192.168.1.1, 192112.246.65, 12345.74. 254 இந்த எண்களில் ஒவ்வொன்றும் எண்மி (octet) எனப்படும். நான்கு எண்மிகள் சேர்ந்து 32 பிட்டுகளைக் கொள்ளும்.

**Network applications - வலை யப்பயன்பாடுகள் :**இவை பின் வருமாறு.

1) சிக்கலைத் தீர்க்குங் கருவி

2) வங்கியில் நிதி மாற்றம் செய்யப்பயன்படுவது.

3) பல ஊடகங்களாலும் இணையத்தாலும் தொலை பேசிச் சாவடிகள் இணைக்கப்படும்.

4)முடிவு செய்யும் பயன்பாடுகள் : மின்னாட்சி, சட்டம் ஒழுங்கு உடல் நலம் பேணல்,

5) கல்விப் பயன்பாடுகள் : இணைய அடிப்படைக் கல்வி (web-based education). ஒருவர் தான் இருந்த இடத்தில் இருந்து கொண்டே கற்கலாம்.

6) கேளிக்கைகள் : இசை, விளையாட்டு.

7) வணிகப் பயன்பாடுகள் : மின்னஞ்சல், மின்வணிகம்.

**Network bus - வலையப் போக்குவாய்** : உள்ளூர்ப் பகுதி வலையமைவு (lan).

**Network communication protocol - வலையச் செய்தி தொடர்பு மரபுச்சீரி** : கணிப் பொறி வலையங்களில் இரு தனித் தொடர்பு மாதிரிகள் பயன்படுகின்றன. 1) இணைபகுதி (clipart) 2) இணை இணை முறைகள் (peer - to - peer systems) இவ்விரண்டில் முன்னது பொதுவான மாதிரியாகும். வலையப் பணியகங்க்ளில் இதையே அதிகம் பயன்படுத்துகின்றனர். எ-டு. உலகளாவிய இணையம் (www)

**Network data base - வலையத் தகவல் தளம்** : படிநிலை அமைப்புத் தகவல் தளத்தைப் போன்றது. இதில் ஒரு பதிவுவகை மற்றொரு பதிவுவகையோடு தொடர்புடையது.

**Network, diagram - வலையப் படம்** : ஒரு வலையத்தின் மொத்த அமைப்பைக் காட்டும் படம். இதில் முக்கிய கணுக்கள் அவற்றிற்கிடையே உள்ள வழிகள் முதலியவை அடங்கும். இது ஒரு செய்தித் தொடர்பு வலையமைப்பு ஆகும்.

**Network, future of - வலைய எதிர்காலம்** : பின்வருவன கருத்தில் கொள்ள வேண்டியவை. 1) மிக நேர்த்தியானதாகவும் அரிய அமைப்பு உடையதாகவும் இருக்கும். 2) விரைவு அதிகமிருக்கும். 3) வணிக நடவடிக்கைகள் விரியும். பயனாளி தொடர்பு கொள்ளலாம்; மென்பொருளைப் பெருக்கலாம். 4) முழு வலையமைப்பும் பயனாளிக்கு ஒரு கணிப்பொறி போலவே தோன்றும்.

**Network interface card, nic- வலையமைவு இடைமுக அட்டை, வஇஅ :** தகவல் மாற்றங்களை ஒருங்கிணைக்கும் வேலையைச் செய்யும் கருவியமைப்பு திட்ட வ.இ அக்கள்: எத்தர்நட் / ஆர்க்நட்

**Network programme - வலையமைவு நிகழ்ச்சி :** ஒருங்கிணைப்பு நிகழ்ச்சி: வானொலி, தொலைக்காட்சி.

**Network topology - வலையமைவு இட அமைப்பு :** ஒரு வலையமைவிலுள்ள பல கணிப்பொறிகளையும் இணைக்கும் செய்தித்தொடர்பு வழிகளின் திட்ட அமைப்பு. இவ்வலையமைவிலுள்ள ஒவ்வொரு கணிப்பொறியும் கணு எனப்படும். இவ்வமைப்பு மூவகை :

1) நீள் போக்குவாய்,

2) விண்மீன்,

3) வளையம்.

இதில் கணக்கில் கொள்ள வேண்டியவை : 1) கணுவகை 2) செயல்திறன் 3) பயன் படுத்தும் கம்பி வகை 4) ஆகும் செலவு, கலப்பின இட அமைப்புகளும் உண்டு.

**Networks, types of - வலையமைவு வகைகள் :** இவை முதன்மையாக மூவகை.

1) உள்ளூர்ப் பகுதி வலையமைவுகள், உபவ (lan) . இவை கம்பிகளால் இணைக்கப்பட்ட கணிப்பொறித் தொகுதி. ஒரு தனிக் கட்டிடத்திலோ கட்டிடத்தொகுதிகளிலோ இருக்கலாம். கணிப்பொறிகள் எண்ணிக்கை இரண்டிலிருந்து இரு நூறுகள் வரை இருக்கலாம். பொதுவாக உபவ என்பது வன்பொருள், மென்பொருள் தகவல் ஆகியவற்றைப் பகிர்ந்து கொள்வது.

2) அகல் பகுதி வலையமைவுகள் அபவ (wan) . இரண்டிற்கு மேற்பட்ட உள்ளூர்ப் பகுதி வலையமைவுகள் சேர்ந்ததே அபவ என்பது. தனிப்பட்ட உபவக்களை உரிய இணைப்புகள், ஒளி இழை வடங்கள், செயற்கை நிலா ஆகியவை மூலம் இணைக்கலாம்.

3) பெருநகர்ப் பகுதி வலையமைவு, பெபகுவ (man): இது நெடுந்தொலைவில் உள்ள கணிப்பொறிகளை இணைப்பது.

**Nexus - பிணைப்பு :** ஒரு தொகுதியிலுள்ள முனை. இதில் இடை இணைப்புகள் அமையும்.

**Nibble - நிபிள் :** 4 பிட் அலகு அதாவது நான்மி. பா. Bit, byte.

**Nines complement-ஒன்பதின் நிரப்பு :** ஒரு பதின்ம எண்ணின் 9-இன் நிரப்பைப் பெற, அந்த எண்ணிலுள்ள இலக்கங்கள் ஒவ்வொன்றையும் 9 லிருந்து கழித்து எழுதவும். கிடைக்கும் எண் 9-இன் நிரப்பு எண்ணாகும். காட்டாக, 456 என்னும் பதின்ம எண்ணின் 9

இன் நிரப்பு எண் 543 ஆகும்.

**Nlb - non-linear behaviour - நீள்சார்பிலா நடத்தை :**

**Node - the control point in a network.**
**கணு :** வலையமைவிலுள்ள கட்டுப்பாடு.

**Noise - a disturbance in a circuit.**
**இரைச்சல் :** ஒரு மின் சுற்றிலுள்ள அலைக் கழிவு.

**Non-print character - அச்சிடா உரு :** அச்சிடும் குறி இல்லாக் கட்டுபாட்டு உரு.

**Non-volatile memory - அழியா நினைவகம் :** மின் சாரம் நின்ற பின்னும் நீங்கா நினைவகம்.

**Nor circuit -இல்லாச் சுற்று :** இலக்கச் சுற்று. இரு ஒத்த உட்பலன் குறிகைகளும் இல்லாதபொழுது இது வெளிப் பலன் குறிகையை உண்டாக்கும்.

**Nor elements - இல்லாக் கூறுகள் :** இரும இலக்கங்களோடு செயலாற்றும் முறைமைக் கூறு. எ.டு. உட்பலன் 1, 0 என்றால் வெளிப்பலன் 0.

**Nor gate - இல்லா வாயில் :** இலக்கச் சுற்றில் உள்ள முடிவு செய் கட்டுமானத் தொகுதி. அதன் எல்லா உட்பலன்களும் இரும நிலை 0 இல் இருக்கும் பொழுது இரும 1 என்னும் உட்பலனை உண்டாக்கும். அதேபோல, அதன் ஒன்றுக்கு மேற்பட்ட உட்பலன்கள் இரும நிலை 1 இல் இருக்கும் பொழுது, இரும 0 என்னும் வெளிப்பலனை உண்டாக்கும்.

**Not gate -இல்லை வாயில் :** ஓர் இலக்கச் சுற்றில் முடிவு செய் கட்டுமானத் தொகுதி. இதன் தனி உட்பலன் இரும நிலை 0 என்று இருக்கும் பொழுது, இது இரும 1 ஐ வெளிப்பலனாக உண்டாக்கும். இல்லை வாயில்கள், பொது வாக, ஒருங்கிணை சுற்றுச் சிப்பங்களில் பயன்படுவது.

**Null - இன்மை :** தகவல் இல்லாமை

**Null cycle - இன்மைச் சுழற்சி :** புதிய தகவலைச் சேர்க்காமல் முழு நிகழ்நிரலையும் சுழல விட ஆகும் நேரம். -

**Number generator - எண் இயற்றி :** ஒரு சுட்டளவை அல்லது மாறிலியை உண்டாக்கும் கருவியமைப்பு.

**Number system, base - அடிஎண் எண்முறை :** அடி எண் மூலம் வேறுபடும் எண்முறை. எ-டு அறுபதின்ம எண் 10,பதின்மம் 16, எண்மம் 20, இருமம் 10000.

**Numeral - number - எண்.**

**Numerical analysis - எண் பகுப்பு :** கணிதச் சிக்கல்களைத் தீர்க்கப் பயன்படும் கணிப்புமுறை எ-டு. சமன்பாடுகளும் அணிகளும்.

**Numerical character - எண்ணுறு :** 0-9.

**Numeric constants - எண் மாறிலிகள் :** இவை எண்களே. எ-டு 24, 3, 15, 6. இவை இருவகை :

1) முழு எண் மாறிலிகள்

2) மெய் மாறிலிகள் பா. **C constants.**

**Numeric data - எண் தகவல் :** உருப்புலம் , எண் தகவல்களை மட்டும் கொண்டது.

**Num tv-நம் தொலைக் காட்சி :** மின் தொலைக்காட்சி. 24 மணி நேரமும் நடைபெறும் உலகின் முதல் தொலைக் காட்சி. பன்மக் கேளிக்கை வாயில்களைக் கொண்டது. 30 + தொலைக்காட்சி அலை வரிசைகளைக் கொண்டது.

O

**Object language - பொருள் மொழி :** இதில் மூலமொழி, தொகுப்பியால் மொழிபெயர்க்கப்படும். **Object programme - பொருள் நிகழ்நிரல் :** ஒரு நிகழ்நிரல் தொகுப்பியால் எந்திர மொழியாக மாற்றப்படும் பொழுது, அதனால் உண்டாகும் எந்திர மொழிக் கட்டளைகள் பொருள் நிகழ்நிரல் எனப்படும்.

**object-oriented data base - பொருள் நோக்கு தகவல் தளம் :** இது ஒரு புதிய அமைப்பு. அண்மைக் காலத்தில் அதிக நாட்டம் செலுத்தப்படுவது. ஒரு புது அணுகுமுறை கொண்டது. இதில் பொருள்கள் என்பவை தொகுதித் தகவல்கள், இனங்கள் மற்றும்

அவற்றோடு தொடர்புள்ள இயல்புகள், செயல் முறைகள், பண்பியல்புகள் ஆகும். எடுத்துக்காட்டு : படம், ஒலி, வரைகலை, நிறம், அளவு.

**octal digit - எண்மத்தகவல் :** எண்ம எனக் குறிமுறையில் உள்ள இலக்கம். எடுத்துக்காட்டு : 0, 1, 2, 3, 4, 5, 6, 7 என்னும் எண்களில் ஒன்று.

**octal notation - எண்மக்குறிமானம் :** 8 அடி எண்ணாகப் பயன்படும் எண்முறை.

**odd parity check - ஒற்றைச் சமச்சரிபார்ப்பு :** இரும இலக்கத் தொகுதியால் 1, 0 ஆகியவற்றில் உள்ள சமச் சரிபார்ப்பு.

**office 2000 - ஆபிஸ் (அலுவலகம்) 2000 :** மைக்ரோசாப்டின் விளைபொருள். மேடைப் பயன்பாட்டின் இறுதி இடைய (வெப்) அமைப்பைக் குறிப்பது. இணையத்தோடும் தொடர்புள்ளது.

**offline operation - மறைமுக இயக்கம் :** மையச் செயலகத்தின் கட்டுப்பாட்டில் இல்லாமல் இயங்கும் வெளிப்புறக் கருவியமைப்பு. அச்சியற்றி. ஒ. Online operation.

**offline unit - மறைமுக வழியலகு :** முதன்மைக் கணிப்பொறியுடன் இணையாது இயங்கும் கருவியமைப்பு.

**offset - மறுதோன்றி :** தேவைப்படும் கட்டுப்பாட்டு முனைக்கும் முறையாக்கு கட்டுப்பாட்டு முறையிலுள்ள முனைக்கும் இடையிலுள்ள நிலையான வேறுபாடு.

**omission factor - விடுபடு காரணி :** பொருத்தமான மீட்கப்படாத ஆவண எண்ணிக்கையைக் கோப்பிலுள்ள பொருத்தமான ஆவணங்களின் மொத்த எண்ணிக்கையால் வகுத்து வரும் எண்.

**ones complement - ஒன்றின் நிரப்பு :** இருமக் குறிமானத்தைப்

பொறுத்தவரை ஒன்றின் நிரப்பை மூலத்திலிருந்து (radix) கழிக்க வேண்டும்.

**online operation - நேர்முக இயக்கம் :** இது கணிப்பொறி இயக்கமாகும். இதில் உட் பலன் தகவல்கள் கணிப்பொறியில் நேரடியாகச் செலுத்தப்படுகின்றன. ஒ. Offline operation.

**opening a file - கோப்பைத் திறத்தல் :** இச்செயல் மென்பொருளால் நடைபெறுவது. இதில் அடிப்படையில் கோப்பு இனங் காணப்படுகிறது; பயன்படுத்தப்படுகிறது.

**open loop - திறந்த வளையம் :** இது ஒரு கட்டுப்பாட்டுமுறை. இதில் திருத்தம் புறப்புனைவைப் பொறுத்துள்ளது.

**open system - திறந்தமுறை :** இது ஒரு வலையமைவு. இதில் ஒரு கணிப்பொறி மற்றொரு கணிப்பொறியுடன் தொடர்பு கொள்வது.

**open system inter connection, osi- திறந்தமுறை இடை இணைப்பு, திமுஇ :** அனைத்துலகத் தர அமைப்பு. ஒரு தொகுதி மரபுச்சீரிகளை (புரோட்டோகோல்கள்) உருவாக்கியுள்ளது. இதுவே திறந்த முறை இடை இணைப்பு எனப்படும். இதில் 7 அடுக்குகள் உள்ளன.

1) பயன்பாட்டு அடுக்கு.

2) அளிப்பு அடுக்கு.

3) அமர்வடுக்கு.

4) போக்குவரவு அடுக்கு.

5) வலையமைவு அடுக்கு.

6) தகவல் இணைப்பு அடுக்கு.

7) மெய்யடுக்கு.

இவ்வடுக்கு முறையில் அமைந்த எவ்வலையமைப்பும் இதே அமைப்புள்ள வேறு எந்த வலையமைவோடும் தொடர்பு கொள்ளலாம்.

**operand - செயலிடம் :** இது, ஓர் இனம் அல்லது நினைவக இடமாகும். இதில் கணிதச் செயல் நடைபெறும்.

**operating ratio - இயங்குவீதம் :** வன்பொருளும் மென்பொருளும் சேர்ந்த தொகுதி அளிக்கும் பணியின் கால அளவு. இந்த நேரம் கிடைக்கும் நேரத்தின் விழுக்காடாகக் கொள்ளப்படுகிறது. இங்கு மொத்த நேரத்திலிருந்து 2 இறக்க நேரம் கழிக்கப்படுகிறது.

**operating system, os - இயங்குமுறை, இமு :** இது ஒரு கட்டுப்பாட்டுமுறை. இதில் எல்லா மென்பொருள் வேலைகளும் கட்டுப்படுத்தப்படுகின்றன.

**operation - செயல் :** 1) ஒரு கணிப்பொறிக் கட்டளையால் கட்டுப்படுத்தப்படும் செயல். 2) எண்கணிதம், முறைமை மற்றும் கையாளும் செயல்களைத் தகவல்கள் கொண்டு செய்தல்.

**operation code - செயல் குறிமுறை :** செயல்குறிமை. கணிப்பொறிக் கட்டளைப்பகுதி. நிறைவேற்றப்பட வேண்டிய செயல்களைக் குறிப்பது. எடுத்துக்காட்டு : கூட்டு, பெருக்கு.

**operation cycle - இயக்கச் சுழற்சி :** நினைவகச் சுழற்சியின் பகுதி. பெருக்கல், கழித்தல் முதலிய செயல்கள் நடைபெறுபவை.

**operation register - இயக்கப் பதிவகம் :** இப்பதிவகத்தில், இயக்கச் சுழற்சியின் பொழுது, இயக்கக் குறிமை பதிவு செய்யப்படும்.

**operation time - இயக்க நேரம் :** ஒரு குறிப்பிட்ட செயலுக்கு இயக்கச் சுழற்சியை நிறைவேற்றத் தேவைப்படும். நேரம்.

**operator - செயலி :** முறைமை அல்லது கணிதக்குறி அல்லது உரு ஆகும். இது ஒரு செயலிடத்தில் நிறைவேற்றப்பட வேண்டிய செயலைக் குறிக்கும். எடுத்துக்காட்டு : +, −, x, and, or.

**operator, comma - காற்புள்ளிச் செயலி :** செயலிகளில் ஒரு வகை.

**operator, kinds of - செயலி வகைகள் :** இவை பின்வருமாறு.

1) எண்கணிதச் செயலிகள் : இவை எண்முடிவுகளைத் தருபவை. எடுத்துக்காட்டு : + கூட்டல், 1 + 1.

2) ஒப்பீட்டுச் செயலிகள் : இவை மெய் அல்லது பொய் முடிவுகளைத் தெரிவிப்பவை. எடுத்துக்காட்டு : = சமம், a1 = b1.

3) பாடச் செயலிகள் : இவை முழுப் பாடத்திற்கும் பாடப் பகுதிகளைச் சேர்ப்பவை. எடுத்துக்காட்டு : & (and), பாடச்செயலி, ஸ்டார் மற்றும் ஆபீஸ், ஸ்டார் ஆபீசைக் கொடுக்கும்.

4) பார்வைச் செயலிகள் : கணிப்பொறியின் நுண்ணறைகளைச் சேர்ப்பவை. எடுத்துக்காட்டு : அரைப்புள்ளி எல்லை a1 : c 108.

**optical character recognition, ocr - ஒளியுரு அறிதல், ஒஉஅ :** கையால் எழுதிய அல்லது அச்சிட்ட தகவலைக் கணிப்பொறிக்குள் செலுத்தும் முறை. இதற்கு ஒளி இருமுனை வாய்கள் பயன்படுகின்றன. தாளில் மறிக்கப்படும் ஒளி மாறுபாட்டை இவை அறியபவை.

**optical disk - ஒளிவட்டு :** ஒளிச்சேமிப்பைப் பயன்படுத்தும் வட்டு.

**optical mark reading and recognition - ஒளிக்குறி படித்தலும் அறிதலும் :** இம்முறையில் பென்சிலால் 2 போன்ற குறிகளைக் குறிக்கப் போதுமான கட்டங்கள் கொண்டதும் முன்னரே அச்சிடப்பட்டதுமான படிவங்கள் வடிவமைக்கப்பட்டுள்ளன. இவ்வகை ஆவணங்கள் ஆவணப்படிப்பி மூலம் படிக்கப்பட்டு, ஆவணத்திலுள்ள குறிகள் மின்துடிப்புகளாக மாற்றப் பட்டுக் கணிப்பொறிக்குள் செல்கின்றன.

**Optical mark reading and recognition, uses of - ஒலிக்குறி பார்த்தலும் அறிதலும் அவற்றின் பயன்களும் :** 1) புறத்திண்மையுள்ள தேர்வு விடைத்தாள்கள் திருத்தல். 2) மக்கள் தொகை, அங்காடி அளவை எடுத்தல். 3) பன்மத் தெரிவுள்ள ஆவணங்கள் உருவாக்கல் 4) பணியாள்கள் வரும் நேரம் செல்லும் நேரம் ஆகியவற்றைப் பதிவு செய்தல், அட்டவணை தயாரித்தல்.

**Optical memory - ஒளி நினைவகம்** : இது கணிப்பொறி நினைவகம், ஒளி நுணுக்கங்களைப் பயன்படுத்துவது. இதில் இனங்காண் லேசர் கற்றைப் பயன்படுகிறது.

**Optical reader - ஒளிப் படிப்பி** : இது கணிப்பொறித் தகவல் பதிவு செய்யும் எந்திரம், அச்சிட்ட உருக்களையும், வரிக்குறிமைகளையும் கணிப்பொறி உட்பலன் குறிமைப் படிவமைப்பாக மாற்றுவது.

**Optical scanner - ஒளி அலகிடும் கருவி** : அச்சிட்ட உருக்கள் உருவாக்கும் ஒளிக் கோலங்களைப் பகுத்துப் பார்ப்பது. பின் இக்கோலம் குறிகையாக மாற்றப்படுவது. இச்செயல் கணிப்பொறியால் முறையாக்கப்படுவது.

**Optical storage - ஒளிச் சேமிப்பு** : ஒரு மையத் தடங்களில் நுண் குழிகளாக இலக்கத் தகவல்களைப் பதிவு செய்யும் கருவி.

**Optimization - நடுமமாக்கல்** : ஒரு தொகுதி பெருமப் பயனுறு திறன் பெற வடிவமைக்கப்படுதல். இது நிகழ்நிரலாகவும் இருக்கலாம்.

**Optimum code - நடுமக் குறி முறை** : ஒரு குறிப்பிட்ட நிலைக்குப் பயனுறுவதாக அமையும் கணிப்பொறிக் குறிமை. எ-டு நிறைவேற்றத் தேவைப்படும் குறைந்த காலம்.

**Optimum programming - நடும நிகழ் நிரலாக்கல்** : சில நெறிமுறைகளைப் பொறுத்தவரை பெரும் பயனுறுதிறன் நிகழ்நிரல்களை உருவாக்கல். எ-டு குறைந்த அடக்கச் செலவு, குறைந்த சேமிப்புப் பயன்.

**Option - choice - தெரிவு** : விருப்பம்.

**Option button - தெரிவு பொத்தான்கள்** : இவை எளிய ஆம், இல்லை என்னும் வினாக்கள் கேட்கப் பயன்படுபவை. ஒரு சமயத்தில் ஒரு தெரிவையே பெற இயலும்.



**Option explicit statement - தெரிவு வெளிப் படைக் கூற்று** . இதை அறுதியிடும் பகுதியில் பயன்படுத்த வேண்டும்.

**Oracle - ஆரகிள்** : தொலைப் பாடத்திற்கு (teletext) எடுத்துக் காட்டு.

**Ordering** - arraying a set of data into a particular pattern according to some rule. **வரிசையாக்கல்** : விதிப்படி தகவல் தொகுதியைக் குறிப்பிட்ட கோலத்தில் ஒழுங்கு செய்தல்.

**Or gate** - a decision making building block in digital circuits. It produces an output of binary 1 when one or more of its inputs has a value of binary 1. It also produces an output of binary 0, when all its inputs have a value of binary of. These gates are generally used integrated circuit packages. - **அல்லது வாயில்** : இலக்கச் சுற்றுகளிலுள்ள முடிவு செய்கட்டுமானத்தொகுதி. இதன் ஒன்றுக்கு மேற்பட்ட உட்பலன்கள் இரும 1 என்னும் மதிப்பைக் கொண்டிருக்கும் பொழுது, இது இரும 1 என்னும் வெளிப்பலனை உண்டாக்குவது. அதன் எல்லா உட்பலன்களும் இரும 0 என் னும் மதிப்பைக் கொண்டிருக்கும் பொழுது, இது இரும 0 என்னும் வெளிப்பலனை உண்டாக்கும். பொதுவாக, இவ் வாயில்கள் ஒருங்கிணைசுற்றுச் சிப்பங்களில் பயன்படுவது.

**Origin - தோற்றம்** : ஒரு சேமிப்புப் பகுதியின் தொடக்கத்தைக் குறிக்கும் தனி முகவரி.

**Orom - optical read only memory - படிப்பதற்குரிய ஒளி நினைவகம்**.

**Or operator - அல்லது செயலி**: செயலியுடன் பயன்படும் சொற்களைக் கொண்டுள்ள இடைய (வெப்) பக்கங்களைப் பட்டியலிட இது பயன்படும்.

**Other events - பிற நிகழ்வுகள்**:

இவை பின்வருமாறு.

1) **வினையாற்று** : படிவம் வினையாற்றும் சாளரமாக வரும்பொழுது உண்டாவது.

2) **வினை குறை** : படிவம் வினையாற்றாது இருக்கும் பொழுது உண்டாவது.

3) **குவியம் பெறு**: பொருள் குவியத்தைப் பெறும்பொழுது உண்டாவது.

4) **குவிய இழப்பு**: வேறு ஒரு கட்டுப்பாட்டுக்கு குவியம் மாறும்பொழுது உண்டாவது.

5) **சுமை ஏற்று**: முதல் தடவையாகப் படிவம் சுமையேறும் பொழுது உண்டாவது.

6) **சுமை இறக்கு** : படிவம் சுமை இறக்கும் பொழுது உண்டாவது. **outlook express - பார்வை விரைவி :** இது ஒரு நிகழ்நிரல் மின் அஞ்சலை அனுப்பப் பயன்படுவது. செய்திகளைக் கோத்து அனுப்பலாம். பெறும் செய்திகளைப் பார்வையும் இடலாம். இதன் பிற இயல்புகளாவன.

1) செய்திகளுடன் கோப்புகளை இணைப்பது.

2) அனுப்புவதற்கு முன் செய்திகள் பிழையில்லாமல் இருக்குமாறு செய்கிறது.

3) செய்தியை ஏனையவருக்கு அனுப்புகிறது.

4) மின்னஞ்சல் முகவரிகளைக் கொண்டது.

**Output - வெளிப்பலன் :** கணிப்பொறி உண்டாக்கும் விடுவரல்.

**Output devices - வெளிப்பலன் கருவியமைப்புகள் :** இவை கண்காணிப்பிகளும் அச்சியற்றிகளும் ஆகும். கண்காணிப்பிகள் தகவல்களைத் திரையில் காட்டுபவை. இக்காட்டுகை தொலைக்காட்சி போல் தெரியும். இவற்றின் உயர் பகுப்பு 1280 x 1024 குறும்படங்கள். இவை ஒற்றை நிறக் கண்காணிப்பி பல நிறக் கண்காணிப்பி என இருவகை. உட்பலனை வெளிப்பலனாக அச்சிடுபவை. இவை வரி அச்சியற்றிகள், தொடர் அச்சியற்றிகள், எழுத்துத்தர அச்சியற்றிகள், லேசர் அச்சியற்றிகள் என நான்கு வகை.

**Output functions - வெளிப்பலன் சார்புகள் :** இவை கணக்கிடப்பட்ட விளை பயன்கள். இவற்றில் ஒன்று printf(). இது சரம், எண், உரு ஆகியவற்றை அச்சியற்றப் பயன்படுவது. இதன் பொதுப் படிவ அமைப்பு பின்வருமாறு. Printf ("format string", var 1, var 2.... Varn); ஒ. Input functions.

**Output programme - வெளிப்பலன் நிகழ்நிரல் :** வெளிப்பலன் கருவியமைப்புக்குச் சிறப்பாக எழுதப்படும் நிகழ்நிரல்.

**Output record - வெளிப்பலன் ஆவணம் :** வெளிப்புறக் கருவியமைப்புக்கு எழுதப்படும் ஆவணம்.

**Output unit - வெளிப்பலன் அலகு :** நினைவக அலகில் சேமித்து வைக்கப்படும் ஒ. Input unit

**Overflow - வழிந்தோடல் :** இது எண்கணிதச் செயலால் ஏற்படுவது. இதில் ஓர் எண் இயற்றப்படும். இந்த எண்

எந்திரத்தின் வன்பொருள் சொல் அல்லது மென்பொருள் சொல் அளவு வரம்புகளுக்குப் பெரிதாக அமையும்.

**Overlay - மேலமைத்தல் :** முதன்மை நினைவகத்திற்கு நடைமுறைச் செயல்களைக் கொண்டு வரும் நுணுக்கம்.

**Overprint - மேல் அச்சிடல்** : முன்னரே அச்சிட்ட உருக்கள் மீது அச்சிடல், அச்செழுத்தை மேம்படுத்த இது செய்யப் படுகிறது.

**Owner - உரிமையாளர்** : பய னாளித் தகவல்களைக் கட்டுப் படுத்திப் பயன்படுத்துபவர்.

**P**

**Package** - a generalized programme written for a major application

**அடைப்பம்** : ஒரு பொருள் பயன்பாட்டுக்காக எழுதப் படும் பொது நிகழ்நிரல்.

**Packet** - a collection of common punched cards : data pack.

**அடைப்பு** : துளையிட்ட பொதுவான அட்டைகள் திரட்டு : தகவல் அடைப்பு.

**Packet** - a short fixed block of data used for transmission.

**சிப்பம்** : செலுத்துகைக்காகப் பயன்படும் குறுகியதும் நிலைத் ததுமான தகவல் தொகுதி.

**Pad-திண்டு** : தனி எழுதியினால் ஒரு தட்டையான பரப்பில் உட்பலனை எழுதி உருவாக்கப் பயன்படும் கருவியமைப்பு. தகவல் உட்பலன் பாடமாக அல்லது வரைகலையாக இருக் கலாம்.

**Padding - தளமாக்கல்** : ஓர் ஆவணத்தின் முனையில் சிறப் பிலா உருக்களின் வெற்றுப் பகுதிகளைச் சேர்த்தல். குறிப் பிட்ட அளவுக்கு அதை உட் படுத்தலே இச்செயலின் நோக்கம்.

**Paddle** - a cursor control device used in computer games. துடுப்பு : கணிப்பொறி விளை யாட்டுகளில் பயன்படும் குறிப்பிக்கட்டுப்பாட்டுக் கருவி யமைப்பு.

**Page - பக்கம்** : குறிப்பிட்ட அளவு நீளமுள்ள நிலையான தகவல் தொகுதி அல்லது ஒரு நிகழ்நிரலின் உட்பிரிவு. சேமிப்பில் இது ஒரு முழுமையாகக் கருதப்படுகிறது.

**Page fault - பக்கக் குறை** : பக்கத்தை நினைவகத்தில் படிக்கும் பொழுது தோன்றும் குறுக்கீடு.

**Page formatting - பக்கம் படிவமைப்பு** : ஒரு பக்கத்தில் தோன்றும் பாடத்தை படிவ மைக்க எச்டிஎம்எல் ஒட்டுகள் பயன்படுபவை. இதை முன் பக்கத்தைக் கொண்டு செய்யலாம். முன்பக்கச் சாளரக் கருவிப்பட்டைகள் என்பவை அடிக்கடி உருவாகும் படிவ மைப்புகளுக்குரிய படங்களைக் காட்டுபவை. இந்நுண் படங்களைப் பயன்படுவதற்குரிய முன்படிவமைப்பைச் page



செய்யப் பாடத்தை ஒளிர் வாக்க வேண்டும். இதில் ஓரம், பக்கப் பாணி, ஓரங்களை மாற்றல் ஆகியவை அடங்கும்.

Page orientation - பக்கம் அமைப்பு : அகலத்தை விட நீளம் ஆவணத்தில் அதிகமிருக் கும். இந்த அமைப்பு ஓவியம் எனப்படும். ஆனால், சில ஆவணங்களில் அகலம் நீளத் தைவிட அதிகமிருக்கும். இந்த அமைப்பு பருமக் காட்சி எனப்படும். மற்றொரு வகைப் படக் காட்சியமைப்பு. அடிக் குறிப்பும் தலைக்குறிப்பும் ஒவ் வொரு பக்கத்திலும் சேர்க்கப் படும்

Page printer - பக்கம் அச்சியற்றி: இதில் ஒரு முழுப் பக்கத்திற் குரிய உருக்கோலம் அச்சியற்று வதற்கு முன் அறுதியிடப்படும்.

Page reader - பக்கப் படிப்பி

இரு உருப்படிப்பி,

Page style dialog box - பக்கப் பாணி உரையாடல் பெட்டி : இது ஓரங்களில் வேண்டிய மாற்றங்களைச் செய்ய உதவும்.

Paging - பக்கமிடல் : இது மாயச் சேமிப்பில் ஒருமுறை. இதனால் பக்கங்களுக்கு கருவிச் சேமிப்பு ஒதுக்கப்படு கிறது. இப்பக்கங்களில் தகவல் கள் இருக்கும்.

Paint - வண்ணமிடல் : இது பயன்பர்டு. இதில் படம் வரைந்து பின் அது வண்ண மிடப்படும்.

Pan - தகட்டுப்படம் : படமுறை யாக்கலில் ஒரு நுணுக்கம். இதில் படம் திரையின் குறுக்கே செல்லும். பெரிய படத்திலிருந்து சில விவரங் களைக் காட்ட இது பயன்படுவது.

Paper feed - தாள்விடல் அச்சியற்றி வழியாகத்தாள் இழுக்கப்படும் முறை.

Para alignment - பத்தி வரிசை suflang யாக்கம் : இது நான்கு வகை. 1) இடப் பக்க வரிசையாக்கம் 2) வலப்பக்க வரிசையாக்கம் 3) மையப்படுத்தல் 4) நெருக்கிச் செய்தல்.

Parallax - இடமாறு தோற்றப் பிழை ஒரு படத்தைப் பார்க்கும் பொழுது அதில் ஏற்படும் தோற்றத் திரிபு.

Parallel access - ஒரு போகு அணுக்கம் : தகவல்களைச் சேமிப்புக்கு உள் மாற்றுதலும். வெளி மாற்றுதலும். இதில் எல்லாக் கூறுகளும் ஒரே சமயம் மாற்றப்படும், வேறு பெயர் ஒருபடித்தான அணுக் கம்.

Parallel computer - ஒரு போகு, கணிப்பொறி : ஒரு சமயம் ஒன்றுக்கு மேற்பட்ட முறை மை அல்லது எண்கணிதச் para





செயலைச் செய்யும் கணினி. Parallel inter face - ஒரு போகு இடைமுகம் : இதில் ஒருபோகு தகவல் மாற்றம் நடைபெறும்; இம்மாற்றம் வெளிப்புற அலகு களுக்கும் முறையாக்கிக்கும் இடையே நடைபெறும்.

Parallel operation - ஒரு போகு செயல் : ஒரே சமயம் பல மாதிரியான செயல்கள் நடை பெறுதல்.

Parallel processing - ஒரு போகுமுறையாக்கல் : ஒரு கணிப்பொறியில் ஒரே சமயம் இரு நிகழ்நிரல்கள் ஓடுதல்.

Parameter - a variable whose value is set in the main programme and passed along to a sub routine. சுட்டளவு : இது ஒரு மாறி. இதன் மதிப்பு முதன்மை நிகழ்நிரல் அமைக்கப்பட்டுப் பின் துணை நடைமுறைக்குச் செல்லும்.

Parity check - சமச் சரி பார்ப்பு

இது ஒரு பிழையறியும் நுணுக்கம். செலுத்தியபின் கணிப்பொறிச் சொற்களின் துல்லியத்தைச் சரிபார்க்கப் பயன்படுவது.

Parity check bit - சமச்சரி பார்ப்புப் பிட் : கணிப்பொறி யில் தகவல்களை அளவிடும் பொழுதும் பதியும் பொழுதும்

ஒரு தகவலை ஓர் அலகி லிருந்து மற்றொரு அலகுக்குச் செலுத்தும் பொழுதும் பிழை கள் ஏற்படும். ஓர் எண்ணுரு விற்குரிய குறி முறையில் ஏற் படும் ஒரு தனிப் பிழையைக் கூடக் கண்டறியலாம். இதற்குக் குறிமுறையில் கூடுத லான ஒரு பிட்டைச் சேர்க்க வேண்டும். இதுவே இதைச் சரிபார்க்கும் பிட் (இருமி).

Parity error - சமப்பிழை சரிபார்ப்பினால் கண்டறியப் படும் தவறான சமத்தினால் ஏற்படும் பிழை.

Partition - பிரித்தல் : கணிப்பொறி நினைவகத்தின் ஒதுக்கிய பகுதி. ஒரு தனி

கணிப்பொறி நிகழ்நிரலைச்

செயற்படுத்தப் பயன்படுவது. Pascal - பாஸ்கல் : ஓர் உயர்

நிலைக் கணிப்பொறி மொழி.

கட்டமைப்பு நிகழ்நிரலை உரு வாக்கப் பயன்படுவது. இதைப் புனைந்தவர் ரிக்காலஸ் ஒர்த். ஆனால் 17 ஆம் நூற்றாண்டின் பிரெஞ்சுக் கணித அறிஞரும் மெய்யறிவாளருமான பிளய்சி பாஸ்கல் பெயரால் அமைந்தது.

பா. Structural programming. Password - கடவுச்சொல்: செலுத்துசொல் குறிஉருக் களின் தொகுதி, பொருள் இருக்கத் தேவை இல்லை. கணிப்பொறியை அனுக இதைப் பயன்படுத்த வேண்டும்.

Password control - கடவுச் patch

சொல் கட்டுப்பாடு : மென் பொருள்களுக்குள் செல்லு வதற்குரிய அனுமதிபெறச் செலுத்து சொல் ஒரு பாடப்பெட்டியில் கொடுக்கப்பட்டிருக்கும். நாம் அடிக்கும் ஒவ் வொரு எழுத்திற்கும் அந்த எழுத்திற்குப் பதிலாக ஒரு விண்மீன் குறிப்பு வரும். நாம் கொடுக்கும் கடவுச்சொல் பிறருக்குத் தெரியக்கூடாது என்பதற்கே இந்த ஏற்பாடு.

Patch - ஒட்டுக்குறி : ஒரு குறி முறையின் பகுதி, ஒரு நிகழ் நிரலைத் திருத்தப் பயன்படுவது.

Path - வழி : ஒரு கணிப்பொறி நிகழ்நிரல் கட்டளைகளின் முறைமை வரிசை, pattern recognition - கோலமறிதல் :

வடிவம், குறிகை, வரி சை முதியவைகளைக் கணிப் பொறி மூலம் இனங்காண லும் அறிதலும். -

Paulina - பாலினா : தற்காலச் கணிப்பொறி மாயங்களைப் பற்றி நூல் எழுதியவர். இதில் இவர் கணிப்பொறியின் வியப் புகளையும் வேதனைகளையும் குறிக்கின்றார்.

Peak load - உச்சிச் சுமை : ஒரு வலையமைவுக்குத் திட்டமிடப் படும் பெருமச் செய்திப் போக்குவரத்து.

Peak volume - உச்சி பருமன் : தன் வேலை நேரத்தில் ஒரு வலையமைவு ஒரே சமயம்





கையாளும் அழைப்புகளின் எண்ணிக்கை.

Pen - தூவல் : கையால் எழுதிய உட்பலனை இயக்கும் கருவி யமைப்பு

Performance - செயல்திறன்: ஒரு கணிப்பொறித் தொகுதி யின் திறனளவு. வேறுபட்ட செயல்திற முறைகள் உள்ளன. இத்திறன் மிப் (mip) எனப்படும். ஒரு வினாடிக்கு இத்தனை மில் லியன் கட்டளைகள் என்பதை இது குறிக்கும்.

Peripheral devices - வெளிப் புறக் கருவியமைப்புகள் இவை உட்பலன் அலகு, வெளிப்பலன் அலகு. இரண் டாம் நிலைச் சேமிப்புக்குரிய கருவியமைப்புகள் (வட்டு, நாடா) ஆகியவை ஆகும்.

Personal computer - தனியாள் கணிப்பொறி : தனிநபர் தன் வீட்டில் பயன்படுத்துவது. இக்கணிப்பொறி வளர்ச்சி இந்தியாவில் 25% அளவே உள்ளது.

Personal identification code,

Pic - தனி அடையாளக் குறி. முறை, தஅகு : இது ஆறு உருக்களின் நீளத்தில் உள்ள சிறப்பெண். காந்த நாடாவில் பொருந்தி இருக்கும். இந்நாடா பிளாஸ்டிக் அட்டையில்

பதிந்திருக்கும். பயனாளியை இனங்காணப் பயன்படுவது.

Pertinency factor - பொருத்து phy

178

Plato

திறன் காரணி : மீட்கப்பட்ட உரிய ஆவணங்களின் மொத்த எண்ணிக்கையை அவ்வாறு இல்லாத மொத்த ஆவணங் களால் வகுத்து வரும் எண். இது ஒரு வீதம்.

Physical file - மெய்க்கோப்பு: ஓர் இயங்கு தொகுதியில் உள்ள சிறப்பு மெய்ச்சேமிப்பு ஊடகம். இதில் அடங்கியுள்ள கோப்பே மெய்க் கோப்பு.

Picture - படம்: உருக்காட்சி யில் தெரியும் தகவல் தொகுப்பு

Picture description instruc tions, pdi - படவிளக்கக் கட்டளை, பவிக : கூடுதல் கூறுகளினால் உண்டாகும் படத்தை விளக்கப் பயன்படும் ஒரு வகைக் குறி முறை. வரிகள், கோடுகள், வில்கள் முதலியவை கூறுகள் ஆகும்.

Picture element - படக்கூறு : வரைகலைக் காட்சியில் படத் தின் சிறிய கூறு.

Picture frequency - பட நிகழ்வெண் தொலைக் காட்சிப் படத்தை உருவாக்கும் வரி எண்ணிக்கையின் முழுத் தொகுதி. அலகு ஹெர்ட்ஸ் (ஒரு வினாடிக்கு இத்தனை சுற்றுகள்) -

Pie chart - வட்ட விளக்கப்படம் : வட்ட வட்டமாகத் தக வல்களைத் தெரிவிக்கும் படம்.

Pin - ஊசி : நறுவலில் உள்ள சிறுகால்கள். அச்சிட்ட சுற்று

பலகையில் உள்ள இணை துளைகளுக்கு ஒத்தவாறு இருக்கும்.

Pin board - ஊசிப்பலகை : செருகு வடிவப் பலகை. இங்கு ஊசிவடிவிலுள்ள நாணற்ற செருகிகளால் இடை இணைப்புகள் அமையும்.

Pin feed - ஊசி வழி ஊட்டல் : ஓர் அச்சியற்றியின் ஊசிப் பொறிநுட்பம். இது அச்சிட வேண்டிய தாளைச் செலுத் தும்.

Pipelining - தொடர்செலுத்துகை : முன்னுள்ள கட்டளை முழுமையாக நிறைவேறுவ தற்கு முன் ஒரு கணிப் பொறிக் கட்டளையைத் தொடங்கும்.

Pixel-picture element - குறும்படம் : படக்கூறு. பா. Icon.

Planet | q 56 - l (பிளானெட்

ஐகுயு 56 (கோள் நுண்ணறிவு) : கல்கத்தாவில் அமைந்துள்ள தும் சிறப்பு வாய்ந்ததுமான பன்ம ஊடக விளையாட்டுத் திடல். சிறந்த தொடக்கநிலைக் கல்வி அளிப்பதற்காக உரிய மென்பொருள் உருவாக்கப் பட்டுள்ளது. 12 வயதுள்ள மாணவ மாணவிகள் பயன் பெறுவர். (1999).

Plato - பிளேட்டோ : கணிப் பொறி வழியமைந்த கல்விமுறை. 1000க்கு மேற்பட்ட முனையங் களைக் கொண்டது. முழுக்க முழுக்கக் கல்வி நோக்குள்ளது. ple

179

Print

Pledm, phase state low electron drive memory - பிளடம், கட்டநிலை தாழ் மின்னணு இயக்க நினைவகம் : இது மிகச் சிறிய படிகப் பெருக்கி. ஆற்றல்வாய்ந்த நினைவகம். ஜப்பான் கிச்சாசி நிறுவனத்தின் உற்பத்திப் பொருள் - pl i m - programming language for micro processors. பிஎல்/எம் : நுண்முறையாக்கி களுக்குரிய நிகழ்நிரல் மொழி. Pl. l 1 - programming language 1, developed in the mid 60's. It combines features useful for both scientific and data processing applications. பிஎல்/ : நிகழ்நிரல் மொழி 1 நடு 1960களில் உருவானது. அறிவியல் மற்றும் தகவல் முறையாக்கு பயன்பாடுகளுக்கு உதவுவது. Plotter - a device for producing hard copy of graphic images by controlling pens. வரைவி : கட்டுப்பாட்டு எழுதி கள் மூலம்

வரைகலைப் படங் களின் வன்படியை உண்டாக் கும் கருவியமைப்பு. Plug - செருகி : நெகிழ்வுள்ள நாண் கொண்ட கருவியமைப்பு. ஒவ்வொரு முனையிலும் ஒன் றுக்கு மேற்பட்ட ஊசிகள் இருக் கும். ஒரு திருத்தியின் கூடுகளை இணைக்கப் பயன்படுவது.

B.12,

Pocket - அடுக்கி : பிரிப்பி தொடர்பாகப் பயன்படுவது. Pointer - குறிகாட்டி : தினை வகத்தில் குறிப்பிட்ட இடத்தி லுள்ள தகவலை இடங் காணப்பயன்படும் முகவரி. Port: வாயில் : வெளிப்புறப் பகுதிகளையும் கணிப்பொறி களையும் இணைக்கும் உட் பலன் / வெளிப்பலன். Post - மேம்படுத்து : தகவ லுள்ள ஆவணத்தை உயர்த்து தல். Primary key - gpg, sit aou, ¿ g pal : It.relational data base print and web - 2133, th இடையமும் : அச்சு விரைவு, அச்சு எழுத்துவகை, உருவத் தன்மை, பார்க்குமிடத்தின் அளவு ஆகியவற்றைப் பொறுத்தவரை இடையத்தை

விட அச்சு மேலானது.

இடையம் வரைகலையைக் குறைத்துச் சிறிதாக்கல், பாடத் தைச் சுருக்கல், குறைந்த வகை வகையான எழுத்துகள், வரை யறையுள்ள திட்டவரைகள். இவை இடையத்தை வருங் காலத்தில் வளப்படுத்தும். Printed circuit - 9¦#3, #5 byl : ஒரு பலகையின் மேற்பரப்பில் மின்சுற்றுப் படத்தைக் கணிக் கும் விளக்கங்களை உண்டாக் கும் நுணுக்கம். Printer - அச்சியற்றி : வெளிப் print



Print

பலன் கருவிக்கு வன்பொரு ளை உண்டாக்கும் கருவி யமைப்பு. Printer, kinds of - அச்சியற்றி வகைகள் : இவை பின்வருமாறு

1) வரி அச்சியற்றி ஒரு சமயம் முழு வரியை அச்சியற்றும். அச்சியற்றும் விரைவு 1 நிமிக்கு 150 - 2000 வரிகள், 15 அங்குல வரியில் 96 - 160 உருக்கள் இருக்கும். ஒரு செங்குத்து அங்குலத்திற்கு 6-8 வரிகள் அச்சாகும். இதன் வகை : 1) உருளை அச்சியற்றி ! இதில் உருளை இருக்கும் இதன் மேற்பரப்பில் அச்சிடப்பட வேண்டிய உருக் கள்

பதியும். 2 தொடர் அச்சி யற்றிகள் . இதில் ஓர் எஃகுப் பட்டை உண்டு. இதில் உருத் தொகுதிகள் பதிக்கப்படும் 2) தொடர் அச்சியற்றி ! இது ஒரு சமயம் ஓர் உருவையே அச்சியற்றும். இவ்வுருக்கள் தட்டு அச்செழுத்துகளைப் போன்றவை. ஒரு வினாடிக்கு 30-300 உருக்கள் அச்சாகும் யாவரும் நன்கறிந்தது தொடர் அச்சியற்றி. புள்ளி அணி அச்சியற்றி ! இதில் அச்சிடப் படவேண்டிய உருக்கள் நேர்த் தியான புள்ளிகளாக இருக்கும். அச்சுத்தலை, ஊசிகள் வரிசை யைக் கெண்டிருக்கும். இடம் வலமாக வலம் இடமாகவும் அச்சிடும். அச்சு விரைவு ஒரு

வினாடிக்கு 300 உருக்கள். 3) லேசர் அச்சியற்றி ! இதில் ஒளிக் கடத்தும் உருளையில் அச்சிடப்பட வேண்டிய உரு வை லேசர் ஒளிக்கற்றைக் கட்டுப்படுத்தும். உருளை ஒரு மை உருளையை வெளிப் படுத்திய பகுதிகளைக் கவரும். இந்த உரு தாளுக்குச் செல்லும். உருளையோடு தாள் தொடர் புள்ளது. குறைந்த விரைவு லேசர் அச்சியற்றிகள் ஒரு நிமிக்கு 4-16 பக்கங்கள் அச்சி யற்றும். இது இன்று அனை வரும் பயன்படுத்துவது. மிக விரைவு லேசர் அச்சியற்றி ஒரு நிமிக்கு 10,000 வரிகள் அச்சி யற்றும் உருக்கள் மிக நேர்த்தி யாக இருக்கும். 4) எழுத்துத்தர அச்சியற்றி இதில் உருக்கள் கூரியதும் தொடர்ந்த துமான வரிகளால் குறிக்கப் படும். ஆகவே, வெளிப்பலன் நன்றாக இருக்கும் எடு, மை, பீச்சு அச்சியற்றி.

Print format - அச்சியற்றும் படிவமைப்பு : ஓர் அச்சியற்றி யில் தகவல்களை அச்சியற்று தலை விளக்கும் அமைப்பு.

Printing - அச்சிடல் பயனாளிக்கு வெளிப் பலனை அளிப்பது. இப்பலன் பதிப்பு இயற்றியிலிருந்து வரும் பாட மாக இருக்கும், ஒரு நிகழ்நிரல் நிலையாக இருக்கலாம். தகவல் அறிக்கையாக இருக்கலாம். விஷாவல் பேசிக் அச்சிடலை நன்கு கையாளுகின்றது.

**Printout** - a hard copy produced by a printer: eg. Printed page. **அச்சுப்பாடு** : அச்சியற்றி உண்டாக்கும் வன்படி எ-டு அச்சிட்ட பக்கம்.

**Problem - சிக்கல்** : தீர்வு காண வேண்டிய ஒன்று.

**Procedure - செய்முறை** : ஒரு சிக்கலைத் தீர்ப்பதற்குரிய படிநிலை வரிசை.

**Process - செயல்முறை** : கணிப்பொறி மூலம் தகவலைக் கையாளல்.

**Processor-செயல்முறையாக்கி** : தகவல்களை முறையாக்கும் கருவியமைப்பு. இது மைய முறையாக்கியையும் குறிக்கும்.

**Product - பெருக்கற்பலன்** : இரு காரணிகளைப் பெருக்கி வரும் பலன் : பெருக்கி, பெருக்கப்படும் எண். 4 x 8.

**Programme** - an algorithm expressed in a programming language.'நிகழ்நிரல் **: நிகழ்நிரலாக்கும் மொழியில் தெரிவிக்கப்படும் விதிமுறை.**

**Programme editor** - a computer routine used in timesharing systems.நிகழ்நிரல் பதிப்பு இயற்றி **: நேரப் பகிர்வுத் தொகுதிகளில் பயன்படும் கணிப்பொறி நடைமுறைச் செயல்.**

**Programmable read only. Memory, prom - படிப்பதற்குரிய நிகழ்நிரலாக்கும் நினைவகம், பஉநிதி** : படிப்பதற்குரிய நினைவகத்தைப் போன்றது. பயனாளி தான் இதை திகழ்நிரல் செய்ய வேண்டும்.

**Programmer - நிகழ்நிரலர் :** நிகழ்நிரலைக் கணிப்பொறிக்கு உருவாக்குபவர்.

**Programming language - நிகழ் நிரலாக்கும் மொழி** : ஒரு கணிப்பொறிக்கு நிகழ்நிரலர் ஒரு நிகழ்நிரலை எழுதப் பயன்படுத்தும் மொழி.

**Project - திட்டம்** : இது விஷுவல் பேசிக் திட்டம் ஆகும். இது ஓர் அமைப்புப் பெட்டி ஒரு பயன்பாட்டுக்கு வேண்டிய வேறுபட்ட எல்லாப் பகுதிகளையும் கொண்டிருக்கும். திட்டப் படிவங்கள். குறிமைக் கோப்புகள், மூலக் கோப்புகள், சிறப்புக் கட்டுப்பாடுகள், ஆவணக் கோப்புகள் ஆகியவை திட்டத்தில் உண்டு.

**Project content - திட்டப் பொருள்** : ஒவ்வொரு சமயமும் திட்ட சேமிக்கப்படும். விஷுவல் பேசிக், திட்டக் கோப்பை மேம்படுத்தும். திட்டக் கோப்பிலுள்ளவை பின்வருமாறு : திட்ட எக்ஸ்புளோரர், சாளரத்தில் காணப் படும் கோப்புப் பட்டியல், கட்டுப்பாட்டுக் குறிப்பு உதவிகள். மேலும்,

இத்திட்டத்தோடு வேறுபட்ட வகைக் கோப்புகளையும் சேர்க்கலாம்.

**Project explorer window - திட்ட எக்புளோரர் விண்டோ (திட்ட ஆராய்விச் சாளரம்)** : ஒரு திட்டத்திலுள்ள கோப்புகளை இனங்கான, திட்ட எக்ஸ்புளோளர் விண்டோ பயன்படுகிறது. திட்டங்களையும் அதன் உள்ளடக்கங்களையும் பட்டியலிட மரநோக்கை இது பயன்படுத்துகிறது. எக்ஸ்புளோரரில் படி நிலை வரிசை உச்சியில், திட்டங்கள் இருக்கும். எக்ஸ்புளோரரின் தலைப்புப்பட்டை, சொல் திட்டத்தையும் செயலுறு திட்டத்தின் பெயரையும் கொண்டிருக்கும்.

**Properties - பண்புகள்** : விஷுவல் பேசிக்கிலுள்ள பொருள்களை, அவற்றின் பண்புகளும் முறைகளும் நிகழ்ச்சிகளும் கட்டுப்படுத்துகின்றன. ஒவ்வொரு தனித்த பொருளும் தனக்கென்று ஒரு சில பண்புகளைக் கொண்டவை.
பொதுவான பண்புகள் பின்வருமாறு : 1) இடம், 2) உச்சி, 3) உயரம், 4) அகலம், 5) பெயர், 6) பார்க்கக் கூடியது, 7) இயலக் கூடியது.
தவிர, ஒவ்வொரு கட்டுப்பாட்டிற்கும் ஒரு பண்பு உண்டு. அதன் வழக்காற்றை ஒட்டி, அது தவறுபண்பு எனப்படும் எ-டு பாடப்பெட்டி பாடப் பண்பையும், குறியம் தலைப்புப்பண்பையும் கொண்டிருக்கும்.

**Properties window - பண்புச் சாளரம்** :தேர்ந்தெடுக்கப்பட்ட நடப்புப் பொருளுக்குரிய பண்புகளை இது மாற்றுவது. சிறப்புள்ள பொருள் வழக்கமாகப் படிவம் அல்லது கட்டுப்பாடு. ஒரு பொருளின் பல பண்புகள், நெடுங்கணக்கு வரிசை அல்லது வகை வரிசையில் நோக்கப்படும். எ-டு ஒரு படிவத்தில் முதல் பாடப் பெட்டிக் கட்டுப்பாட்டைப் பயன்படுத்தும் பொழுது, அதன் பெயர்ப் பண்பு, தவறினால் பாடம் 1 என அமைக்கப்படும்.

**Protection - பாதுகாப்பு** : மென்பொருள் அலகுகளுக்கிடையே குறுக்கீட்டைத் தவிர்க்கும் நுணுக்கங்கள்.

**Protocol - மரபுச்சீரி** : இது ஒரு மரபுத் தொகுதி. இரு தொகுதிகளுக்கிடையே தகவல் பரிமாற்றத்தைக்

கட்டுப்படுத்துவது. மையச் செயலகமும் அச்சியற்றியும் இம்மரபு மூலமே பேச இயலும்.

**Pseudo code - பொய்க் குறிமை**

**Pseudo operation - போலி கைச் செயல்** : வன்பொருளைப் பயன்படுத்திச் செய்யாத செயல்.

**Punch card - துளையிட்ட அட்டை** : திட்டமான வினாத்தாள் அட்டை, தகவல் சேமிக்கப்பயன்படுவது.

**Push down list - கீழிறக்கு பட்டியல்** : இது ஒரு பட்டியல் அமைப்பு. இதில் புதிதாகச் சேர்க்கப்பட்ட தகவல் இனம் பட்டியலில் முதலாவதாக வரும். முதலாவதாக உள்ளதே மீட்கப்படும். ஏனையவை பின் தள்ளப்படும். பா. Last in first out.

**Push up list - மேல் ஏற்றும் பட்டியல்** : இது ஒரு பட்டியல் அமைப்பு. இதில் சேமிக்கப்பட்ட கடைசித் தகவல் இனம் பட்டியல் கடைசியில் இருக்கும். ஏனையவை அப்படியே இருக்கும். பா. First in first out.

## Q

**Quad - நாற்கூறு** : நான்கு பகுதிகளைக் கொண்டது.

**Quad capacity - நாற்கூறுத் திறன்** : நெகிழ்வட்டின் இரட்டை அடர்த்தி.

**Quantity - அளவு** : கணிப்பொறியில் நேர்க்குறி அல்லது எதிர்க்குறி மெய்யெண்.

**Quantizer அளவாக்கி** : ஒப்பு மை அளவை இலக்க அளவாக மாற்றுங் கருவியமைப்பு.

**Quasi instruction** - an item of data present in a programme in instructive format only.
**போலிக் கட்டளை** : கட்டளைப் படிவமைப்பில் ஒரு நிகழ்நிரலிலுள்ள தகவல் இனம்.

**Query - வினா** : கொக்கி, குறிப்பிட்ட செய்திக்குரிய வேண்டுகோள். தகவல் மீட்பில் பயன்படுவது. இது பயனாளி அமைக்கும் கூற்று. தகவலைத் தேர்ந்தெடுத்து அதை அட்டவணையில் கையாள உதவுவது.

**Query language - வினா மொழி** : பயனாளியின் நட்புறவுள்ள கட்டளைத் தொகுதி. ஒரு தகவல் தளத்திலிருந்து தகவலைப் பெற உதவுவது.

**Query programme - வினா நிகழ்நிரல்** : இது ஒரு கணிப்பொறி நிகழ்நிரல். இது பயனாளியைத் தகவலை மீட்க அனுமதிப்பது.

**Queue - நேர்வரிசை** : பணிக்காகவுள்ள தகவல் இன வரிசை. எ-டு மையச் செயலக முறையாக்க வேண்டிய தகவல்.

**Queuing theory - நேர்வரிசைக் கொள்கை** : இது ஒரு நிகழ்தகவுக் கொள்கை, பணிமுனைகளில் தாமதங்களை ஆராயப் பயன்படுவது.

**Quicktran - குயிக்ட்ரான்** : பார்ட்டானின் உட்பிரிவு மொழி. பன்ம அணுக்கத் தொகுதியில் பயன்படுவது.

**Quit - வெளியேறு** : ஒரு நிகழ்நிரலின் வேலை. நடைமுறையிலுள்ள செயலை முடிக்கப் பயனாளிக்கு உதவுவது.

**R**

**Radio button - வானொலிப் பொத்தான்** : இது உரையாடல் பெட்டியில் உள்ளது. இப்பெட்டியில் 3 பொத்தான்கள் இருக்கும். இப்பொத்தான்கள் பன்மத் தெரிவுகளைக் காட்டப்பயன்படுபவை. தெரிவுக்கு இடப்பக்கமுள்ள சிறிய வெண்வட்டத்தை இயக்கி, ஒரு தெரிவைத் தேர்ந்தெடுக்கலாம். வட்டத்தின் மையத்தில் தோன்றும் கறுப்புப் புள்ளி, ஒரு தெரிவு தேர்ந்தெடுக்கப்பட்டதைக் காண்பிக்கும்.
**உருவாக்கல்** : இதை உருவாக்க இயல்பு type க்கு radio என்னும் மதிப்பைக் கொடுக்க வேண்டும். Value என்னும் மதிப்பு இயல்பு, மாறியில் சேமிக்கப்பட்ட மதிப்பைக் குறிப்பிடப் பயன்படும். ஒரு தெரிவைத் தேர்ந்தெடுக்கும் பொழுது, இது செய்யப்படும் தெரிவுகளில் ஒன்றைத் தவறுதல் தெரிவாக checked என்னும் இயல்பு பயன்படுத்தப்படவேண்டும். -

**Radix - மூலம்** : வேர். எண் முறையின் அடி எண். இரும முறை மூலம் 2. பதின்ம முறை மூலம் 10, எண்ம முறை 8.

**Radix complement - மூல நிரப்பு** : ஓர் எண்ணின் மூல நிரப்பைப் பின்வருமாறு கணக்கிடலாம். அந்த எண்ணின் மூலத்திலிருந்து ஓர் எண்ணைக் குறைவாகக் கழி. கிடைக்கும் முடிவோடு 1ஐக் கூட்டுக. எ-டு பதின்ம எண் 171 இன் மூல நிரப்பு : 999 - 171 + 1 = 829.

**Radix notation - மூலக் குறிமானம்** : இது ஓர் இன உறுப்பு நிலையான மூலக் குறிமானத்தையும், கலப்பு அடி எண் மூலக் குறிமானத்தையும் தழுவுவது.

**Random access - வரம்பில் அணுக்கம்** : ஒரு சேமிப்பு இடத்தில் தகவலைப் பெறும் முறை. இங்குத் தகவலை வரிசை முறையில் தேடும் பொழுது, அணுக்கம் வரம்புக்கு உட்படுத்தப்படுவதில்லை.

**Random access disk file - வரம்பில் அணுக்க வட்டுக் கோப்பு** : ஒரு தடத்திற்கு ஒரு தலையுள்ள வட்டைக் கொண்டுள்ள கோப்பு. இங்கு ஆவணங்கள் அடுத்தடுத்துச் சேமிக்கப்பட வேண்டியதேவை இல்லை. **Random access memory, ram - அணுக்க நினைவகம், வஅநி** : இது ஓர் அரைக் கடத்திக் கருவியமைப்பு. ஒன்றுக்கு மேற்பட்ட ஒருங்கிணை சுற்றுகளைக் கொண்டது. கணிப்பொறித் தொகுதியில் தற்காலிகமாகத் தகவலைச் சேமித்து வைக்கப் பயன்படுவது. எல்லா நுண்முறையாக்கிகளும் இந்நினைவகத்தைப் பயன்படுத்தித் தகவல்களையும் நிகழ்நிரல்களையும் சேமித்து வைக்கின்றன. தகவல் பைட் அலகில் சேமித்து வைக்கப்படுகிறது. ஒரு பைட் = 8 பிட் சொற்கள். இந்நினைவகத்தின் தேக்கு திறன் பைட்டுகளில் அளக்கப்படும். எ.டு. 48k இதில் சேமித்த தகவல்களை வேண்டியவாறு பயன்படுத்தலாம். மின்னாற்றல் இருக்கும் வரையில்தான் இதில் தகவல் இருக்கும். இதைத் தவிர்க்கத் தகவலைச் சேமிக்க வேண்டும்; சேமிக்கப்படும். இது உடனுக்குடனும் நேராகவும் மையச் செயலகத்தை அடையும். ஒ. Read only memory.

**Random access programming - வரம்பில் அணுக்க நிகழ் நிரலாக்கம்** : நிகழ்நிரலில் சேமிப்பு நிலைக்குரிய அணுக்கத்திற்கான நேரத்தைக் கருதாதது நடைபெறுவது.

**Random access storage - வரம்பில் அணுக்கச் சேமிப்பு** : இனங்காண வேண்டிய இடத்திற்கு நிலையான அணுக்க நேரத்தை அளிக்கும் சேமிப்பு.

**Range - வீச்சு** : ஒரு வேலைத் தாளில் இது தொடர் நுண்ணறைத் தொகுதியைக் கொண்டது. வீச்சு முகவரியினால் இது குறிப்பிடப்படுவது. lச்சில் முதல் நுண்ணறையின் முகவரி வீச்சு முகவரியாகும். இதை அரைப்புள்ளி தொடரும்; இதற்குப்பின் வீச்சிலுள்ள இறுதி நுண்ணறையின் முகவரி தொடரும். எ.டு. நுண்ணறைகள் g1, g2, g3, g4, g5. இவற்றைச் சுருக்கமாக g1:g5

எனலாம். துண்ணறைகள் a1, b1, c1, d1, e1, f1. இவற்றை a1:f1 எனலாம். நுண்ணறைகள் a4, a5, a6, b4, b5, b6. இவற்றை a4:b6 எனலாம்.

**Rapid storage - விரைவுச் சேமிப்பு** : உயர் விரைவுச் சேமிப்பு.

**Raster - வரிக்கோலம்** : எதிர்மின் வாய்க்கதிர்க் குழாயின் திரையில் பார்க்கும் கிடைமட்ட வரிகளின் கோலம். இவ்வரிகள் ஒரு மின்னணுக் கற்றையால் அலகிடப்படும்.

**Rows and columns - வரிசைகளும் பத்திகளும்** : இவற்றைத் தொடக்கத்திலோ அட்டவணையின் நடுவிலோ சேர்க்கலாம், நீக்கலாம். **Rows and columns height - வரிசைகள் மற்றும் பத்திகளின் உயரம்** : இவ்விரண்டையும் எளிதாக வேண்டிய அளவுக்கு மாற்றியமைக்கலாம். அதாவது, கூட்டலாம், குறைக்கலாம்.

**Raw data - கச்சாத் தகவல்கள்** : இவை முறையாக்கப்படுவதற்கு முன்னுள்ளவை. எந்திரம் அறிந்து கொள்ளும் அளவுக்கு ஒரு வடிவத்தில் இருக்க வேண்டிய தேவை இல்லை.

**Read - படி** : ஒரு கருவியிலிருந்து தவலைப் பெற்று, அதை முறையாக்கலுக்கு ஆயத்தம் செய்தல்.

**Reader - படிப்பி** : இது ஒரு கருவியமைப்பு. தகவலை ஒரு வடிவத்திலிருந்து மற்றொரு வடிவத்திற்கு மாற்றுவது. எ-டு துளையிட்ட தாள் நாடாவிலிருந்து காந்த நாடாவிற்கு மாற்றுதல்.

**Read error - படிப்புப் பிழை** : இது கணிப்பொறி எந்திர நிலை. இதில் சேமிப்புக் கருவியமைப்பின் அடக்கங்களை மின்னணு முறையில் இனங் காண முடியாது.

**Read only memory, rom - படிப்பதற்குரிய நினைவகம், பஉநி** : நிலையாகச் சேமித்து வைத்த தகவல்களிலிருந்து உருவாக்கப்படுவது. மின்சாரம் நின்றாலும் இது அழியாது. ஒ. Random access memory.

**Read out - படித்து மாற்று** : ஒரு கணிப்பொறியின் உள் சேமிப்பிலிருந்து படித்து அதைப்புறச் சேமிக்குக் கொண்டுவருதல்.

**Read rate - படிப்பு வீதம்** : தகவல் அலகுத் தொகுதி, எ-டு உருக்கள், சொற்கள். கொடுக்கப்பட்ட அலகு நேரத்தில் உட்பலன் படிப்புக் கருவியமைப்பு மூலம் இவ்வலகுகளைப் படித்தல்.

**Read time - படிக்கும் நேரம்** : சேமிப்பிலிருந்து மாறுகை தொடங்குவதற்கும். அது முடிவதற்கும் இடையே உள்ள நேர இடைவெளி. இது அணுக்க நேரத்திற்குச் சமம். இதில் காத் திருக்கும் நேரத்தைக் குறைக்க வேண்டும்.

**Real address - மெய்முகவரி** : முதன்மைச் சேமிப்பிலுள்ள இனவரி.

**Real file - மெய்க்கோப்பு** : ஆதி கோப்புகளிலிருந்து உருவாக்கப்படும் ஆவணத்திரட்டு. ஓர் இயங்கு தொகுதியிலுள்ள ஆவண அனுக்கப் பொறி நுட்பத்தைக் கொண்டு இதைச் செய்யலாம்.

**Real time - மெய்ந்நேரம்** : கருவி நிகழ்வோடு ஒரே சமயத்தில் நடைபெறும் முறையாக்கல். தாமதமில்லாமல் அந்நிகழ்வைக் கட்டுப்படுத்த இம்முறை யாக்கல் நடைபெறுவது. **Real variable - மெய்மாறி** : மிதப்புப் புள்ளி வடிவத்தில் தெரிவிக்கப்படுவது.

**Record - ஆவணம்** : ஒன்றுக்கு மற்றொன்று தொடர்புள்ள தகவல் புலங்களின் தொகுதி. அமைப்பு நோக்கத்திற்காக ஒரே அலகாகக் கருதப்படுவது. இது கோப்பில் இருக்கும். ஒவ்வொரு ஆவணமும் வடிவத்திலும் உள்ளடக்கத்திலும் ஒரே மாதிரியாக இருக்கும். எ-டு வாடிக்கையாளர் பற்றிய தகவல். ஆவணம் எப்பொழுதும் முறைமை வடிவத்திலேயே இருக்கும்.

**Record list - ஆவணப் பட்டியல்** : படிக்கக் கூடிய வடிவத்தில் அளிக்கப்பட்டு ஒரு கோப்பில் இருக்கும் தகவல்.

**Record section - ஆவணப் பகுதி** : ஒரு தொகுதியிலுள்ள ஆவணப் பகுதி.

**Reduction, data - தகவல் குறைப்பு** : கச்சாத் தகவல்களை எடுத்து, அதைப் பயனுள்ளதாக மாற்றுதல்.

**Redundancy - மிகையாக்கல்** : பல கருவியமைப்புகளை ஒரே வேலையைச் செய்யுமாறு செய்தல். இதன் நோக்கம் இவ்வேலையின் துல்லியத்தை உயர்த்துவதே.

**Redundant digit - மிகைத் தகவல்** : ஓர் உண்மையான கணக்கீட்டிற்குத் தேவைப்படாத இலக்கம். ஆனால், இலக்கக் கணிப்பொறியில் பிழையைச் சுட்டிக்காட்டப் பயன்படுவது.

**Reference address - பார்வை முகவரி** : பார்வைப் புள்ளியாகப் பயன்படும் முகவரி. சார்பு முகவரியைக் கொள்ள எழுதப்படும் கட்டளைகளின் தொகுதி இது.

**Reference listing - பார்வைப் பட்டியலிடல்** : ஒரு தொகுப்பியில் இது தொகுக்கப்படும். இறுதி நடைமுறைச் செயலில் தோன்றும் கட்டளைகளைக் காட்டுவது. இதில் சேமிப்பிடத் தகவல்கள் அடங்கும்.

**Reference record - பார்வை ஆவணம்** : இது ஒரு தொகுப்பியின் வெளிப்பலன். குறிப்பிட்ட இறுதி நடைமுறைச் செயலில் செயல்கள், அவற்றின் நிலைகள் ஆகியவற்றைப் பட்டியலிடுவது. நடைமுறைச் செயலின் சேமிப்பு ஒதுக்கீடு, பகுதியாக்கல் ஆகியவற்றை விளக்கும் தகவலைக் கொண்டது.

**Refresh - புதிதாக்கு** : மீண்டும் மீண்டும் ஒரு குறிகையை ஒரு சூழ்நிலையில் உண்டாக்கல். எ-டு ஓர் இயக்க நினைவு நறுவலிலுள்ள நுண்ணறைகளை துண்டுதல்.

**Regenerate - மீட்பாக்கம் செய்** : சேமிப்பில் அதன் முதல் வடிவத்தில் தகவலை இருக்கு மாறு செய்தல். மங்கல், அலைக்கழிப்பு ஆகியவற்றி லிருந்து தடுக்க இதைச் செய்ய வேண்டும்.

**Register - பதிவகம்** ; வருங்காலப் பயனுக்குரிய தகவல்களும் குறிப்புகளும் இதில் சேமித்து வைக்கப்படும். இது தற்காலச் சேமிப்புப் பகுதி. இதைச் செய்வது நுண்முறையாக்கி, நேரடியாக இதை இனங் காணலாம்.

**Register capacity - பதிவகத் திறன்** : ஒரு பதிவகத்தில் முறையாக்கப்படும் எண்களின் மேல் கீழ் வரம்புகள்.

**Register circuit - பதிவகச் சுற்று** : நினைவகக் கூறுகளுடன் கொண்ட சொடுக்கும் சுற்று இது குறிமையுள்ள மில்லியன் கனக்கான இருமிகளை (பிட்டுகள்) இது சேமிக்க வல்லது. **Registry - பதிகோப்பு** : @5, தகவலைப் பதியும் கோப்பு. கணிப்பொறித் தொகுதியில் எல்லா வன்பொருள் மென்பொருள் விவரங்களைச் சேமித்து வைப்பது.

**Regression analysis - தொடர் பகுப்பு** : புள்ளி இயல் பகுப்பில் மாற்ற வீதத்தை உறுதி செய்யும் வழி.

**Relational data base - தொடர்புத் தகவல் தளம்** : தகவல் தளங்களில் ஒருவகை. ஒரு தொடர்பு அமைப்பு தகவல் தளத்தைக் குறிப்பது. இது ஒன்றுக்கு மற்றொன்று தொடர்பு அட்டவணைகளைக் கொண் டது. இதில் பல அட்டவணைகளில் பல புலங்கள் இருக்கும். இப்புலங்கள் அட்டவணைகளுக்கிடையே

தொடர்பை உண்டாக்கும். பொதுப் புலங்கள் திறவுகள் எனப்பெயர் பெறும். இந்த தகவல் தளம் தற்காலத் தொழில் நிறுவனங்களில் இன்றியமையாத உறுப்பாக உள்ளது.

**முதன்மைத் திறவு** என்பது ஒரு தகவல்தளத்தில் ஓர் ஆவணத்தை இனங் காண்பது. தொடர்புத் தகவல் தளங்களில் இத்திறவு ஒன்றுக்கு மேற்பட்ட புலங்களைக் கொண்டிருக்கும். காட்டாக, **emp no**. என்பது வேலையாளர் எண் ஆகும். இது சிறப்பாக ஒரு வேலையாளின் ஆவணத்தை இனங் காட்டும்.

**Relational system - தொடர்பு முறை** : இது ஒரு வகைத் தகவல் தளமேலாண் முறை. இதில் தகவல்கள் அட்டவணைகளாகக் குறிக்கப்படும். இதில் ஒவ்வொரு பதிவும் ஒரு மதிப்பை மட்டும் கொண்டிருக்கும்.

**Relative address - சார்பு முகவரி** : ஒரு கட்டளையின் முகவரிப் பகுதியைக் குறிக்கும் எண். அடிநிலை முகவரியைப் பொறுத்தவரை தேவைப்படும் இடத்தைச் சுட்டிக் காட்டுவது. இம்முகவரியுடன் அடிநிலை முகவரியைச் சேர்த்துத் தனி முகவரியைப் பெறலாம்.

**Relay centre - அஞ்சல் செய் மையம்** : இது ஒரு சொடுக்கும் மையம். இதில் செய்திக் குறிகைகள் பெறப்பட்டு நேரடியாகத் தானியங்கு முறையில் பல வெளிப்பலன் சுற்றுகளுக்கு அனுப்பப்படும். செய்தியிலுள்ள தகவலுக்கு ஏற்ப இது நடைபெறும்.

**Release - விடுவி** : ஒரு குறிப் பிட்ட நிகழ்நிரலின் கட்டுப்பாட்டிலிருந்து நினைவகப் பகுதி அல்லது வெளிப்புற அலகை விடுவித்தல். இது ஒரு நிறைவேறிய செயலால் நடைபெறுவது. விடுவிக்கப்பட்ட வன்பொருள் வேறு நிகழ்நிரலுக்கு ஆயத்தமாகும்.

**Relocate - மீளிடம் அளி** : ஒரு நிகழ்நிரலிலுள்ள கட்டளைகள் தாமாக மாறுவதை இது குறிக்கும்.

**Relocation register - மீளிடப் பதிவகம்** : இது வன்பொருள் கூறு. ஒரு கணிப்பொறியிலுள்ள ஒவ்வொரு நினைவக இடத்திற்கு முகவரியை அனுப்பும் ஒரு மாறிலியைக் கொண்டது இது.

**Remote - தொலைவிலுள்ளது** : ஒம்பு பொறியிலிருந்து சிறிது தொலைவில் வெளிப்புற அலகு.

**Remote computing system - தொலைக் கணிப்புமுறை** : இது ஒரு வன்பொருள் அமைவு. இதில் தொலை முனையங்கள் நேரிடையாக ஒரு கணிப்பொறியுடன் இணைக்கப் பட்டிருக்கும். இதனால் பயனாளிகள் நேரிடையாக மைய முறையாக்கியுடன் தொடர்பு கொள்ளலாம். இந்தத் தொலை முனையங்களிலிருந்து பயனாளிகள் தகவல்களைத் தொகுக்கலாம், பிழை நீக்கலாம், ஆய்ந்து பார்க்கலாம். தங்கள் நிகழ்நிரல்களை நிறைவேற்றலாம்.

**Remote processing - தொலை முறையாக்கல்** : இம்முறையில் தகவல்கள் தொலைவிலுள்ள நிலையங்களிலிருந்து செய்திகளாக ஒரு கணிப்பொறியால் செலுத்தப்படும். தகவல்கள் பின் முறையாக்கப்படும்.

**Remote processor - தொலை முறையாக்கி** : கணிப்பொறியின் மைய முறையாக்கியிலிருந்து தொலைவிலுள்ளது இது. ஆனால், மைய முறையாக்கியின் இயங்கு தொகுதியின் முழுக்கட்டுப்பாட்டில் இதன் செயல்கள் உள்ளன.

**Reorganise - சீரமை** : ஒரு புதிய கோப்புச் சேமிப்பில் தகவல்களைப் பதிதல், தகவல்களை மேம்படுத்த இது தேவை. **Repertoire - அனைத்துறுப்பு** : ஒரு குறிப்பிட்ட குறிமைத் தொகுதியிலுள்ள தனிக் குறிமைகள் அல்லது உருக்களின் வீச்சு.

**Repetition instruction - திருப்பு கட்டளை** : குறிப்பிட்ட தடவைகள் ஒரு கட்டளை அல்லது கட்டளைகளை மீண்டும் நிகழுமாறு செய்யும் கட்டளை.

**Replication - பகர்ப்பு** : ஒரு தொகுதியில் ஓர் ஒத்த வன்பொருளை ஒன்றோ அதற்கு மேலுமோ பயன்படுத்தல். பொறி பழுதுபடும் பொழுது அதிலுள்ள அலகுக்ள் ஒன் றுக்கு மற்றொன்று இணைந்து இயங்கும்.

**Reply - பதில்** : விடை முன்னரே உள்ள செய்திக்கு அளிக்கப்படும் தகவல்.

**Report - அறிக்கை** : அச்சிட்ட தகவல்; கணிப்பொறி உருவாக்குவது. பயனாளிகளின் தகவல்கள் அடிப்படையில் அமைவது. இது எளிமையான ஆவணமாக இருக்கலாம். அல்லது குறிப்பிட்ட ஆவணமாக இருக்கலாம்.

**Report generation - அறிக்கை இயற்றல்** : வெளிப்பலன் அச்சிடப்படும் பொழுது, தானியங்கு கணக்கீடுகளை நிறைவேற்ற அறிக்கை இயற்றிகள் தெரிவு செய்த

தகவல்களையும் முறைகளையும் பயன்படுத்தும். உண்மையில் இந்த இயற்றிகள் பெரும்பான்மை தகவல் தள மேலாண்முறையில் உள்ளன. இவை வினாக்களிலிருந்து அறிக்கைகளை உருவாக்கும்.
ஒரு வினாவை உருவாக்குவது போல் ஸ்டார்பேசில் அறிக்கை உருவாக்கலாம். இதைச் செய்ய, எக்ஸ்புளோரர் தகட்டிலுள்ள report என்னும் பகுதியை இயக்குக. பட்டியிலிருந்து இதையும் செய்க. Select new report. தன் வலவிச் சாளரம் தோன்றும். இச்சாளரம் கிடைக்கும் அட்டவணைகள் வினாக்கள் ஆகியவற்றைக் காட்டும். இதைத் தேர்ந்தெடுத்து next பொத்தானை அழுத்தவும். அடுத்துத் தெரிவுசெய்த அட்டவணையிலுருந்து கிடைத்த புலப்பட்டியலுடன் சாளரம் திரையில் தோன்றும் அறிக்கையில் சேர்க்க வேண்டிய புலங்களைத் தெரிவு செய்க. இதற்குப் பின்வருவனவற்றைப் பயன்படுத்துக. The → and → buttons இதைப் பயன்படுத்தவும். Next என்னும் பொத்தானை அழுத்தவும்.
ஆக, ஓர் அட்டவணை அல்லது வினாவிலிருந்து பன்ம அறிக்கைகளை உருவாக்கிச் சேமிக்கலாம்.

**Report programme - அறிக்கை: நிகழ்நிரல் : ஒரு தகவல் கோப்பின் பகுப்பை அச்சிட வடிவமைக்கப் பயன்படும் நிகழ்நிரல்**

**Reservation - ஒதுக்கீடு** : பன்ம நிகழ்நிரல் கணிப்பொறியில் ஒரு குறிப்பிட்ட நிகழ்நிரலுக்கு நினைவகப் பகுதிகளை அல்லது வெளிப்புற அலகுகளை ஒதுக்குதல்.

**Reset - மீளமை** : ஓர் எண்ணு கருவியைச் சுழியில் இருக்குமாறு அமைத்தல்.

**Reset cycle - மீளமை சுற்று** : ஒரு சுழற்சிக் குறியீட்டு எண்ணியை அதன் முதல் மதிப்புக்குக் கொண்டு வருதல்.

**Reset pulse - மீளமை துடிப்பு** : சேமக் கலத்தின் நிலையைக் கட்டுப்படுத்தும் துடிப்புகளில் ஒன்று. குறிப்பாகச் சுழி நிலைக்கு ஒரு மின்கலத்தை மீளச் செய்வது.

**Residual error - எஞ்சு பிழை** : ஓர் ஆய்வின் பொழுது உண்டாகும் தவறு.

**Residual error rate - எஞ்சு பிழை வீதம்** : ஒரு தகவல் செலுத்துகையில் நிகழும் திருத்தாப் பிழையின் தகவைக் குறிப்பது.

**Residual value - எஞ்சு மதிப்பு** : முடியும் நிலையில் ஒரு கருவித் தொகுதியின் மதிப்பு இது. அது ஒரு பகுதியின் மதிப்பாகவும் இருக்கலாம்.

**Resolution - பகுப்புத் திறன்** : பிரிதிறன். ஒரு வரைகலைக் காட்சியில் கிடைக்கக்கூடிய படக்கூறுகளின் எண்ணிக்கை. இவை மாறுபவை. இவற்றைத் தனியாக இனங் காணலாம்.

**Resource - தலைவாய்** : கணிப்பொறித் தொகுதியின் பகுதி. தனி அலகாகக் கருதப்படுவது. குறிப்பிட்ட முறையாக்கலைப் பயன்படுத்த உதவுவது.

**Resource file - தலைவாய்க் கோப்பு : மூலக் கோப்பு. கோப்புகளில் முதன்மையானது.**

**Response - துலங்கள்** : வினவுதலைத் தொடங்குவதால் ஒரு தகவல் மீட்பு முறையில் பயனாளிக்குக் கிடைக்கும் செய்தி.

**Response time - துலங்கல் நேரம்** : ஒரு வினாவிற்கு விடையளிக்கத் தேவைப்படும் நேரம்.

**Restore - மீளமை** : ஓர் எண்ணு கருவி, பதிவகம், சொடுக்கி, அல்லது நிலைகாட்டியை முன்னரே தெரிந்த மதிப்புக்குச் சரிசெய்தல்.

**Result - முடிவு** : விடை. ஓர் எண்கணித அல்லது முறைமைச் செயலிலிருந்து பெறப்படும் மதிப்பு அல்லது அளவு. இது செயலிடத்தில் நிறை வேறுவது.

**Retention period - தக்கவைக்கும் காலம்** : தகவல்கள் காந்த நாடாவில் அல்லது வட்டில் சேமித்து வைக்கப்படும் கால அளவு. இது பல நாட்கள், வாரங்கள், மாதங்கள் இருக்கலாம். இது தேவையைப் பொறுத்து அமையும்.

**Retrieval - மீட்பு** : ஒரு கோப்பிலிருந்து தகவலைப் பிரித்தல். ஆவணங்களில் குறிப்பிட்ட திறவுகளும் அல்லது ஒட்டுகளும் இருக்கும். இந்த ஆவ ணங்கள் கோப்பில் அடங்கி இருக்கும். இத்திறவுகளைத் தேடவே இந்த மீட்பு.

**Return - திருப்பம்** : ஒரு துளை நடைமுறைச் செயல் முடிவுறும் பொழுது உள்ள கட்டளை. கட்டுப்பாட்டை முதன்மை நிகழ்நிரலுக்குக் கொண்டு வர உதவுவது. இதைச் செய்வது திருப்பு கட்டளை.

**Rgb - red, green and blue, the three primary colours.**
**சிபநீ** : மூன்று முதன்மை நிறங்கள்.

**Ring network - வளை வலையமைவு** : இதில் இடவியல் தொடர் வட்டம், சுற்றளவில் கணுக்கள் முனைகளாகக் குறிக்கப்படும். வளையத்திலுள்ள எல்லாக் குறுக்கிடும் கணுக்கள் வழியாகக் கணுக்களுக்கிடையே செய்திகள் செல்லும்.

**Robot - தொலை இயக்கி** :
1) கணிப்பொறியால் இயங்கும் எந்திரம். அலுப்பு சலிப்பு இல்லாமல் வேலைகளைத் திரும்பத்திரும்பச் செய்யலாம். தவிர, வண்ணத்தெளிப்பு, பற்ற வைத்து இணைத்தல் முதலிய கடின வேலைகளும் இதன் மூலம் நடைபெறுபவை.
2)நிகழ்நிரல் அமைத்து எந்திரங் களைக் கட்டுப்படுத்துவது.
3) உற்பத்தித் துறையின் சரக்குகளையும் பொருள்களையும் கையாளுந் தானியங்கு கருவித் தொகுதி.
4) ஒரு செயற்கைக் கோள்.
5) நடக்கும் பேசும் கற்பனை எந்திர மனிதன்.

**Robotics - தொலை இயக்குவியல்** : முன்னரே உறுதி செய்யப்பெற்ற செயல்களை நிறைவேற்றக் கணிப்பொறியால் கட்டுப்படுத்தப் பெறும் எந்திரங்களை ஆராயுந்துறை. எடு உந்து வண்டியில் உலோகத்தைப் பற்றவைத்து இணைத்தல், கோளின் மண்ணியலைப் பகுத்துப் பார்த்தல், திங்களின் மண் நன்கு பகுத்துப் பார்க்கப்பட்டுள்ளது.

**Roll in - உள்வாங்கல்** : ஒர் இயங்கு தொகுதியில் ஒரு செயல்முறையை ஊக்குவித்தல். இதற்குச் செயல்முறையின் பகுதிகளை அடுத்தடுத்து முதன்மைச் சேமிப்புக்குக் கொண்டு வருதல்.

**Roll off - வெளிச் செலுத்தல்** : இம்முறையில் ஆதிகோப்பு, ஊடகத்திலிருந்து படி எடுக்கப் படுதல்.

**Roll on - உள் உருளல்** : தாழளவுக் கோப்புச் சேமிப்பிலிருந்து ஆதி கோப்பைப் படி எடுத்துக் குறிப்பிட்ட பருமவகைக் கோப்பாக மாற்றுதல்.

**Roll out - வெளி உருளல்** : முதன்மைச் சேமிப்பிலிருந்து ஒரு செயல் முறையை நீக்கல்.

**Roll over - மேல் உருளல்** : இது விசைப்பலகைப் பொறிநுட்பம்; ஒரே சமயம் ஒன்றுக்கு மேற்பட்ட திறவை அழுத்தும் பொழுது பிழையை நீக்குவது.

**Rounding error - முழுமைப் பிழை** : ஒரு முடிவில் ஏற்படும் பிழை, முழுமையாக்கலால் உண்டாவது.

**Rounding off - முழுமையாக்கல்** : ஓர் எண்ணின் கீழ்வரிசை இலக்கங்களைச் சரிசெய்தல். குறைதலை இச்செயல் சரி செய்வது.

**Route - வழி** : வலையமைவு மற்றும் இயங்குதொகுதி தொடர்பாகப் பயன்படும் பாட்டை.

**Routeing - வழியமைத்தல்** : மர அமைப்புள்ள தகவல் தளத்தில் ஆவணங்களை இணைக்கும் முறை.

**Routine - நடைமுறைச் செயல்** : குறிமையுள்ள கட்டளைத் தொகுதி, குறிப்பிட்ட வரிசையில் அமைக்கப்படுவது. குறிப்பிட்ட வேலையைக் கணிப் பொறி செய்யுமாறு இது செய்யும்.

**Run - ஓட்டம்** : ஒரு நிகழ்நிரல் அல்லது நடைமுறைச் செயல் நடைபெறுதல். தொகுதிமுறையாக்கல் பயன்பாடுகளுக்குரியது.

**Run book - ஓட்ட நூல்** : இயங்குவதற்குரிய வழிகாட்டி, அதாவது தேவையான பொருள்களையும் தகவல்களையும் ஒரு வேலையைச் செய்ய எவ்வாறு பூட்டுவது என்பதைக் கூறுவது. இதில் இயக்குகட்டளைகள் தொகுதியாக ஓர் ஓட்டம் அல்லது ஓட்டத் தொகுதியில் அமையும்.

**Run chart - ஓட்டப்படம்** ; வழிமுறைப் படத்தைக் குறிப்பது. இது ஓட்டத் தொடரைக் காட்டும். இந்த ஓட்டங்கள் சேர்ந்து ஒரு வேலையைத் தோற்றுவிக்கும்.

**Run command - ஓட்டக் கட்டளை** : தொடக்கப் பட்டியலுக்குள்ள ஆனை இது. தகவல் கோப்புகளைத் திறக்கும். பயன்பாடுகளைத் துவக்கும் மாற்றுமுறையை அளிப்பது.

**Run time - ஓட்ட நேரம்** ; நிகழ்நிரல் ஓட ஆகும் நேரம்.

## S

**Sampling - மாதிரி எடுத்தல்** : நேர இடை வேளைகளில் ஒரு மாறியின் மதிப்பைப் பதிவு செய்யும் முறை.

**Save - சேமி** : நெகிழ்வட்டு முதலியவற்றில் சேமிப்புக் கருவியமைப்பில் நிகழ்நிரல் அல்லது தகவலைப் பதிவு செய்து நிலையாகத் தேக்கி வைத்தல்.

**Scalar type data - அளவுசார் வகைத் தகவல்** : ஒரு கணிப்பொறி நிகழ்நிரலில் ஒரு தனித்தகவல் இனத்தைக் குறிக்கும் பிட்டுகளின் வரிசை முறை.

**Scanning - அலகிடல்** : வரி வரைவு செய்தல். மின்னணுத் துப்பாக்கியிலிருந்து வரும் மின்னணுக்கள் இடமாகவும் வலமாகவும் மேலுங்கீழும் படத்தின் மீது விழும். இந்நிகழ்ச்சியே அலகிடுதல் ஆகும்.

**Scanner - அலகிடும் கருவி** : அலகு இயற்றி மாதிரி எடுக்கும் கருவியமைப்பு பெறும் மதிப்புகளைக் கொண்டு தேவைப்படும் தகவல்களைத் தானாகத் தொடங்கி வைப்பது

**Scheduling - அட்டவணையிடல்** : வரிசைநிலை, முன்னுரிமை ஆகியவற்றைச் செயற்படுத்தல். இதில் வேலைகள் செய்யப்படும். வேலைகளுக்குரிய தலைவாய்கள் ஒதுக்கப்படும். இதைக் கையால் இயக்கிச் செய்யலாம்.

**Schema - விளக்கம்** : ஒரு தகவல் தளத்தை முழுமையாக விளக்குதல்.

**Schematic symbols - விளக்கப்படக் குறிகள்** : இவை வரிப் படங்கள். வேறுபட்ட கூறுகளைக் குறிப்பவை. அனைவரும் பயன்படுத்துபவை.

**Scientific language - அறிவியல் மொழி** : கணக்கு அல்லது அறிவியல் நிகழ்நிரல்களை எழுதுவதற்கு வடிவமைக்கப்பட்ட மொழி.

**Scientific notation - அறிவியல் குறிமானம்** : 10 இன் வர்க்கமாகத் தெரிவிக்கப்படும் அளவுகளைக் குறிக்கும் நுணுக்கம். எ-டு. 12300 = $1.23 \times 10^4$.

**Scope - எல்லை** : வரையறை. இது மூவகை
1) உள்ளிட எல்லை
2) அலகு எல்லை
3) அனைத்து எல்லை. விரிவு அவ்வப்பதிவில் காண்க.

**Scrolling - உருளல்** : செங்குத்தாக அல்லது கிடைமட்டமாக நகரும் பாடத்தைக் குறிப்பது.

**Scsl, small computer system interface - சசி** : சிறிய கணிப்பொறித் தொகுதி இடைமுகம். அதாவது ஒரு தொடர்வாயில் கணிப்பொறியுடன் இணைந்துள்ள ஏனைய கருவியமைப்புகளைக் கவனிப்பது.

**Search and replace - தேடு மாற்றீடு செய்** : இது சொல் முறையாக்கு நிகழ்நிரலின் திறனைக் குறிப்பது. சிறப்புரு முறையாக்கு நிகழ்நிரலின் திறனைக் குறிப்பது. சிறப்புரு அல்லது சொல்லைக் காண இது பயன்படுவது.

**Search set - தேடுதொகுதி** : படிவமைப்புச் சரத்தில் ஒரு தொகுதி உருக்கள் அமைந்திருக்க வல்லவை. இவ்வுருக்கள் சரத்தில் உட்பலனாக ஏற்றுக் கொள்ளப் படுபவை.

**Search time - தேடுநேரம்** : குறிப்பிட்ட நிலைமையைச் சரிசெய்யுமளவுக்கு ஒரு தகவல் இனத்தை இனங்காண உதவும் சராசரி நேரம்.

**Secondary storage - துணைச் சேமிப்பு** : முதன்மைக் கணிப்பொறிக்குப் புறத்தே தகவலைச் சேமித்தலும் மீட்பு செய்தலும்; நிகழ்நிரலுக்கு அணுக்கமுள்ளது.

**Secondary storage devices - துணைச் சேமிப்புக் கருவியமைப்புகள்** :பா. Auxiliary storage devices.

**Section, header - தலைப்பகுதி** பா.. Header section.

**Sections in c programme - சி நிகழ்நிரல் பகுதிகள்** :
1) தலைப்பகுதிகள்
2) வகை அறுதியிடு பகுதி
3) கட்டளைப் பகுதி. விரிவு அவ்வப்பதிவுகளில் காண்க

**Section, instruction - கட்டளைப் பகுதி** : பா. Instruction section.

**Sector - துறை** : காந்த வட்டில் தகவல் சேமிப்பை அமைத்தல்.

**Security - பாதுகாப்பு** : தகவலை அணுகுவதற்குரிய துணுக்கங்களை வரையறைப்படுத்தலும் செயற்படுத்தலும்.

**Seek - தேடு.**

**Seek area - தேடு பகுதி** : சேமிப்புப் பகுதி, ஆவணங்களைக் கொண்டது.

**Seek time - தேடு நேரம்** : தேடுநிலைக்கு ஏற்றவாறு எழுதும், தலைப்பகுதியை நகர்த்துவதற்குத் தேவையான நேரம்.

**Segment - பகுதி** : நிகழ்நிரலின் பிரிவு; நினைவகத்திலுள்ள கோப்பு.

**Segment mark - பகுதிக்குறி** : ஒரு நாடாக் கோப்பில் தனிப் பகுதியிலுள்ள உரு.

**Select - தேர்வு செய்** : ஆய்வு செய்து உரிய செயலைத் தெரிவு செய்தல்.

**Selector - தேர்வி** : குறிப்பிட்ட நிலைமைகள் இருப்பதை ஆய்ந்தறியும் கருவியமைப்பு.

**Semantic error - சொற்பொருள் பிழை** : ஒரு செயலுக்குத் தேவையான தவறான கட்டளைப் படிவமைப்பைப் பயன்படுத்தல். séħ

196

Sef

Semantics - சொற்பொருளியல்,

குறிகளுக்கும் அவற்றின்

பொருளுக்கும் இடையிலுள்ள தொடர்பை ஆராயுந்துறை.

Sentinel - குறிகாட்டி : குறிப்பிட்ட நிலைமையைக் காட்டும் உரு. எ-டு காந்த நாடாவின் முனை. -

Separator - பிரிப்பி : தகவல் முறைமை அலகுகளைப் பிரிக் கப்பயன்படும் உரு

Sequence - திட்ட வரிசை : தகவல் இனங்களைக் குறிப் பிட்ட வரிசையில் வைத்தல் எ.டு. பெயர்களை அகரவரிசை யில் அமைத்தல்.

Sequence error - திட்ட வரிசைப் பிழை திட்ட வரிசைச் சரிபார்ப்புச் செயலி னால் கண்டறியப்படும் பிழை.

Sequencing - வரிசையாக்கல் : அடிப்படைக் கட்டுப்பாட்டு அமைப்புகளில் ஒன்று. கணக் கீடுகளை ஒன்றின் பின் ஒன் றாகச் செய்யும் முறை.

Sequential access storage - வரிசை அணுக்கச் சேமிப்பு : இது ஒரு சேமிப்புக் கருவி யமைப்பு. இதில் தகவல்கள் அவை சேமிக்கப்பட்ட வரிசை யிலேயே அணுகப்படும். Serial - தொடர் :

வரிசையில் கட்டளைகள் அல்லது தகவல் இனங்களைக் கையாளல்.

Serial access - தொடர் அணுக்கம் : தொடர் முறையில் தகவல் இனங்களைப் பெறும் முறை.

Serial memory - தொடர் நினைவகம் : கணிப்பொறி நினை வகம். இதில் தகவல்கள் முதலில் சேமித்தவாறே கிடைக்கும்.

Serial programming - தொடர் நிகழ்நிரலாக்கல் : கணிப்பொறி களில் ஒரு சமயம் ஒரு செயலை நிறைவேற்றும் நிகழ்நிரல்.

Server - பணிப்பி : இது இணையப் பக்கத்தை (web. Page) அமைத்தலில் வருவது. எச்டிஎம்எல் குறிமையைக் கொண்டது. அதற்குரிய இடம் இதில் இருக்கும்.

Serviceability - பணித்திறன் : புறத்திண்மையுள்ள முறையின் அடிப்படையில் அமைந்த நம்பு மையுள்ள கருவித் தொகுதி.

Service provider - பணியளிப்பி : இணையம், தொலை பேசி. .

Service routines,- பணி நடைமுறைகள் நடைமுறைச் செயல்கள். இவற்றின் நோக்கம் இதுவே. கணிப்பொறிச் செயல் மற்றும் பேணுகை தொடர் பான எல்லா வேலைகளையும் நிறைவேற்றல்; நிகழ்நிரல் களைத் திருத்தலும் தயாரித்தலும். இச்செயல் முறைகள் பின் வருமாறு. பொதுநோக்க நிகழ்நிரல்களில் self 197 - sig அமைபவை. சேமிப்பிலுள்ள ஒன்றிற்கு

1) நிறைவேற்று நடைமுறைகள் | மேற்பட்ட பிட்டுகளை இடம்

2) தொகுப்பிகள் 3) இயற்றிகள் 4) கோவையாக்கிகள் 5) பிழைநீக்கு நடைமுறைகள் 6) குறைநீக்கு நடைமுறைகள் 7) உட்பலன்/ வெளிப்பலன் நடைமுறைகள்

Servo-mechanism - முடுகக்கு பொறிநுட்பம் : மின்னாற்றல்

இயங்கும் கருவியமைப்பு. இது

கணிப்பொறிச் செயல்களைக் கட்டுப்படுத்துவது.

Set - அமை : சேமிப்பு அமைப் பிடத்தில் விரும்பிய மதிப்பை வைத்தல்.

Set pulse - அமைதுடிப்பு : ஒரு பிட்டை அமைக்கும் பண் புள்ள துடிப்பு

Set up time - அமைவு நேரம்: கணிப்பொறி இயங்குவதற்கு முன்பும் பின்பும் இடையிலும் உள்ள நேரம். இதில் கையால் செய்யும் வேலைகள், நிறை வேற்றப்படும் நாடாச் சுருள் களை மாற்றல்.

Shared data base - பகிர்வு தகவல் தளம் : பயனாளிகள் பலரும் தகவல்களை ஒரு வருக்கு மற்றொருவர் பகிர்ந்து கொள்ளும் தகவல்தளம்.

Shift-இடப்பெயர்வு : பதிவகத் தில் பெருக்க அல்லது வகுக்கச்

வலமாக மாற்றும் செயல்.

Shift register- இடப் பெயர்வு பதிவகம் : இதில் சேமித்த தகவல்கள் இடம் வலமாக மாறும்.

Shortcuts - குறுக்கு வழிகள்

இவை பயன்பாடுகளுக்கு உதவு பவை. இருவகை.

1) விசைப்பலகைக் குறுக்கு வழிகள். 2) மேடைக் குறுக்கு வழிகள்.

Sig - special interest group. எஸ்ஐஜி : தனி நாட்டக் குழு.

Siggrph - special interest group for graphics. சிக்கர்ப் : வரைகலை தனி நாட்டக் குழு. கணிப்பொறி வரைகலை மேம்பாட்டுக்காகப்

பாடுபடும் பொதுநல அமைப்பு. Signal - குறிகை : ஒரு வலை யமைவில் செல்லும் மின் துடிப்பு. இது பிட்டுகளைக் குறிக்கப் பயன்படுவது. இப் பிட்டுகள் தகவல்களைக் குறிப்

Signal distance - குறிகை தொலைவு : ஒரே நீளமுள்ள இரண்டு இருமச் சொற்கள் ஒத்த பிட் நிலைகள் எண் ணிைக்கையில் வேறுபடுதல் எடு ஒன்றை மற்றொன்று தொட sig



ரும். இரண்டு இரு 6 பிட் சொற்களுக்கிடையே உள்ள குறிகைத் தொலைவு3.

Signalling rate- குறிகை வீதம்: ஒரு தகவல் தொடர்புத் தொகுதியில் குறிகைகள் செலுத்தப்படும் அளவு. ஒரு வினாடிக்கு இத்தனை பிட்டு கள் அளக்கப்படுவது.

Sign bit - குறிப் பிட் : ஒரு தனி பிட்டைக் கொண்டது.

Sign bit extension - தனிபிட் விரிவு : இது கணிப்பொறியில் எண்களின் குறியை +/- ஐக் குறிக்கப்பயன்படுவது. குறி யீட்டின் மதிப்பு 1 என்றால் அது எதிர்க்குறி (-) எண்ணை யும் 0 என்றால் நேர்க்குறி (+) எண்ணையும் குறிக்கும்.

Sign digit-குறி இலக்கம் : இது ஒரு மதிப்புப் புலம் அல்லது சொல்லின் இறுதியில் இயல் பாக இருக்கும் உரு. மதிப்பின் இயற்கணிதக் குறியைக் குறிக் கப்பயன்படுவது.

Significant digits - சிறப்பு இலக்கங்கள் : ஓர் எண்ணின் இலக்க நிலைகள். இவற்றின் மதிப்புகள் தெரிந்தவை. எண் ணின் துல்லியத்திற்குப் பொருத் தமானவை.

Significant figures - சிறப்பு எண்கள் : ஓர் எண்ணிலுள்ள இலக்கங்களின் எண்ணிக்கை. மேலும் பயன்படுத்துவதற் கேற்ற பொருள் உள்ளவை.

பொதுவாகக் கணிப்பொறிக் கணக்கீடுகளில் எண்கள் முழு மை ஆக்கப்படும் எ-டு 12345 6789, இது நான்கு சிறப்பெண் களைக் கொண்டதாக இருக் கும். 1234.

Silicon chip - சிலிகன் நறுவல், : இது ஒரு கருவியமைப்பு. அலோக அரைகுறை கடத்தி சிலிகன் கூறைக் கொண்டது. ஒருங்கிணை சுற்றிணைக் கொண்டது. அளவு மிக மிகக் குறைந்திருக்கும். குறைந்த விலை உயர் விரைவுச் செயல் திறன்.

Simple combo box - எளிய கூடுகைப் பெட்டி : இது தன் பட்டியல் பெட்டியை வெளிப் படுத்தாது. இதற்கு இதன் உயரப் பண்பை உயர்த்த வேண்டும்.

Simplex - தனிப் பகுதி : இது ஒரு தகவல் தொடர்பு வழி. ஒரு முனையிலிருந்து மற்றொரு முனைக்கு ஒரே திசையில் மட்டும் தகவலை எடுத்துக் செல்வது.

Simple list box - எளிய பட்டியல் பெட்டி : இது பட்டியலைக் காட்டப் பயன் படுவது. இதிலிருந்து பயனாளி ஒன்றுக்கு மேற்பட்ட தகவல் இனங்களைத் தேர்ந்தெடுக் கலாம். இதற்கு விஷ வல் பேசிக் உதவும்.

Simulator - பகர்ப்பி : இது ஒரு மென்பொருள் அல்லது வன் பொருள் தொகுதி. ஒரு உண் sim

199

Sa

மைச் செயலைப் பகர்ப்பு செய்ய வடிவமைக்கப்பட்டுள்ளது.

Simulation routine - பகர்ப்பு நடைமுறை வேறுபட்ட கணிப்பொறிகளை இயக்க ஒரு கணிப்பொறியில் நிகழ்நிரல் களை உதவுமாறு வடிவமைக் கப்பட்ட விளக்கும் நடைமுறை. -

Simultaneity - ஒழுங்கு நிகழ் திறன் : இதில் ஒரு நிகழ்நிரலி லுள்ள செயல்கள் ஏனைய செயல்களோடு ஒரு சேர நடைபெறுமாறு செய்ய இயலும்.

Simultaneous access - ஒருங்கு நிகழ் அணுக்கம் : இதில் தகவல் சேமிக்கப்படு கிறது அல்லது மீட்கப்படு கிறது. தகவல் தொகுதியின் அனைத்துக் கூறுகளையும் ஒரு போக்காக மாற்றி இதைச் செய்யலாம்.

Single address instruction - ஒற்றை முகவரிக் கட்டளை : ஒரு செயலிட முகவரி கொண்ட கட்டளைப் படி வமைப்பு கொண்டது.

Single biterror - தனிபிட்டு பிழை : இது ஒரு தகவல் செலுத்துபிழை. இதில் ஒரு வரிசையிலுள்ள ஒரு தனிப் பிட் தலைகீழாகும்: 0 ஒன் றாகும்; 1 சுழியாகும்.

Single board computer - ஒற்றைப் பலகைக் கணிப் பொறி : இது ஒரு முழுமை யான கணிப்பொறி. இதில் ஆர்ஓஎம், ஆர்ஏஎம், சிபியூ ஐ/ஓ இடைமுகம் ஆகியவை இருக்கும். ஒரு தனி அச்சுச் சுற் றுப் பலகை பொருத்தப்பட்டுத் தொழிற்சாலைக் கட்டுப் பாட்டுப் பயன்களுக்குப் பயன் படுவது.

Size attribute - அளவு இயல்பு : எச்டிஎம்எல் வேறுபட்ட ஏழு எழுத்து அளவுகளில் பாடத் தைக் காட்ட உதவுவது. மிகச் சிறிய அளவு 1,பெரிய அளவு 7.

Sizing - அளவிடல் : ஒரு தகவல் முறையாக்கும் செயலைச் செய்யத் தேவைப்படும் மூலங் களையும் வசதிகளையும் மதிப் பிடல். பயனாளியின் தேவை களுக்கு ஏற்ற செலவில் ஒரு குறிப்பிட்ட பணியைச் செய்ய லாம்.

Skeletal code - தட்டிக் குறி மை : முழுமையற்ற கட்ட ளைத் தொகுதி. ஒரு பொது நடை முறையின் பகுதியாக அமைவது. சுட்டளவுகளால் நிறைவு பெறுவது.

Skip - தாவல் : இது ஒரு கணிப் பொறிக் கட்டளை. இதில் தாவலைத் தவிர வேறு ஒரு கட்டளையும் நடைபெறு வதில்லை. வரிசையிலுள்ள அடுத்த கட்டளையைத் தொடங்க நடைபெறுவது.

**Slave - அடிமை** : மற்றொரு கருவியமைப்பின் கட்டுப்பாட்டில் இயங்கும் கருவியமைப்பு.

**Slider - நழுவி** : உரையாடல் பெட்டியில் உள்ளது. ஒரு முள்ளை நகர்த்தி, அதன் மூலம் ஓர் அளவினைக் குறிப்பது.

**Slot - காடி** : நுண்கணிப்பொறியின் விரிதிறன். குறிப்பிட்ட பயன்பாடுகளுக்காக இதில் சுற்றுப்பலகைகள் சேர்க்கப்படும். இந்தப் பலகைகளைக் கையாளும் கொள்கலமே இக் காடி.

**Slow storage - மெதுச் சேமிப்பு** : நீண்ட அணுக்க நேரமுள்ள சேமிப்பு வேறு பெயர் மெது நினைவகம்.

**Slow time scale - மெது நேர அளவுகோல்** : நடைமுறை இயல்பு முறையிலுள்ள அலகு நேரத்தைக் காட்டிலும் கூடுதலாக உள்ள நேர அளவு கோல்.

**Small scale integrated units - சிறு அளவு ஒருங்கிணை அலகுகள்**.

**Small tag - சிறிய ஒட்டு** : <small> tag. இது பெரிய ஒட்டைப் போன்றது. சிறிய அளவு எழுத்தில் பாடத்தைக் காட்டுவது. இது எப்பொழுதும் முடிவு ஒட்டு <small> உடன் இணைந்தே வரும்.

**Smash - தகர்** : ஒரு நிகழ்நிரலின் மீது மற்றொரு நிகழ்நிரலை எழுதி அழித்தல்.

**Snobol, single oriented symbolic language - ஸ்னோபால்** : ஒற்றை நோக்கக் குறிமொழி ஒநோகுமொ. உயர் நிலை நிகழ்நிரல் மொழி. உருச்சரங்களைக் கையாளப் பயன்படுவது.

**Soft copy - மென்படி** : இது ஒரு கணிப்பொறியின் வெளிப் பலன்; காட்சித் திரையில் தோன்றுவது.

**Soft error - மென்பிழை** ; நிலையற்றதும் முன்கூட்டியே கூற இயலாததுமான பிழை. மென் பொருளோடு தொடர்புள்ளது.

**Software - மென்பொருள்** : இது கட்டளைகளையும் நிகழ்நிரல் களையும் குறிக்கும். இவை கணிப்பொறி செய்ய வேண்டியதைச் சுட்டுபவை. ஒ. Hardware

**Software engineer - மென் பொருள் பொறியர்** : மென் பொருள் வல்லுநர்.

**Software interface - மெனபொருள் இடைமுகம்** : இது ஒரு வகைக் கணிப்பொறி மொழி. இதன்மூலம் கணிப் பொறி நிகழ்நிரல்கள் ஒன்றுடன் மற்றொன்று பேசிக் கொள்ளலாம். soft

201

Sowi

Software monitor - கணிப் பொறிக் கண்காணிப்பி : கணிப்பொறி மென்பொருளின் செயல்திறனை மதிப்பிடும் தொகுதி.

Software multiplexing - மென் பொருள் பன்மமாக்கல் : இது ஒரு செய்முறை. பன்ம நிகழ் நிரல் முறையில் அல்லது நேரப் பகிர்வில் பயன்படுவது.

Software packages - மென் பொருள் அடைப்பங்கள் : இவை பல. இவற்றை எச்டிஎம் எ ல் உருவாக்க உதவுவது. இவை தாமாகவே நம்மிட முள்ள பாடத்தை எச்டிஎம்எல் குறி முறையாக மாற்றும். எ-டு

மைக்ரோசாஃப்ட் 97, பிரண்ட் |

பேஜ், நைட்ஸ்கேப் கம்போசர். காட்டாக, மைக்ரோசாஃப்ட் 97 ஐப் பயன்படுத்தி நாம் பாடத் தை வடிவமைத்து அச்சியற்ற லாம். அந்த ஆவணத்தைப் பின் எச்டிஎம்எல் ஆவண மாகச் சேமிக்கலாம்.

Solid state computer - திண்ம நிலைக் கணிப்பொறி : அரை குறைக் கடத்திகளைக் கொண் டுள்ள பகுதிகளையும் சுற்று களையும் கொண்டு அமைக் கப்பட்ட கணிப்பொறி.

Solid state memory - திண்ம நிலை நினைவகம் : இதன் கூறுகள் ஒருங்கிணை சுற்று கொண்ட இருநிலை பன்ம அதிர்விகளுடன் கூடியவை. இந்நினைவகத்தில் தகவல்கள் இருநிலைகளில் ஏதாவது ஒன்றில் சேமித்து வைக்கப் பட்டிருக்கும்.

Sophisticated vocabulary - நேர்த்தியான சொல்வளம் : மேம்பட்டதும் விரிவானது மான சொல்தொகுதி. சிக்க லான

செயல்களையும் செய்ய உதவும்; கணிப்பொறியில் அமைந்துள்ளது.

Sorting - பிரிப்பு : இனங் காணும் முறைப்படி தகவல் இனங்களை ஒழுங்கு செய்தல். இனங்காண் எண், அகரவரிசை எண், தகவல் தளத்தைக் கை யாளும் முறைகளில் ஒன்று. மேலும், பணிக் குழுவினர் பட்டியல், வெற்றி பெற்ற மற்றும் தோல்வியுற்ற மாண வர்களின் எண்ணிக்கை முதலி யவற்றையும் பிரித்து அறிய லாம்.

Sound files - ஒலிக் கோப்புகள்

பல படிவமைப்புகளில் கணிப்

பொறியில் இக்கோப்புகள் சேமித்து வைக்கப்பட்டிருக் கும். இவற்றில் மிகப் பரவலாக உள்ளது அலைப்படிவமைப்பு, அடிப்படை ஒலிப்படிவ மைப்பு, மிடி படிவமைப்பு.

Source address - மூல முகவரி : இரு முகவரிக் கட்டளையில் முதல் முகவரி. இரண்டாவது முகவரி இறுதியிட முகவரி. sou

202

Spe

Source computer - மூலக் கணிப்பொறி : மூல நிகழ் நிரலைத் தொகுக்கும் கணிப் பொறி. இது பொருளறி கணிப் பொறியுடன் சேர்ந்து நடை பெறும். பிந்திய கணிப்பொறி பொருளறி நிகழ்நிரலைக் கொண்டது.

Source data entry - மூலத் தகவல் பதிவு : மூலத்திலிருந்து நேரடியாகத் தகவல்களைக் கணிப்பொறியில் சேர்த்தல்.

Source document - மூல

ஆவணம் : முதல் ஆவணம்.

இதிலிருந்து தகவல்கள் கணிப் பொறி ஏற்றுக் கொள்ளக் கூடிய வடிவில் உருவாக்கப் படும்.

Source language - மூல மொழி: இது ஒரு நிகழ்நிரல் மொழி. கணிப்பொறியின் வன்பொருள் இதை நேரடியாக முறையாக்க இயலாது. பொருள் நிகழ்நிரல் தொகுப்பு இதற்குத் தேவை. இந்நிகழ்நிரல் எந்திர மொழி யில் கட்டளைகளைக் கொண்' டிருக்கும். இதைக் கணிப் பொறி

நேரடியாக அறியவல் லது. எ.டு கோபல் ஆல்கால், போர்ட்ரான், பிஎல்/.

Source library - மூல திரட்டகம்: தொகுப்பு மொழியில் உள்ள கணிப்பொறி நிகழ்நிரல் களின் திரட்டு.

Source programme -மூல நிகழ் நிரல் : முதல் மொழியில் எழுதப்பட்ட நிகழ்நிரல்.

Space - இடம் : இருமி 0 அல் லது மின்னழுத்தம் இல்லை

Spacing - இடைவெளி விடுதல் : இது இருவரிகள் அல்லது பத்திகளுக்கிடையே இடம் விடுதல். இதை வேண்டிய அளவுக்கு மாற்றலாம்.

Special characters- சிறப்புருக்கள் : உருத் தொகுதியிலுள்ள உருக்கள். இவை எழுத்துகளோ எண்களோ அல்ல, எ-டு. !.,@

Special interest group, sig - தனி நாட்டக்குழு, தநாகு : கணிப்பொறி வரைகலை, தொலை இயக்குவியல், கல்வி, தொழில் முதலியவை பற்றி மக்கள் கூடிக் கலந்துரையாடிக் கருத்துகளைப் பரிமாறிக் கொள்ளுதல்.

Special purpose computer - சிறப்பு நோக்கக் கணிப்பொறி

குறிப்பிட்ட வகைச் சிக்கல்

களுக்கு மட்டுமே தீர்வு காண வடிவ ைமக்கப் பட்டுள்ள கணிப்பொறி,

Special purpose language - சிறப்பு நோக்க மொழி : குறிப் பிட்ட வகைச் சிக்கலுக்கு மட்டுமே தீர்வுகாண வடிவ மைக்கப்பட்ட மொழி.

Specific routine - சிறப்பு நடை முறை : கணிப்பொறி நடை முறை; குறிப்பிட்ட தகவல் spe

203

Sta

கையாளும் முறைச் சிக்கலைத் தீர்க்க உதவுவது. இதில் ஒவ்வொரு முகவரியும் கூறப்பெற்ற பதிவகங்களையும் இடங்களையும் குறிக்கும்.

**Speech synthesis - பேச்சுத்தொகுப்பு:** ஒலிக்கோலத்தை நுண்முறையாக்கிக் கட்டுப் பாட்டில் வைத்து இதை உருவாக்கலாம். இதனால் மனிதக் குரல் உண்டாகும்.

**Spelling checker - பிழைச் சரிபார்ப்பி:** இது மென்பொருள் பாடக்கோப்பில் ஒவ்வொரு சொல்லின் எழுத்து சரியாக உள்ளதா என்று பார்க்கும். இக்கோப்பு அகராதியுடன் இணைந்திருக்கும்.

**Spelling mistakes - எழுத்து பிழைகள்:** இவற்றைத் தட்டச்சு செய்யும் பொழுதும் அல்லது முழு ஆவணமும் தட்டச்சு செய்யப்பட்ட பின்பும் திருத்தலாம்.

**Spool - வட்டு:** தாள்நாடாக்களுள் உருளும் அமைப்பு.

**Spread sheet: விரிதான்** எண்களைக் கையாளும் ஆற்றல் வாய்ந்த கருவி, நேரத்தை மிச்சப்படுத்துவது. கணிதப் பிழைகளைத் தவிர்ப்பது. தனி யாள் கணிப்பொறிப் பயன்பாட்டில் புரட்சி உண்டாக்கியது.

**Spread sheet applications -விரிதாள் பயன்பாடுகள்:** *1) சம்பளப்பட்டி தயாரித்தல்* 2) வருமானவரி கணக்கீடுகள் செய்தல் 3) பட்டியல்கள் தயாரித்தல் 4) கணக்கு அறிக்கைகள் உருவாக்கல் 5) பொருள் பட்டியல் கட்டுப்பாடு 6) ஆக்கச் செலவுப் பகுப்பு 7) ஒப்பந்தப்புள்ளி மதிப்பீடு 8) மாணவர்களின் தேர்ச்சி முடிவுகளைப் பகுத்துப்பார்த்தல் **spread sheet, structure of - விரிதாளின் அமைப்பு: பா. Electronic spread sheet.**

**Squeezed files, sq - பிழிவு கோப்புகள், பிகோ:** இயல்பான கோப்புகளைக் குறிப்பது. பிழிவைப் பயன்படுத்தி நன்கு அமைக்கப்படுவது. இதைப் பிழியாமலும் செய்யலாம். இடத்தைக் குறைக்கும், மாற்று வகை நேரத்தைக் குறைக்கும்.

**Sql - எஸ்குயுஎல்:** இது ஒரு தனிவினவுமொழி. தகவல்களை வண்ணனை செய்து தகவல் தளத்தின் மூலம் தொடர்பு கொள்ளுவது. சில சமயங் களில் தகவல் தள மேலாண் தொகுதியைத் தகவலுடன் செய்ய வேண்டியதைச் செய்யுமாறு அறிவுறுத்துவது. **Stack - அடுக்கு :** நினைவிடங்கள் அடுத்தடுத்து அமைந்துள்ள தொகுதி. இதில் இறுதியில் வந்தது இறுதியில் செல்ல வேண்டும் என்னும் அடிப்படை கொண்டது. இதில்

வரிசைமுறையில் சேமிக்கப்படும் தகவல்கள் சில சார்புகளுக்குத் தேவை. பா. Last in first out.

**stacker - அடுக்கு** : துளையிட்ட அட்டைகளைக் கொண்ட கொள்கலம்.

**stack operation - அடுக்குச் செயல்** : கணிப்பொறித் தொகுதியைக் குறிப்பது. இதில் கொடிகள், திரும்பு முகவரி மற்றும் தற்காலிக முகவரிகள் உள்ளகத்தில் வரிசை முறையில் சேமித்து வைக்கப்படும்.

**staging - அசைத்தல்** : ஒரு சேமிப்புக் கருவியமைப்பிலிருந்து மற்றொரு சேமிப்புக் கருவியமைப்புக்குத் தகவல் தொகுதியை நகர்த்தல்.

**standard bus - திட்டப் போக்கு வாய்**.

**standard code sets - திட்டக் குறிமைத் தொகுதிகள்** : தேசிய மற்றும் அனைத்துலக அமைப்புகளால் வரையறுக்கப்பட்ட குறிமைத் தொகுதிகள் எடுத்துக்காட்டு : அன்சை, சிசிஐடிடி.

**standard interface - திட்ட இடைமுகம்** : இது ஒரு வன்பொருள் தொகுதி. வெளிப்புற அலகுகளை மைய முறையாக்கியுடன் இணைப்பதற்குரிய உட்பலன் / வெளிப்பலன் வழிகளையும் திட்ட முறைமைச் சுற்றுகளையும் அளிப்பது.

**standardization - தரப்படுத்தல்** : அளவைசெய்தல். ஓர் எண்ணின் மிதப்புப்புள்ளிக் குறியிடலை மாற்றீடு செய்யும் முறை. அதன் இயல்பான வடிவத்தினால் இதைச் செய்யலாம்.

**standard modules - திட்ட அலகுகள்** : இவை மாறிலிகள், மாறிகள், செய்முறைகள் ஆகிய எல்லாவற்றின் அலகு மட்ட அறுதியீடுகளைக் கொண்டவை.

**star office - ஸ்டார் ஆபீஸ் :** இது பல பயன்பாடுகளைக் கொண்டது. இவை எல்லாம் ஒருங்கிணைந்த சூழலில் அமைக்கப்பட்டிருக்கும். இதில் நாம் பலகாரியங்களைச் செய்யலாம். இவற்றின் வேலைகளில் சில பின்வருமாறு.

1) ஸ்டார் ரைட்டரைப் பயன்படுத்திப் பாட ஆவணங்களை உருவாக்கும்.

2) ஸ்டார்சால்கைப் பயன்படுத்தி விரிதாள்களை உருவாக்கும்.

3) ஸ்டார்பிரசைப் பயன்படுத்தி அளிப்புகளை உண்டாக்கும்.

4) ஸ்டார் டிராவைப் பயன்படுத்தி வரையவல்லது.

5) ஸ்டார்பேசைப் பயன்படுத்தித் தகவல் தளத்தை உருவாக்குவது.

இதன் பயன்பாடு வேறுபட்ட இயங்கு தொகுதிகளில் வேலை செய்ய வடிவமைக்கப்பட்டது. இதைத் தொடங்கல்

Click start → programs → star office

**start bit - தொடங்கு பிட் :** இதன் வேலை ஓர் உரு (ஒரு பைட்) தொடங்குவதைக் காட்டுவது. இத்தொடக்கம் ஒத்திசையாத் தகவல் செலுத்துகையில் இருக்கும்.

**stat - status - நிலை**.

**statement - கூற்று :** மூல மொழிக் கட்டளை, ஒரு தொகுப்பியில் உட்பலனாகச் செல்லும் எந்த வெளிப்பாட்டையும் குறிப்பது, இதில் விளக்கக் கூற்றுகள், தொகுப்பின் செயலைக் கட்டுப்படுத்தும் கட்டளைகள் ஆகியவை அடங்கும்.

**statement, kinds of - கூற்று வகைகள் :** இவை பின்வருமாறு.

1. எண்கணிதக் கூற்றுகள் : இவை சி மொழியில் பலவகை.

2) விளக்கக் கூற்றுகள்.

3) ஒரேமுறைக் கூற்றுகள் : இடப்பக்க மாறியும் வலப்பக்கக் கோவையும் ஒரே மாதிரியாக இருக்குமானால் (முழுஎண், மிதப்பு...), பின் கோவை மதிப்பிடப்படும், ஒதுக்கீடு செய்யப்படும்.

4) கலப்பு முறைக் கூற்றுகள் : மேற்கூறிய இரண்டும் வகையில் வேறுபடும் பொழுது, அது கலப்புமுறை கூற்று எனப்படும். இந்நிலையில் வலப்பக்கக் கோவை தன் சொந்த முறையிலேயே மதிப்பீடு செய்யப்படும். முடிவு இடப்பக்க மாறியாக மாற்றியமைக்கப் பட்டு, ஒதுக்கீடு செய்யப்படும்.

**Statement number - கூற்று எண் :** ஒவ்வொரு கூற்றுக்கும் ஒதுக்கப்படும் தொடர் எண். மூல மொழியில் எழுதப்படும் நிகழ் நிரலில் உள்ளது இது.

**staticiser - முறைமையாக்கி :** ஒன்றன் பின் ஒன்றாக வரும் குறிகைகளை மாற்றும் முறைமைக் கூறு.

**static memory - நிலை நினைவகம் :** இது வரம்பிலா அணுக்க நினைவகம் மின்னாற்றல் இருக்கும் வரை இங்குத் தகவல் இருக்கும். பயன்படுத்துவதற்கு எளிது. ஆனால், செலவு அதிகம், நெருக்கம் குறைவு, அதிக ஆற்றல் தேவை. இது இயக்க நினைவகத்திற்குக் குறைவு.

**static turtle - நிலை ஆமை :** லோகோ மொழியில் கூற, இதற்கு நிலைத்த இடநிலை உண்டு. இது ஒரு குறிப்பியே. முள், இடது என்னும் கட்டளைகளுக்குத் துலங்கும்.

**stationery - எழுதுபொருள் :** அச்சிடப்படவேண்டிய தாள். இதன் மீது அச்சியற்றி அச்சுப் பதிவை ஏற்றும்.

**statistical multiplexor - புள்ளி இயல் பன்மமாக்கி :** நேரப் பிரிவுப் பன்மமாக்கியின் பதிப்பைக் குறிப்பது.

**status word - நிலையுள்ள சொல் :** வெளிப்புற அலகின்

நிலைமை குறித்த செய்தியைக் கொண்ட சொல்.
எடுத்துக்காட்டு : எச்சரிக்கைச் செய்தி.

**step change - படிநிலை மாற்றம் :** ஒரு தனி உயர்வு புறக்கணிக்கும் நேரத்தில் நடைபெறும் பொழுது ஒரு மதிப்பிலிருந்து மற்றொரு மதிப்புக்கு ஏற்படும் மாற்றம்.

**step counter - படிநிலை எண்ணி :** கட்டளைகளில் படி நிலைகளை எண்ணும் கருவி. எடுத்துக்காட்டு : வகுத்தல், பெருக்கல், இவற்றிற்குத் தனித் தொடர் செயல்கள் தேவை.

**steps in c programme - சி நிகழ்நிரலில் படிநிலைகள் :** இவை பின்வருமாறு.

1) தலைப்புப் பகுதி.

2) வகை அறுதியிடும் பகுதி.

3) ஆணைப் பகுதி.

**step statement - படிநிலைக் கூற்று :** ஓர் அடுக்கில் உள்ள சில எண்கள் அல்லது கூறுகள் தாவச் செல்ல உதவுவது.

**stop bit - நிறுத்து பிட் :** ஒத்திசையாத் தொடர் செலுத்துகையில், ஒவ்வொரு உருவின் முடிவில் வரும் பிட்.

**storage - சேமிப்பு :** கருவியமைப்புகள் தகவல்களைத் தேக்கி வைத்தல்.

**storage allocation - சேமிப்பு ஒதுக்கீடு :** குறிப்பிட்ட வகைத் தகவல்களுக்குக் குறிப்பிட்ட பகுதிகளை ஒதுக்கும் முறை. ஒரு நிகழ்நிரலை உருவாக்கும் பொழுது நிறைவேற்றப்பட வேண்டிய வேலைகளில் ஒன்று இச்சேமிப்பு ஒதுக்கீடு. தொகுப்பியின் செயல்களில் ஒன்று பலவகைத் தகவல்களுக்கும் ஒதுக்கப்பட்ட பகுதிகளைச் சுட்டிக்காட்டுவது ஆகும்.

**storage capacity - சேமிப்புத் திறன்** : ஓர் ஊடகத்தின் ஓர் அலகில் சேமித்து வைக்கப்படும் தகவல்களின் மொத்த அளவு. ஊடகங்களை மாற்றாமல் தொகுதியை மதிப்பீடு செய்யலாம்.

**storage cell - சேமிப்புக் கலம்** : சேமிக்கலம். ஒரு சேமகத்தின் மிகச்சிறிய இயல்கூறு. எடுத்துக்காட்டு : உள்ளகச் சேமிப்பில் ஒரு தனி உள்ளகம்.

**storage cycle - சேமிப்புச் சுழற்சி** : ஒரு சுழற்சிச் சேமகத்தில் கொடுக்கப்பட்ட இடம் மதிப்பிடப்படும் பொழுது நேரங்களுக்கு இடையே உள்ள அளவு.

**storage media - சேமிப்பு ஊடகங்கள்** : தகவல்களைத் தேக்கும் கருவிகள். எடுத்துக்காட்டு : வட்டு, பேழை, நாடா.

**storage networking - சேமிப்பு வலையமைவுப் பணி** : இது ஒரு புது நுணுக்கம். இங்குத் தகவல் நன்மை தரும் தொழில் ஆதாயமாகும். இதைச் சேமித்துப் பகிர்ந்து கொள்ள வேண்டும்.

**store - சேமகம்** : கிடங்கு தகவலைப் பெற்றுத் தேக்கி வைக்கும் ஊடகம் அல்லது கருவியமைப்பு.

**stored programme - சேமித்த நிகழ்நிரல்** : உருவாக்கப்படும் நிகழ்நிரல் அழியாமல் இருப்பது. இன்று இது எல்லாக் கணிப்பொறிகளிலும் உள்ளது.

**stpi, software technology park of india - எஸ்டிபிஐ, இந்திய மென்பொருள் தொழில்நுட்ப பூங்கா, இமெதொபூ** : இது 1990 இல் நிறுவப்பட்டது. தகவல் தொழில் நுட்ப இயல் அமைச்சகக் கட்டுப்பாட்டில் உள்ளது. முழுதும் தன்னாட்சியுள்ள அமைப்பு.100 விழுக்காடு ஏற்றுமதி வழியமைந்த திட்டத்தைக் கொண்டது இது; இதில்

மென்பொருள்கள் அடங்கும். இவை ஏற்றுமதி செய்யப்படுபவை.

**streaming - ஓடவிடல் :** காந்த நாடாவில் விரைவாகப் பதிவு செய்யும் நுணுக்கம்.

**stream - oriented data bus - உயர்நிலை வழித்தகவல் கோப்புகள் :** தகவல் கோப்புகளில் ஒருவகை. இவை மேலும் இரு வகைப்படும்.

1) பாடக் கோப்புகள் : இவற்றில் உருக்கள் அடுத்தடுத்து இருக்கும். வேறுபெயர் உயர்நிலைக் கோப்புகள்.

2) தாழ்நிலைக் கோப்புகள் : இவை பாடக் கோப்புகளை விட விரைவானவை. பா. Data files.

**string - சரம் :** உருக்கள் ஒழுங்காகவும் ஒன்றுடன் மற்றொன்று இணைந்தும் இருக்கும் சரடு, எடுத்துக்காட்டு : தகவல் என்னும் சொல் 4 உருச்சரம் கொண்டது. String. H என்பது அடிக்கடிப் பயன்படும் இன்றியமையாச்சார்பு.

**structured language - கட்டமைப்பு மொழி :** இது ஒரு கணிப்பொறி மொழி. கட்டமைப்புள்ள நிகழ்நிரல் நுணுக்கங்களை வளர்ப்பது. இதற்குச் செயற்கைச் சொல்வளமும் இலக்கணமும் பயன்படும்.

**structured programming - கட்டமைப்பு நிகழ்நிரல் :** நிகழ்நிரலுக்குப் பயன்படும் முறை இயல். தொடர்நிலைகளில் நிகழ்நிரல் பணிகளை விளக்க முறையான செய்முறை பயன்படும்.

**structures - அமைப்புகள் :** வேறுபட்ட தகவல் வகைகளைக் கொண்ட தகவல் இனத்திரட்டுக்கு அமைப்பு என்று சி மொழியில் பெயர். ஒவ்வொரு தனித் தகவல் இனத்திற்கு உறுப்பு என்று பெயர். ஒவ்வொரு உறுப்புக்கும் ஒரு தனித்த பெயருண்டு. இது சி மாறி போன்று நடப்பது. கட்டமைப்புக்குள் ஏனைய சி மாறிபோலக்

குறிப்பிடப்படும். ஒவ்வொரு உறுப்பும் படிக்கப்பட்டுத் தனி தகவல் இனமாக அச்சிடப்படும். பொதுவாக, அமைப்புகள் பெரும் நிகழ்நிரல்களில் சிக்கலான தகவல்களை ஒழுங்கு செய்யப் பயன்படுபவை. பா. **Control structures.**

**strudl, structural design language - ஸ்ட்ரடல் கட்டமைப்பு வடிவமைப்பு மொழி** : அமைப்புகளைப் பகுக்கவும் வடிவமைக்கவும் பயன்படுவது.

**stylus - எழுதுகூர்** : தூவல் போன்ற கருவியமைப்பு. வரைகலைக் கல்லோடு பயன்படுவது.

**stylus printer - எழுதுகூர் அச்சியற்றி** : இதில் ஒவ்வொரு உருவும் புள்ளிக் கோல வடிவத்தைப் பெறும். இப்புள்ளிகள் எழுதுகூரினால் உண்டாக்கப்படும். வேறுபெயர் கம்பி அச்சியற்றி.

**subscript - கீழ்க்குறி** : இயல்பான எழுத்து வரிக்குக் கீழ் அச்சிடப்படும் உருக்கள். எடுத்துக்காட்டு : $a_1 + b_2$. ஒ. **Super script.**

**subscripted variables, rules for - கீழ்க்குறி மாறிகளுக்குரிய விதிகள்** : இவை பின்வருமாறு.

1) கீழ்க்குறி எப்பொழுதும் ஒரு முழு எண்.

2) கீழ்க்குறி மதிப்பு எதிர்மறையாக இருக்க இயலாது.

3) மாறியின் பெயருக்குப் பின் சதுர அடைப்புகளில் கீழ்க்குறி குறிப்பிடப்பட வேண்டும்.

4) ஒன்றுக்கு மேற்பட்ட கீழ்க்குறிகள் இருக்குமானால், அவை தனிப்பட்ட சதுர அடைப்புகளில் குறிப்பிடப்பட வேண்டும்.

**subset - உட்கணம்** : இனங்காணக்கூடிய தகவல் இனத் தொகுதி. இவை பெருந்தொகுதி சார்ந்திருக்கும்.

**subtracter - கழிப்பி** : இலக்கக் குறிகைகளைப் பயன்படுத்திக் கழித்தலைச் செய்யுங் கருவி.

**sujatha - சுஜாதா** : இயற்பெயர் ரங்கராஜன், புனைபெயர் சுஜாதா. புகழ்வாய்ந்த எழுத்தாளர், பொறியர், அறிவியல் கதைகள் எழுதுபவர், தமிழ் இணைய-99 மாநாட்டின் வரவேற்புத் தலைவர். தம்முடைய எழுத்துகளை மின்னம்பலம் மூலம் வெளியிடுபவர். இணைய வளர்ச்சியில் ஆர்வத் துடன் பாடுபடுபவர்.

**suite - நிரல்தொகுதி** : ஒன்றுக்கு மற்றொன்று தொடர்புள்ள நிகழ்நிரல்களின் எண்ணிக்கை. இயக்கு வேலையாக இவை ஒன்றன்பின் ஒன்று செல்லும்.

**summary - கருத்துச் சுருக்கம்** : இது ஓர் அறிக்கை, அளிக்கப்பட்ட தகவல்களிலிருந்து குறிப்புகளைப் பெறுவது.

**superscript - மேற்குறி** : இயல்பான எழுத்து வரிக்குமேல் அச்சிடப்படும் உரு. எடுத்துக்காட்டு : $x^2 + y^4$.

**supervisory programme - மேற்பார்வை நிகழ்நிரல்** : இது ஒரு முதன்மை நிகழ்நிரல் கணிப்பொறியின் நினைவகத்தில் நிலையாக இருப்பது. நேரப்பகிர்வு, உட்பலன் / வெளிப்பலன் / பன்ம நிகழ் நிரல் சார்புகள் ஆகியவற்றைக் கட்டுப்படுத்துவது. கணிப்பொறியின் இன்றியமையாத பகுதியாக இருந்தாலும், வன்பொருள் பகுதியாகவே கருதப் படுவது.

**support - ஆதரவு** : வாடிக்கையாளரின் உறுதிமொழி. இதில் உதவியும் வழிகாட்டலும் அடங்கும். கணிப்பொறிப் பயிற்சியில் வாங்கிய மென்பொருளைப் பயன்படுத்துவது குறித்தது.

**surge - மின் எழுச்சி** : மின் சுற்றில் ஏற்படும் மின்னோட்ட

மாற்றம். இதனால் நுண்கணிப் பொறியும் அதன் வெளிப்புறப் பகுதிகளும் தவறான முடிவுகளைக் கொடுக்கும். அல்லது வேலை செய்வதை நிறுத்தும்.

**surge protector - அலை எழுச்சிப் பாதுகாப்பி** : சுவர்க் கூட்டில் பொருத்தி இருக்கும் கருவியமைப்பு. மாறுதிசை மின்னோட்ட வரி எழுச்சிகளிலிருந்து நுண் கணிப்பொறிகளைப் பாதுகாப்பது.

**surveillance - கண்காணிப்பு** : ஒரு மூலத்தை மென்பொருள் மூலம் கண்காணிக்கும் முறை.

**switch - சொடுக்கி** : 1) ஒரு பிட்டின் நிலையை 1-0, 0.13 க்கு மாற்றும் பொத்தான். 2) நிகழ்நிரல்களைக் கட்டளை. இது பல மாற்றுவழிகளில் ஒன்றைத் தேர்ந்தெடுப்பது.

**symbolic address - குறியீட்டு முகவரி** : ஒரு முகவரி கொள்ளும் மூலமொழி வடிவம். இதில் நிகழ்நிரலர் தேர்ந்தெடுக்கும் ஒரு தலைக்குறியம், இதைக் குறிக்கும். முகவரி தனி. முகவரியாக மொழிபெயர்க்கப்படும். இப்பொழுது நிகழ்நிரல் தொகுக்கப்படும்.

**symbolic language - குறியீட்டு மொழி** : கணிப்பொறிக்குரிய கட்டளைத் தொகுதி. இதன் ஆங்கில மொழி இயல்பினால், இதை நாம் நன்கறிய இயலும். நிறைவேற்றப்பட இம்மொழி எந்திர மொழியாக மாற்றப்பட வேண்டும்.

**symbolic name - குறியீட்டுப் பெயர்** : இது ஒரு குறிப்பு. நிகழ் நிரல்களில் பயன்படுவது. மூலமொழியில் எழுதப்படுவது. இம்மொழி தகவல்கூறுகள், கட்டளைகள், வெளிப்புற அலகுகள் ஆகியவற்றோடு தொடர்புடையது. பொதுவாகக் குறியீட்டுப் பெயர்கள் நினைவுக்குறிப்புக் குறிமைகளைப் பயன்படுத்துவது.

**symbolic programming - குறியீட்டு நிகழ்நிரல்** : மூல மொழியில் நிகழ்நிரலை எழுதுதல்.

**synchronization - ஒத்திசையச் செய்தல்** : செலுத்தியும் பெறுவியும் கட்ட நிலையில் ஒன்றுடன் மற்றொன்று ஒத்திசைந்து இயங்குமாறு செய்வதற்குரிய குறிகைகள்.

**synchronizer - ஒத்திசைவி** : இது சேமிப்புக் கருவியமைப்பு: தாங்கியாகச் செயல்படுவது. கருவியமைப்புகளுக்கிடையே செலுத்தும் தகவல்களின் விளைவுகளை ஈடு செய்வது. இக்கருவியமைப்புகள் வேறுபட்ட அளவுகள் இயங்கும்.

**synchronous computer - ஒத்திசை கணிப்பொறி** : இதில் எல்லாச் செயல்களின் நேரமும் ஒரு கடிகையிலிருந்து வரும் சம விரைவுக் குறிகைகளால் கட்டுப்படுத்தப்படும்.

**synchronous data communication - ஒத்திசை தகவல் தொடர்பு** : இதில் ஒரு பொதுக் கடிகாரக் குறிகையுடன் செலுத்தும் மற்றும் பெறும் கருவியமைப்புகள் ஒத்திசையுமாறு செய்யப்படும்.

**syntax - சொற்றொடரியல்** : இது இலக்கண விதிகள் அடங்கிய தொகுதி. நிகழ்நிரல் மொழியின் அமைப்பை வரையறை செய்வது.

**sysgen, system generation - சிஸ்ஜென், அமைப்பு இயற்றல், அஇ** : ஒரு கணிப்பொறியில் ஓர் இயங்கு தொகுதியை இயற்றலும் தொடங்கி வைத்தலுமாகிய முறை.

**system - அமைப்பு** : ஓர் அலகைத் தோற்றுவிக்கும் பொருள்களின் தொகுதி. இவை ஒன்றுடன் மற்றொன்று தொடர்புள்ளவை.

**systems analyst - அமைப்புப் பகுப்பாளர் :** கணிப்பொறித் தொடர்பான தேவைகளை இனங்கண்டறிந்து அவற்றைச் செயற்படுத்த நிரல் வகுப்பவர். இது அலுவலகத் தொடர்பான எல்லாச் செயல்களையும் குறிக்கும்.

**systems definition - அமைப்பு வரையறை : அமைப்புப் பகுப் பாளர் உருவாக்கும் ஆவணம்.**

**Systems design - அமைப்பு வடிவமைப்பு :** நடப்பிலுள்ள முறைகளை ஆராய்தலும் பதிவு செய்தலும் புதியமுறைகளை வடிவமைத்தலும்.

**Systems events - அமைப்பு நிகழ்வுகள் :** இவற்றில் காலக்குறிப்பிச் செயல்கள், தகவல் அணுக்கப் பிழைகள், படிவ நிலை மாற்றங்கள், கட்டுப் பாட்டு நிலை மாற்றங்கள் முதலியவை அடங்கும்.

**Systems flowchart - அமைப்பு விதி முறைப்படம் :** இதில் விதிமுறைக் குறியீடுகள் குறிப்பிட்ட எழுத்துத் தகவல் ஆயத் தத்தைக் குறிக்கும்; அமைப்பு வடிவமைப்பில் இணைந்த கணிப்பொறிச் செய்முறைகளும் இதில் சேரும்.

**Systems network architecture - அமைப்புவலையமைவுக் கட்டமைப்பு :** இது தகவல் வலையமைவு மரபுச் சீரைக் குறிக்கும்; ஐபிஎம்மால் உருவாக்கப்பட்டது. ஓம்பு முறையாக்கி களுடன் முனையங்களை இணைக்கும் திட்டமுறையாகும். ஓம்பு முறையாக்கியில் தனிப் பயன்பாடுகளைப் பகிர்ந்து கொள்ளப்பயன்படுவது.

**Systems recovery time - அமைப்பு மீட்பு நேரம்:** மீட்புக்குரிய காலம், வேறு பெயர் மீள் ஓட்ட நேரம்.

**System software - அமைப்பு மென்பொருள் :** ஓர் அமைப்பிற்காக எழுதப்படும் பொதுவான நிகழ்நிரல்கள். இவை பயன்பாட்டு மென்பொருள்களைஎழுதுவதற்குரிய சூழலை ஏற்படுத்தும். அமைப்பு நிகழ் நிரல்களில் சில: 1)தொகுப்பி, 2)கோவையாக்கி, 3)மொழி பெயர்ப்பி, 4)நிரல் ஏற்றி.

**T**

**Tab - தத்தி** : உரையாடல் பெட்டியில் வேறுபட்ட தெரிவுகளைக்காட்டப் பயன்படுவது.

**Table - அட்டவணை:** நினை வகத்தில் அமையும் தகவல் வரிசைக் குறிப்பிட்ட திறவைப் பயன்படுத்தித் தனித் தகவல் இனங்களை மீட்கலாம். அட்டவணையாக இருக்கும் பொழுது, தகவல்களை எளிதாகப் படிக்கலாம்.
இதற்கு **<table>** மற்றும் **<table>** ஒட்டுகளைப் பயன் படுத்த வேண்டும். இந்த ஒட்டு, அகலம், நுண்ணறை இடைவெளி, நுண்ணறை உள்வெளி, கரை இயல்புகளைப் பயன்படுத்தும். அட்டவணையில் <tr> மற்றும் <tr> ஒட்டுகள் வரிசைகளை வரையறை செய்யும். <th> மற்றும் <td> ஒட்டுகள் நுண்ணறைகளின் உள்ளடக்கங்களைக் குறிக்கப் பயன்படும். **<th>** ஐப் பயன்படுத்தி உருவாக்கப்படும் நுண்ணறைகளின் உள்ளடக்கங்கள் மையமாகவும் தடிப்பாகவும் இருக்கும். இவ்விரு முடிவு ஒட்டுகளுக்குரிய ஒத்த முடிவு ஒட்டுகள் **</th>** மற்றும் **</td>** ஆகும்.

**Table attributes - அட்டவனை இயல்புகள்** : இவை பின்வரு மாறு. 1) அகலம், 2) நுண்ணறை இடைவெளிவிடல் 3)நுண்ணறை உள் வெளி 4)கரை.

**Table formatting - அட்டவனைப் படிவமாக்கல்** : இதை உருவாக்கக் கருவிப்பட்டை உதவும். இதில் பல நுண்படங்கள் இருக்கும். இவை அட்டவணைத் தொடர்பான பல வேலைகளுக்குப் பயன்படுபவை. ஒ. **Page formatting.**

**Tabular language - அட்ிவணை மொழி** : முடிவு அட்டவணைகள் தொடர்பாக நிகழ்நிரல் தேவைகைளக் குறிப்பிடப் பயன்படுவது. இங்கு அட்டவணை, சிக்கல் வழி நிகழ்நிரல் மொழியின் பணியை நிறைவேற்றுவது.

**Tags - ஒட்டுகள்** : கோண அடைப்புகளில் **(< >).** இவை திறவுச்சொல்லைக் கொண்டிருக்கும். இச்சொல் ஒட்டின் வேலையைக் குறிக்கும். எ-டு. **<head>, <title>, <html>** ஒட்டுகள் பொருள் உணர்வு இல்லாதவை. பெரும்பாலானவை இணையாக இருக்கும். முதல் ஒட்டு தொடங்கு ஒட்டு எனப்படும். இது ஒரு விளைவு தொடங்குவதைச் சுட்டும். இரண்டாம் ஒட்டு முடிவு ஒட்டு எனப்படும். ஒரு விளைவின் முடிவைக் குறிப்பது.

**Tags, kinds of - ஒட்டுகளின் வகைகள் : இவை பின்வரு மாறு. 1) கூடுடை ஒட்டுகள்** : இவை ஒட்டுக்குள் ஒட்டாகும். இவற்றில் உடல் ஒட்டு. எச்டிஎம்எல் ஒட்டினுள் அமையும்.

**2) கரை, சாய்வெழுத்து. கீழ்க் கோடு மற்றும் மைய ஒட்டுகள் :** இவை பாடத்தைக் கொட்டை எழுத்திலும், சாய்வெழுத்திலும் அமைத்துக் கீழ்கோட்டுப் பக்கத்தின் மையத்தில் வைக்க உதவுபவை.

**3) br ஒட்டு** : இது கரை ஒட்டு. இது வரிமுறிவை உண்டாக்குவது.

**4) p ஒட்டு** : இது பத்தி ஒட்டு. ஒரு புதிய பத்தியைக் குறிப்பது.

**5) தலைப்பு ஒட்டுகள்** : இவை கொட்டை எழுத்து ஒட்டுகள்.

**6) கிடைமட்டக் கோட்டு ஒட்டு** : கிடைமட்டக் கோடுவரைய இது உதவும். **7) சிறிய ஒட்டு** : சிறிய எழுத்தில் பாடத்தைக் காட்டுவது. **8) எழுத்து வகை ஒட்டு** : எழுத்துவகை, அளவு, நிறம் ஆகியவற்றைக் குறிக்க இது பயன்படும். **9) மார்குயூஸ் ஒட்டு** : பாடத்தை உருளச் செய்வது இது. **10) உருவ ஒட்டு** : பாடத்தில் உருவத்தைச் சேர்ப்பது. **11) ஒலிஒட்டுகள் :** இவை ஒலிக் கோப்புகளில் பயன்படுபவை.

**Tag format - ஒட்டுப் படிவமைப்பு** : ஆவணங்களைக் குறிப்பிட்ட வடிவத்தில் அமைத்தல்; அவற்றை ஒட்டுகளாகப் பயன்படுத்தல்.

**Takedown time - எடுக்கும் நேரம்** : எடுக்கும் செயலை முடிக்கத் தேவைப்படும் நேரம்.

**Tally reader - உடன்படு படிப்பி:** உடன்படு பட்டியலிலிருந்த தகவல்களை அச்சிட்ட எழுத்துகளாகப் படிக்கும் எந்திரம். எ-டு ஒளியுரு அறிதலைப் பயன்படுத்தல்.

**Tamil and internet - தமிழும் இணையமும்** : இந்திய மொழிகளில் முதன்முதலில் இணையத்தில் அறிமுகமாகியது தமிழாகும். தமிழ்ச் சொல் முறையாக்க மென்பொருள் 1978 வாக்கில் தொடங்கியது. எல்லாத் தமிழ் எழுத்துகளையும் விசைப் பலகையில் அடக்கலாம். மின்னஞ்சலிலும் பயன்படுவது. தமிழ்ப் பேரகராதி, சங்க இலக்கியங்கள், கம்பராமாயணம், ஆழ்வார் பாசுரங்கள், தேவாரம், திருக்குறள் முதலியவை இணையத்தில் உள்ளன.

**Tamil internet 2000 - தமிழ் இணையம் 2000** : இது மூன்றாம் அனைத்துலக மாநாடு. தமிழ் அடிப்படையில் அமைந்த

இணையத்தைத் தகவல் தொடர்பு தொழில் நுட்பத்தை வளர்ப்பதற்குப் பயன்படுத்தல். 22-24 ஜூலை, 2000 சிங்கப்பூரில் நடந்தது. தமிழ் இணையம் 1998 சிங்கப் பூரிலும் தமிழ் இணையம் 1999 சென்னையிலும் நடந்தன. சென்னையில் நடந்த மாநாட்டில் தமிழ் விசைப்பலகை அளவை செய்யப்பட்டது.

**Tamil internet keyboard - தமிழ் இணைய விசைப்பலகை 1999:** 15-06-99 அன்று முதலமைச்சர் அவர்களால் முறைப்படி இது துவக்கி வைக்கப்பட்டது. தமிழ் இணையம் 1999 இல் திட்டப்படுத்தப்பட்டு அனைவராலும் ஒப்புக் கொள்ளப்பட்டது.

**Tamil satyam - தமிழ் சத்தியம் :** இது மிக விரிவான தமிழ் வலையத்தளம். உலகம் முழுவதும் உள்ளது. உலகத்தை இதன் வழி காணலாம். சிங்கப்
**தமிழ் இணையம்-99** விசைப்பலகையைச் சென்னை தலைமைச் செயலகத்தில் மாண்புமிகு கலைஞர் அவர்கள் முறையாகத் தொடங்கிவைத்தல் (படத்தில் இருப்பவர்கள் இடமிருந்து வலம்) **திரு. ஜானகிராமன்**, புதுவை முதலமைச்சர், **முனைவர் அனந்தகிருஷ்ணன்**, முதலமைச்சரின் தகவல் தொழில்நுட்பவியல் அறிவுரையாளர், **முதல்வர் கலைஞர்** மைய அமைச்சர் **முரசொலி மாறன்**.

பூரில் அமைந்து அனைத்துச் செய்திகளையுந் தருவது.

**Tamil virtual university - தமிழ் இணையப் பல்கலைக் கழகம் :** தரமணியில் அமைய உள்ளது. தமிழ் இணையத்தையும் அது தொடர்பான பல துறைகளையும் தொழில்நுட்ப முறையில் வளர்ப்பது.

**Tamizha-tamizha - தமிழா-தமிழா :** உலக அளவில் வரும் மின்னிதழ் இதன் நிறைவேற்று அலுவலர் பிரன் கோஸ் 2000 ஜனவரியில் தொடங்கப்பட்டது. அனைத்து இதழியல் சிறப்புகளையுங் கொண்டது. நடத்துவது **யூடிவி இண்டர் ஆக்டில்.**

**Tanitec, tamil nadu institute of information technology - டேனிடெக்,** தமிழ் நாடு தகவல் தொழில்நுட்பவியல் நிறுவனம், தநாததொநி 11-09-98 அன்று தொடங்கிவைக்கப்பட்டது. தகவல் தொழில் நுட்பத் துறைகள் பலவற்றையும் வளர்ப்பது.

**Tape - நாடா :** தகவல்களைப் பதிவு செய்யும் நீண்ட நாடா. எ-டு காந்த நாடா.

**Tape alternation - நாடா மாற்றம் :** இம்மாற்றம் நிகழ் நிரல் கட்டுப்பாட்டில் நடை பெறுவது.

**tape file - நாடாக்கோப்பு :** ஆவணத் தொடர் நாடாவில் வரிசையாக அமைந்திருக்கும்.

**target attribute - இலக்கு இயல்பு :** ஒவ்வொரு இணைப்போடும் இது பயன்படுவது. இணைந்த ஆவணம் காட்டப்பட வேண்டிய சட்டத்தைக் குறிப்பது.

**target computer - இலக்கு கணிப்பொறி :** குறிப்பிட்ட பொருளறி நிகழ்நிரலை ஓட விடப் பயன்படுவது.

**target language - இலக்கு மொழி :** நிகழ்நிரல் மாற்றப்படும் மொழி.

**task - பணி :** நிறைவேற்றப்பட வேண்டிய கட்டளைத் தொகுப்பு.

**task descriptor - பணி விளக்கி :** பன்மப் பணிமுறையில் ஒரு பணி குறித்த இன்றியமையாத் தகவல், வேறுபெயர் நிலைத்திசைச்சாரி.

**task management - பணி மேலாண்மை :** ஓர் இயங்கு தொகுதியின் வேலைகளைக் கண்காணித்தல், அட்டவணையாக்கல், தகவல்களை அனுப்புதல் முதலியவை.

**telcomp - டெல்காம்ப் :** கணிப்பொறி மொழி. போல்ட், பெரநகை, நியுமன் ஆகியோரால் உருவாக்கப்பட்டது. நேரப்பகிர்வு மொழி.

**telecommunication - தொலைத்தொடர்பு :** தொலைபேசிக் கம்பிகள், வடங்கள், ஒளி இழைகள் ஆகியவை மூலம் செய்தித் தொடர்பு கொள்ளுதல்.

**teleconferencing - தொலைக்கூட்டம் :** தொலைக் காட்சிவழி நடைபெறுவது.

**telemedicine - தொலை மருத்துவம் :** தொலைவிலிருந்து மருத்துவச் செய்திகளைப் பல நிலைகளிலும் பெறுதல். இது இன்று உலகளவில் நடைபெறுவது.

teleshopping - தொலைபேசி வழிப் பொருள் வாங்குதல் : **தொலைபேசியில் தெரிவித்து நமக்கு வேண்டிய பொருள்களை வாங்குதல். இதில் அலுவலகமும் கிடங்கும் தனித்தனியே இருக்கும்.**

**terminal - முனையம் :** தகவல் தொடர்புத் தொகுதியிலிருந்து தகவலைப் பெறவும் அனுப்பவும் பயன்படும் கருவியமைப்பு.

**test - ஆய்வு :** தகவல் கூறை ஆய்ந்து அது உரிய நிலைக்கு உகந்ததா என்று பார்த்தல்.

**test data - ஆய்வுத் தகவல் :** மாதிரித் தகவல். நிகழ்நிரலை ஆய்ந்து பார்க்கப் பயன்படுவது.

**test programme - ஆய்வு நிகழ்நிரல் :** ஒரு கணிப்பொறியின் text



வன்பொருள் அலகுகளின் வேலைகளைச் சரிபார்க்க வடிவமைக்கப்பட்ட நிகழ்நிரல்.

Test run - ஆய்வு ஓட்டம் : ஒரு குறிப்பிட்ட நிகழ்நிரல் சரியாக இயங்குகின்றதா என்றும் பார்க்கும் ஆய்வு.

Text - பாடம் : உரை. ஒரு செய்தியின் கூறு.

Text attribute - பாட இயல்பு : பாடம் காட்டப்பட வேண்டிய நிறத்தை இதன்மூலம் குறிப் பிடலாம்.

Text boxes - பாடப்பெட்டிகள் : உரைப்பெட்டிகள். இவை படிவங்களில் அடிக்கடி பயன் படும் கட்டுப்பாடுகள். ஒரு பாடப்பெட்டி என்பது எளிய வகைப்பெட்டி. இதில் பயனாளி தன் உட்பலன் பாடத்தை உள்விடலாம். இதை உருவாக்க உட்பலன் ஒட்டைப் பயன்படுத்த வேண்டும். இதன் இயல்புகளாவன: எழுத்து, பெயர், அளவு, மதிப்பு.

Text editing - பாடப் பதிப்பு : புதிய பாடத்தை உட்செலுத்தல் அல்லது ஆவணத்தில் இருக்கும் பாடத்தை மாற்றியமைத்தல்.

Text editor - பாட பதிப்பியற்றி: ஒரு கணிப்பொறியிலுள்ள நிகழ்நிரல். மூல நிகழ்நிரலைப் பதிப்பிக்க நிகழ்நிரலருக்கு உதவுவது.

Text formatting - பாட படிவமைப்பு : உரைக்குத் தகுந்த வடிவமைப்பு அளித்தல்.

Text selection - பாடத்தேர்வு : சொல், வரி, பத்தி, முதலிய வற்றை அறியப் பாட அறிவு தேவை. இதற்கு அதை எவ்வாறு தோந்தெடுப்பது என்பதை நாம் அறியவேண்டும். பாடத்தேர்வுக்குப் பின், பாடத்தில் மாற்றம் செய்ய வேண்டும். பாடத்தை நகர்த்திப் படி எடுக்க வேண்டும்; கொட்டை எழுத்துகளில் அமைக்க வேண் டும். பாடத்தின் எழுத்து, நிறம் ஆகியவற்றையும் மாற்றலாம். பாடத்தை மாற்றச் சுட்டெலி அல்லது விசைப் பலகையைப் பயன்படுத்தலாம்.

Text selection with keyboard - விசைப் பலகைப் பாடத் தேர்வு : இதிலுள்ள படி நிலைகள் பின்வருமாறு.

1) தேர்ந்தெடுக்க வேண்டிய பாடத் தொடக்கத்திற்குச் செருகு புள்ளியை நகர்த்துக.

2) இடம்பெயர் திறவை கீழ் அழுத்துக. இயக்கத்திறவுகளைத் தேவைப்பட்ட பாடத்தைச் சுட்டிக் காட்டப் பயன்படுத்துக.

3) இடம்பெயர் திறவு விடுபடும் பொழுது,பாடம் தேர்ந்தெடுக்கப்பட வேண்டும்.

Text selection with mouse - சுட்டெலிப் பாடத்தேர்வு : text

217

Tool

இதிலுள்ள படிநிலைகள்.

1) தேர்ந்தெடுக்க வேண்டிய பாடத்தொடக்கத்திற்குச் செருகுபுள்ளியை நகர்த்த வேண்டும்.

2) இடது சுட்டெலிப் பொத்தான் அழுத்தப்பட வேண்டும், கீழ்க்கொண்டு செல்லப்பட்டு, தேர்வுசெய்ய வேண்டிய பாடத்திற்குக் குறுக்கே நகர்த்தப்பட வேண்டும்.

3) தேவைப்படும் பாடம் தேர்வு செய்யப்பட்ட பின், சுட்டெலிப் பொத்தானை விடுவிக்க வேண்டும்.

**Text selection shortcuts - பாடத் தேர்வுக் குறுக்கு வழிகள்:**

**1) சொல்லில் இரு தட்டல்கள்:** சொல்லைத் தேர்ந்தெடுக்க

**2) வரிக்கு அடுத்து ஒரு தடவை தட்டல்:** குறிப்பிட்ட வரியைத் தோந்தெடுக்க

**3) மைய a ஐ அழுத்துக:** முழு ஆவணத்தையும் தேர்ந்தெடுக்க.

**Thrashing - பிழையுரல்** : மாயச் சேமிப்புத் தொகுதிகளில் உண்டாகும் பிழைநிலைமை.

**Tidel software park - டைடல் மென்பொருள் பூங்கா:** தரமணியில் தமிழ்நாடு அரசு பெரும் பொருள் செலவில் அமைத்துள்ளது. 04-07-2000 அன்று தலைமை அமைச்சர் மாண்புமிகு திரு. வாஜ்பாய் அவர்களால் முதலமைச்சர் மாண்புமிகு கலைஞர் அவர்கள் தலைமையில் திறந்து வைக்கப்பட்டது. ஒரு பெரிய தகவல் தொழில்நுட்ப வளாகம் தமிழகத்தில் தகவல் தொழில் நுட்ப வளர்ச்சியை மேம்படுத்துவது. இது அமைந்திருப்பது தமிழ்நாட்டுக்கு ஒரு சிறப்பு.

**Timer control - நேரக் கட்டுப்பாடு** : விஷ-வல் பேசிக்கில் உள்ள எளிய கட்டுப்பாடு இது. ஓர் பயன்பாட்டில் நேரத் தொடர்பான முறையாக்கலைப் பயன்படுத்த உதவுவது. இதைப் பயன்படுத்தும் பொழுது மூன்று பண்புகளை மாற்றவேண்டும். 1) பெயர்ப் பண்பு 2) இடைவெளிப் பண்பு 3) இயலும் பண்பு.

**Time series - நேரத் தொடர்:** நேரப்பகிர்வில் தகவல்களைத் தனித்தனி கூறுகளாகத் தொடராகச் செலுத்துதல். இத்தொடரில் குறிப்பிட்ட நேரங்களுக்கு அளவறி மதிப்புகள் ஒதுக்கப்படும்.

**Timing error - நேரப்பிழை:** ஒரு நிகழ்நிரலை வடிவமைக்கும் பொழுது உண்டாகுத் தவறு.

**Tool bar - கருவிப் பட்டை** : விஷ-வல் பேசிக்கின் ஒரு பகுதி. இதில் வேறுபட்ட பொத்தான்கள் உள்ளன. நான்கு வகைக் கருவிப் பட்டைகளாவன. free from select

Eraser

Pick colour

Pencil

Airbrush

Line

Rectangle

Ellipse

Selection

Fill with colour

Magnifier

Brush

Text

Curve

Polygon

Rounded rectangle

கருவிப்பட்டை

1) திட்டக் கருவிப்பட்டை : இது தவறுதல் கருவிப்பட்டை திரையின் மேலுள்ளது.

2) பதிப்புக் கருவிப்பட்டை : விஷூவல் பேசிக் குறிமையைப் பதிப்பிக்கும் பொழுது அதற்கு உதவப் பல தகவல் இனங்களைக் கொண்டது.

3) பிழை களையும் கருவிப் பட்டை : பிழை நீக்க உதவுவது.

4) படிவப் பதிப்பியற்றி : சரி செய்யும் தகவல் இனங்களைப் படிவங்களில் கொண்டது.

**tool box - கருவிப் பெட்டி :** படிவத்திற்குரிய பல கட்டுப்பாடுகளையும் இது கொண்டது. கட்டுப்பாடுகள் ஒன்றில் சுட்டெலிக் குறிப்பியை நகர்த்த ஒரு சிறிய மேல் மீட்புக் கருவிக் குறிப்பு தெரியும். இது கட்டுப்பாட்டைச் சுருக்கமாக விளக்கும். ஒரு புதிய திட்டம் தொடங்கும் பொழுது இக்கட்டுப்பாடுகள் முன்கூட்டியே கருவிப் பெட்டியில் சேர்க்கப்படும்.

**trace - சுவடு :** மென்பொருள் செய்முறையின் பொழுது தோன்றும் எல்லாப்படி நிலைகளின் பட்டியல் முறைமைப் tra

பிழையை அறிதலே இதன் நோக்கம்.

**Trace programme - சுவடு நிகழ்நிரல்** : இது குறையறி நிகழ்நிரல், ஏனைய நிகழ்நிரல்களில் பிழைகளைக் கண்டறிந்து சரிபார்க்க இது பயன் படுவது.

**Track- தடம்** : காந்த நினைவகக் கருவியமைப்பில் உள்ள வழி: தகவல்களைப் பதிவு செய்ய்ப் பயன்படுவது.

**Transaction - நடவடிக்கை** : ஆவணத்தை உருவாக்குவதற் குரிய நிகழ்வு.

**Transaction data - நடவடிக்கைத் தகவல்** : இலக்கங்கள் அல்லது உருக்களின் திரட்டு. முதன்மைக் கோப்பை உருவாக்க உதவுவது.

**Transfer - மாற்றுகை** : நினைவகத்தின் ஒரு பகுதியிலிருந்து மற்றொரு பகுதிக்குத் தகவல் களைப்படி எடுத்தல் நிகழ் நிரல் கட்டளை மூலம் இது நடைபெறுகிறது.

**Transistor - படிகப் பெருக்கி:** மின்னணுக் கருவியமைப்பு. மின்னோட்டத்தைக் கட்டுப்படுத்த அரைகுறைக் கடத்திப் பண்புகளைப் பயன்படுத்து வது. திறப்பிகளை (வால்வுகள்) மாற்றீடு செய்து கருவியின் அளவைக் கணிசமாகக் குறைத் தது. இது செய்த புரட்சியை இப்பொழுது லேசர் செய்கிறது. லேசர் கணிப்பொறியின் ஓர் இன்றியமையாப் பகுதியாக உள்ளது. கணிப்பொறி வழியாகவே ஒளியச்சு நடை பெறுவது.

**Translation- பெயர்ப்பு:** கணிப்பொறி மாதிரி போல் அமைந்த பொருளை இடப்பெயர்ச்சி செய்தல். அதாவது, கணிப்பொறி வரைகலையில் ஆய அச்சுகளின் தொகுதி வழியில் இப்பொருள் நகரும்.

**Transport - போக்குவரத்து:** இலக்கக் கணிப்பொறியில் ஒரு சேமிப்புக் கருவியமைப்பிலிருந்து மற்றொரு கருவிய மைப்பிற்கு ஒன்றை முழுதுமாக மாற்றுதல்.

**Tree - மரப்போலி** : ஒரு பூட்ட விழ்ப்பி. இதில் உட்பலன், வெளிப்பலன் வழிகளின் வரைகலை குறியீடு மரத்தை ஒத்தி ருக்கும்.

**Treeware - மரப்பொருள்** : அச்சிட்ட இதழ்களும் செய்தித் தாள்களும். கணிப்பொறி பேச்சுமொழி.

**Truncate -ஒடுக்கு** : சிறப்பில்லாத இலக்கங்களைக் குறைத்தல்.

**Trunk - நடுவகம் :** வெளிப்புற அலகிற்கும் மைய முறையாக்கிக்கும் இடையே உள்ள இடைமுக வரி. **Ttml, tagged text markup**

**Language -டிடிஎமெல் இணைப்பாடக் குறிமொழி** : கணிப்பொறி மொழிகளில் ஒருவகை.

**Turtle-ஆமை** : காட்சித் திரையிலுள்ள சிறிய முக்கோணக்குறி காட்டி. லோகோ மொழியுடன் இணைந்து ஆமை வரைகலையை நிறைவேற்றுவது.

**Turtle graphics -ஆமை வரைகலை :** கணிப்பொறித் திரையில் உருவாக்கப்படும் படங்கள். இவை லோகோ கல்வி நிகழ்நிரலைப் பயன்படுத்துவது.

**Tutorial - தனிப்பயிற்சி :** மென் பொருள் அல்லது வன் பொருளை ஓடவிடும் கட்டளைகள். நிகழ்நிரல் வடிவில் இருக்கும்.

**Type bar - அச்சுப்பட்டை :** அச்சிடும் உறுப்பு. உருக்கள் அல்லது குறிகள் புடைப்பாக இதில் அமைந்திருக்கும் எ-டு துளையிடும் அட்டை அட்ட வணையாக்கியின் அச்சலகின் பகுதி.

**Type drum -அச்சுருலை:**பீப்பாய் வடிவ உருளை, வரி அச்சியற்றியில் பயன்படுவது,பல அச்சிடும் நிலைகளைக் கொண்டது.

**Type face - எழுத்துமுகம்** :குறிப்பிட்ட அச்சியற்றி அச்சிடும் உருக்களின் வடிவமைப்பு.

**U**

**Uart, universal asynchronous receiver/trasmitter- யூஆர்ட்,அனைத்து ஒத்திசையாப் பொறுவி / செலுத்தி, அஒபெசெ :** பேரளவு தொகையாக்கு முறைமைச் சுற்று. தொடர் செய்தித் தொடர்பு வலையமைவோடு ஒரு போக்குவாயிலை இணைக்கப் பயன்படுவது.

**Ucsd pascal, university of california, san diego pascal - யூசிஎஸ்டி பாஸ்கல், கலிபோர்னியப் பல்கலைக் கழகம், சேன்டிகோ பாஸ்கல் :** பாஸ்கல் மொழியின் வடிவம். இப்பல்கலைக் கழகத்தால் உருவாக் கப்பட்டது.

**Unattended operation -உன்னிப்பிலாச் செயல் :** வன் பொருளில் பகுதிகள் தாமாக இயங்குதல்.

**Unattended time -உன்னிப்பிலா நேரம்** : கணிப்பொறி நிறுத்தப்படும் நேரம் பேணுகைப் பணிக்கு உட்படுத்தப் படுவதில்லை.

**Uncommitted logic array - கட்டுப்படா முறைமை அணி** : இது ஒருவகை ஒருங்கிணை சுற்று. முறைமைப் பகுதிகள் பலவற்றைக் கொண்டது. இவற்றின் வேலைகள் உற்பத்தியின் பொழுது வரையறைப்படுத் தப்படுவதற்கில்லை. இரண்டாம் முறையாக்கு நிலையில் இன்னது என்று கூறலாம்.

**Unconditional branch in-struction - நிபந்தனையற்ற கிளைக் கட்டளை** : ஒரு நிகழ் நிரலின் மற்றொரு பகுதிக்குக்கட்டுப்பாட்டை மாற்றுவதற் குரிய கிளைக்கட்டளை.

**Unexpected halt - எதிர்பாரா நிறுத்தம்** : குறுக்கீடு இல்லாமல் ஒரு நிகழ்நிரலில் ஏற்படும்தடை

**Uniform resource locator, url - ஒரு சீர் இடங்காணி, ஒசீஇ** : ஒவ்வொரு இடையப் பக்கத்தின் (வெப்பேஜ்) தனித்த முகவரி இது; நம் அஞ்சல் முகவரி போன்றது.

**Unit delay - அலகுத் தாமதம்** :இது வலையமைவு தொடர்பானது. இதன்வெளிப் பலன் ஓரலகு நேரத்தால் தாமதிக்கப்படும் உட்பலனுக்குச் சமம்.

**Uniterm - ஒற்றைச் சொல்** : ஒரு சொல், குறியீடு அல்லது எண் ஒரு திரட்டிலிருந்து தகவலை மீட்க, ஒரு வண்ணனையாகப் பயன்படுத்தப்படுவது.

**Unitor - ஒருங்கியக்கி** : கணிப்பொறிகளில் பூல் செயல் ஒன்று கையை ஒத்த வேலையைச் செய்யும் கருவியமைப்பு அல்லது மின் சுற்று.

**Unit - அலகு** : ஒப்பீட்டு அளவு மதிப்பு. அதே அளவின் மற்ற மதிப்புகளை தெரிவிக்கப பயன்படுவது.

**Unit record - அலகாவணம்** :சேமிப்பு ஊடுகம். எ-டு துளையிட்ட அட்டை.

**Unit string - அலகுச்சரம்** :ஒரே ஒரு உறுப்புள்ள சரம்.

**Unix - யூனிக்ஸ்** : இந்த இயங்கு தொகுதி பயனாளிகளைக் கணிப்பொறியோடு ஒரேசமயம் வேலை செய்ய அனுமதிப்பது. ஆக, இது பன்மப்பயனாளி இயங்கு தொகுதியாகும். இது

கோப்புகள் அடைவுகள் ஆகியவற்றை எவரும் முறைகேடாக அணுகாவண்ணம் பாதுகாப்பளிப்பது

**Unmodified instruction - மாறாக்கட்டளை:**அடிப்படைக் கட்டளை.

**Unpaged segment - பக்கமிடாப் பகுதி** :பக்கங்களாகப் பிரிக்கப் படாத பகுதி.ஆகவே, இது முதன்மைச் சேமகத்திற்கும் மாயச் சேமகத்திற்கும் இடையே ஒரு முழுத் தொகுதியாக மாற்றப்படுவது.

**Unused time- பயன்படா நேரம்** :இந்நேரத்தில் சொடுக்கி திறக்கப்படும். கருவி வேலை செய்யாது.

**Unwind - அகற்று** : கட்டளைகள் கொண்ட வரிசையைக் குறிப்படுத்தலும் மீள் ஒழுங்கு செய்தலும்.சிவப்பு நாடாச் செயல்களை நீக்கப் பயன் படுவது.

**Update - மேம்படுத்து** : கோப்புகள் ஆவணங்கள் முதலிய வற்றை உயர்வாக்கல்,

Usart, universal synchronous | asynchronous receiver ! Transmitter யூசார்ட், அனைத்து ஒத்திசையும் / ஒத்தி சையாப் பெறுவி / செலுத்தி, அஒஒபெசெ இது வெளிப்புறக் கருவியமைப்பைக் குறிக்கும். மையச் செயலகத்திலிருந்து ஒரு போக்குத் தகவலை இக்கருவியமைப்பு செலுத்துகைக்காகத் தகவல் தொடராக மாற்றும். அதே சமயம் தொடர் தகவல்களைப் பெற்றுக் கணிப் பொறிப் பயனுக்காக, அவைகளை ஒருபோக்குப் பிட்டுகளாகவும் இக்கருவியமைப்பு மாற்றவல்லது.

**User defined character -பயனாளி வரையறையுள்ள உரு** : ஒரு குறிமைத் தொகுதியிலுள்ள உரு.

**User friendly -பயனாளி நண்பி** : சிறப்பறிவு இல்லாமல் ஒரு பயனாளி இயக்கக்கூடிய மென்பொருள் அல்லது வன்பொருள் தொகுதி.

**User group, ug -பயனாளிக் குழு, பகு** : குறிப்பிட்ட கணிப்பொறியைத் தகவல் பகிர்வுக்காகப் பயன்படுத்தும் மக்கள்.

**User hot line -பயனாளி நேரடிச் செய்தித் தொடர்பு:**உற்பத்தியாளருக்கு நேரடித் தொலைபேசி அணுக்கம். பயனாளிகளிடம் தங்கள் பொருள்கள் குறித்த சிறப்பு களைக் கூறல்,

**User interaction -பயனாளி இடை வினை** : கணிப்பொறித் தொகுதிக்கும் பயனாளிக்கும் இடையே உள்ள வினைமிகு செய்தித் தொடர்பு.

**User memory -பயனாளி நினைவகம்** : இது மையச் செயலக நினைவகம். பயனாளி இதற்கு அணுக்கம் உடையவர். பயன்பாட்டு நிகழ்நிரல்களால் பயன்படுத்தப்படும் வரம்பிலா அணுக்க நினைவகத்தின் ஒரு பகுதி.

**User port-பயனாளி வாயில்:**ஒரு தகவல் தொடர்பு வலையமைவில் கணிப்பொறியோடு பயனாளி தொடர்புகொள்ளும் வாயில்.

**Using screen savers -திரைக் காப்பிகளைப் பயன்படுத்தல்** : வேடிக்கைக்காகப் பயன்படுத்தலாம். இவை பல.

**Usrt, universal synchronous receiver / transmitter -யூசர்ட், அனைத்து ஒத்திசை பெறுவி / செலுத்தி, அஒயெசெ:** இது விரைவுச் செலுத்தி மாற்றி. இதில் ஒத்திசை கருவியமைப்பு உள்ளது. இதில் தொடர் தகவல் ஒரு போக்கு தகவலாகவும், ஒரு போக்கு தகவல் தொடர் தகவலாகவும் மாறும்.

**Utility functions -பயன்பாட்டு வேலைகள்** : பொது முறைச் செய்முறைகளைச் செய்யப் பயன்படுபவை இவை. எ-டு அச்சிடல், நகரும் தகவல், வட்டிலிருந்து படித்தல்.

**Utility routines-பயன்பாட்டு நடைமுறைகள்** : அமைப்பு நிகழ்நிரல்களின் தொகுதியை இவை குறிக்கும். வன்பொருள் வழங்குபவரால் அளிக்கப்படுபவை. குறிப்பிட்ட வேலைகளைச் செய்யப் பயன்படுபவை.

## V

**Validation -செல்திறனாக்கல்:** தரத்திற்கேற்றவாறு இருப்பதற்குரிய ஆய்வைச் செய்தல்.

**Validity check -செல்திறன் சரிபார்ப்பு** : குறிப்பிட்ட வரை யறைகளுக்குள் தகவல் தவறுவதை உறுதிசெய்யும் சரிபார்ப்பு.

**Valid programme -செல்லுபடியாகும் நிகழ்நிரல்** : இது ஒரு கணிப்பொறி நிகழ்நிரல். இதன் கூற்றுகள் தனியாகவும் தொகுதியாகவும் நிகழ்நிரல் மொழியின் சொற்றொடரியல்

விதிகளைப் பின்பற்றுபவை. இவை எந்திர மொழி நிகழ்நிரலாக மாற்றுவதற்குரியவை.

**Value - மதிப்பு :** இது பாடப் பெட்டி மதிப்பு. இப்பெட்டியின் தவறுதல் மதிப்பைக் குறிக்கப் பயன்படுவது.

**Variable -மாறி:**ஒரு நிகழ் நிரலில் பயன்படும் குறியீடு. ஒரு மதிப்புள்ள அளவை இது குறிக்கும். இம்மதிப்பை நிகழ் நிரல் நிறைவேற்றலின் பொழுது மறு ஒதுக்கீடு செய்யலாம். நினைவக இடமே மாறிலியாகும். இதற்குப் பெயர் உண்டு.ஒ. constant.

**Variable block -மாறுதொகுதி :** தொகுதியின் அளவு நிலையாக இல்லாமல் மாறுவது. இது தகவல் தேவைகளைப் பொறுத்து அமையும். Variable connector -மாறு இணைப்பி :**விதிமுறைப் படத்தில் ஒரு முனைக்குமேல் இணைக்கப்படும் இணைப்பி.**

**Variables, kinds of -மாறியின் வகைகள் :** நினைவக இடத்தில் தகவல்கள் உள்ளதைப் பொறுத்து மாறிகள் வகைப்படுத்தப் படுகின்றன. அவ்வகையில் இவை நான்கு.

**1) முழுஎண் மாறிகள்** ; இவை மேலும் நான்கு வகை. I) நீள் முழுஎண் மாறிலி, ii)குறு முழு எண் மாறிலி, iii) குறியிலா முழு எண் மாறிலி, iv) முழு எண் மாறி.

**2)மெய் மாறிகள் :**இவை மேலும் இரு வகைப்படும்.



–

|

I) மிதப்பு மாறி, ii) இரட்டை மாறி. **3) பண்பு மாறிகள்:** இவை மேலும் இரு வகைப்படும். I) குறியிட்ட பண்பு மாறி, ii) குறியிடாப் பண்பு மாறி. **4)சர மாறிகள் :**முழு எண் மதிப்புள்ளது முழு எண் மாறிகள். மெய் மதிப்புள்ளது மெய்மாறி. ஒரு பண்பை மட்டும் கொண்டது. பண்பு மாறி. ஒரு சரத்தகவலை மட்டுங்கொண்டது சரமாறி.

**Variable, scope of -மாறியின் எல்லை :** ஒரு மாறியை எவ்வளவு காலம் பயன்படுத்தலாம் என்பதே எல்லை. அதைப் பார்க்கும் நடைமுறைகள் என்ன என்பதும் இதில் அடங்கும். அவ்வகையில் இந்த எல்லை மூன்று வகைப்படும் : 1) உள்ளிட எல்லை 2) அலகு எல்லை 3) முழு எல்லை.

**Vector - திசைச்சாரி:** இது சுட்டளவுகளைக் குறிப்பது. இச்ச சுட்டளவுகள் திசை, தொலைவு ஆகியவற்றைக் குறிப்பவை.

**Verb - பயனிலை :** கோபல் மொழியில் ஒரு நிபந்தனை யற்ற கூற்றின் ஒரு பகுதியைச் சுட்டிக் காட்டும் பகுதியின் செயல்.

**Vertical instruction -செங்குத்துக் கட்டளை:**எந்திர மொழிக் கட்டளை. இது ஒரு தனிக் கட்டளையை நிறை வேற்றுவது.

**Vertical resolution -செங்குத்துப் பகுப்புத் திறன்:** பிரிதிறன் அளவு. திரையில் தோன்றும் குறும்படங்களின் எண்ணிக்கையால் இது உறுதி செய்யப்படும். Very large scale integration, vlsi - பேரளவுத் தொகை யாக்கல்,பேஅதொ: **ஒரு சிலிகன் நறுவலில் ஒருங்கிணை சுற்றினை அமைத்தல். இது 100,000 படிகப் பெருக்கிப் பகுதிகளைக் கொண்டது.**

**Vga - video graphic array - விஜிஏ :** ஒளிக்காட்சி வரை கலை அணி.

**Video - ஒளிக் காட்சி** ; காட்சி வெளிப்பாட்டு அலகு திரை.

**Video bandwidth -ஒளிக்காட்சிக் அலைவரிசை அகலம் :** கணிப்பொறிக் கண்காணிப்பில் ஒரு வினாடிக்குத் தோன்றும் புள்ளிகளின் எண்ணிக்கை.

**Video computer -ஒளிக்காட்சிக் கணிப்பொறி :** பொதுவாக விளையாட்டு நிகழ்ச்சிகளைப் போட்டுப் பார்க்கப் பயன்படும் வணிகநிலைக் கணிப்பொறி.

Video signal -ஒளிக் காட்சிக் குறிகை : மின்னணுக் குறிகை எல்லாத் தகவல்களையும் சுமந்து செல்வது எடு நிறம், செறிவு, இடம் ஒத்திசைதல்.

**View - காட்சி:** பார்வை எல்லை.

**Viewing time -காட்சி நேரம் :** சேமித்த தகவலுக்கேற்பச் சேமிப்புக் குழாய் காட்சிப் பலனை அளித்தல்.

**Vintoncerf- விண்டன் சர்ஃப் :**



இணையத்தின் தந்தை இவர் கருத்துப்படி இணையம் எல்லையிலா நன்மைகளையும் நலங்களையும் அளிக்கக் கூடியது. இவர் மனைவி 50 ஆண்டுகள் செவிடாக இருந்தார். இதை இவர் குணப்படுத்தினார். இணையத்தை ஆராய்ந்த பொழுது இவர் இதைக் கண்டறிந்தார்.

மனித உடலியலுக்கும் மின்னணுவியலுக்கும் இடையே பாலமாக அமைந்த கருவியமைப்பு இவ்விந்தையை நிகழச் செய்தது. இது ஓர் உணர்கருவி. இவர் இக்கண்டு பிடிப்பை இணையத்தில் நிகழ்த்தினார். இணையம் என்பது ஒரு பெரிய கரையான் புற்று போன்றது என்று இவர் கூறுகின்றார்.

**Vipnet, vigyan prasar network - விப்நெட், விஞ்ஞான பிரசார வலையமைவு, விபிவ** : மக்கள் அறிவியல் பரப்பும் இந்தியத் தேசிய வலையமைவு.1989 இல் நிறுவப்பட்டது. தன்னாட்சி நிறுவனம்.

**Virgin medium -கன்னி ஊடகம்:** எவ்வகைத் தகவலும் இல்லாத கருவி எடு நெகிழ்வட்டு

**Virtual address -மாய முகவரி:** சேமிப்பு இடத் தொடர்பானது.

**Virtual circuit -மாயச் சுற்று:** குறிப்பிட்ட செய்திக்காக உள்ளது; சிப்பச் சொடுக்கி வலையமைவு மூலம் செல்லும் வழி.

**Virtual mahazine, the -மாய இதழ்:** உலகின் பன்ம, ஊடக முதல் இதழ். இந்தியாவில் 2000 செம்படம்பரில் தொடங்கப் பட்டது. இதழ்ச் சிறப்புகள் எல்லாவற்றையும் கொண்டது.

**Virtual memory -மாய நினைவகம் :** கருவி நினைவகத்திற்கு அப்பால் நினைவக வெளியை இனங்காண முறையாக்கியை அனுமதிக்கும் தொகுதி.

**Virus - நச்சுப்பிழை :** இது ஒரு

|

வரிடமிருந்து மற்றொருவருக்குப் பரவும் நச்சுயிரி அன்று. மாறாகக் காழ்ப்புள்ள நிகழ் நிரல். ஒரே இரவில் உலகம் முழுதும் ஒரு கணிப்பொறியி லிருந்து மற்றொரு கணிப்பொறிக்குப் பரவுவது. இணையம் இதற்குக் கருவியாக இருப்பது. இதைத் தடுக்க இயலும் ஒ.love bug, mtx.

**Virus primer -நச்சுபிழை அரிச்சுவடி** : கணிப்பொறி நச்சுப் பிழை ஒரு நிகழ்நிரலாகக் கூறப்படுவது. இது ஒரு நிறைவேற்றக்கூடிய குறிமுறைத் தொகுதி, ஏனைய நிகழ்நிரல்களைத் தொற்றி மாற்றித் தன் கூற்றையளிப்பது. கோப்பு நச்சுப்பிழை, பெருநச்சுப்பிழை முதலிய பிழைகளை விளக்குவது. அவற்றைப் போக்கும் வழிகளையும் விளக்குவது. எல்லா நச்சுப்பிழைகளும் தம்மைத் தாமே நகலாக்கவல்லவை. இதை இவை இரட்டிப்பு மூலம் செய்கின்றன. 1988-இல் முதல் நச்சுப்பிழை தோன்றலாயிற்று. 1990-க்குள் மக்கள் ஊடகங்களில் புதிய நச்சுப்பிழைகள் பரவத் தொடங்கின. இப்பிழைகள் பல நிறங்களில் நிலைகளில் வந்தன. வைப்பிடப் பகுதி நச்சுப்பிழை (பூட்செக்டர் வைரஸ்) நெகிழ் வட்டோடு ஒட்டிக் கொள்வது; வைப்பிடப் பகுதியின் கைவட்டில் தன்னை நகலாக்கும். கோப்புப் பிழை என்பது நிறை வேற்றக்கூடிய பிழையோடு ஒட்டிக்கொள்ளும். பொதுவாக, இந்தச்சுப்பிழை முயன்று உருவாக்கிய நிகழ்நிரலைப் பாதிப்பது.

**Virus writer -நச்சுபிழை எழுதுபவர்** : காழ்ப்புள்ள நிகழ்நிரலை எழுதுபவர். எ.டு. விரும்பு பிழை | ஐ எழுதிய ஒனல் டி காஸ்மன்.

**Virus writing -நச்சுபிழை எழுதுதல்** : அண்மைக் காலத்தில் தோன்றியது. இணையத்தில் பங்குகெள்ளும் நச்சுப்பிழை எழுத்தாளர்கள் மற்றும் திரட்டுபவர்கள் ஆகியோர் இதில் ஈடுபடுகின்றனர். இவர்கள் நச்சுப்பிழைக் குறிமுறையைத் தாராளமாகக் கையாளுகின்றனர். இவர்கள் பணி நச்சுப்பிழை சாரா ஆராய்ச்சி யாளர்களின் பணியையும் விஞ்சுவது. அவ்வகையில் இவர்கள் முயற்சிகள் அமைந்துள்ளன. இவை இணையத்தில் காட்டப்படுகின்றன. இவர்கள் எண்ணிக்கை நாளுக்கு நாள் பெருகிவருகிறது. இது வேண்டத்தகாத ஒன்று. ஏனெனில் இதில் காழ்ப்புள்ளதும் பிழை யுள்ளதுமான நிகழ்நிரல்கள் எழுதப்படுகின்றன.

**Visual basic-விஷுவல் பேசிக்:** விஷ"வல் பேசிக் என்னும் பெயரில் விஷூவல் என்பது

Visu 228

–

|

வரைகலை பயனாளி இடை முகத்தை (கிராபிகல் யூசர் இண்டர்பேஸ், ஜியூஜ) உருவாக்குவதைக் குறிக்கும். பேசிக் என்பது பேசிக் மொழியைக் குறிப்பது. கணித்தல் வரலாற்றில் இம்மொழியே அதிகம் பயன்படுவது. விஷூவல் பேசிக் என்பது மூல பேசிக் மொழியிலிருந்து உருவானது. தற்பொழுது இது பல நூறு கூற்றுகள், சார்பலன்கள், திறவுச் சொற்கள் முதலிய வற்றைக் கொண்டது. விஷுவல் பேசிக் பயன்பாட்டிலுள்ள பயனாளி இடைமுகத்தில் அடிப்படைக் கூறுகள், படிவங்களும் கட்டுப்பாடுகளும் ஆகும். இவை பொருள்கள் எனப்படும். இவை அன்றாடம் நாம் வாழ்க்கையில் பயன்படுத்தும் பொருள்கள் போன்றவையே. ஏனைய பருப்பொருள்கள் போலவே இவற்றிற்குப் பண்புகள் உண்டு புற நிகழ்வுகளுக் கேற்பத் துலங்குபவை. விஷுவல் பேசிக் இடைமுகத்தில் படிவம், கருவிப்பட்டை கருவிப்பெட்டி, பட்டிப்பட்டை, புராஜெக்ட் எக்ஸ்புளோரரர் (திட்ட ஆராய்வி), புராபர்ட்டிஸ் விண்டோ (பண்புச் சாளரம்) ஆகியவை உண்டு. நேரடி உதவி வசதிகள் மூலம் விஷுவல் பேசிக்கைப் பொறுத்த என்வினாவிற்குரிய விடையையும் பெறலாம்.

தற்பட்டி உறுப்புகள், தன் விரைவுத் தகவல் ஆகிய இரண்டும் மிகப்பயனுள்ளவை. விஷூவல் பேசிக் இவ்விரண்டையும் கொண்டது.

**Visual basic events - விஷுவல் பேசிக் நிகழ்வுகள்:** இவை பல பயன்பாடுகளை எளிதாக உருவாக்க நமக்கு உதவுபவை. திறவை அழுத்தல், சுட்டெலியை நகர்த்தல், ஒரு பொருளை அழுத்தல் முதலியவை விஷுவல் பேசிக்கல் நடைபெறும் நிகழ்வுகள். நிகழ்நிரல் அண்மையில் நடந்த நிகழ்வைப்புரிந்து கொண்டு அதற்கேற்ற் வாறு துலங்கலை உண்டாக்கும்.

Visual basic events, kinds of - விஷூவல் பேசிக் நிகழ்வு வகைகள் : இவை பின்வருமாறு. **1) பயனாளி நிகழ்வு:** இது பயனாளிக்குரியது. **2) அமைப்பு நிகழ்வு:** இதில் பயனாளிக் கட்டுப்பாடு இல்லை. இதில் அடங்குபவை. நேரச் செயல்கள், தகவல் அணுக்கப் பிழைகள், படிவ நிலை மாற்றங்கள், கட்டுப்

பாட்டு நிலை மாற்றங்கள். **3) சுட்டெலி நிகழ்வுகள் :** பா. Mouse events. **4) விசைப் பலகை நிகழ்வுகள் :**

Visu
Vsnl

229

பா. **Keyboard events.**

5) ஏனைய நிகழ்வுகள் : பா.other events

**visual basic, features of - விஷூவல் பேசிக்கின் இயல்புகள் :** உதவி வழி அமைந்த இரு இயல்புகள் இதற்குள்ளன. அவை பின்வருமாறு:

**1) தற்பட்டியல் உறுப்புகள் :** இவை நேரத்தைச் சேமிக்கும் தெரிவுகள். இவை பட்டியல் பெட்டியைத் திரையில் காட்டு பவை. இப்பெட்டி பண்புகளையும் முறைகளையும் கொண்டவை.

**2) தன் விரைவுத் தகவல் (ஆட்டோகுயக் இன்பா) :** இத்தெரிவு ஒரு சார்பலனின் சொற்றொடரியலைத் திரையில் காட்டும்.

**visual basic interface - விஷூவல் பேசிக் இடைமுகம் : பா.** Visual basic.

'*Visual display unit, vdu - காட்சி காட்டும் அலகு காசு.அ :* காட்சியலகு. இது தகவல்களைக் காட்சியாக அல்லது படமாகக் காட்டுவது. தொலைக்காட்சி போன்று தென்படும். இது பலவகை. இதன் திறன் ஏற்பி அட்டையால் உறுதி செய்யப்படுவது. இந்த அட்டை ஒரு தனிமின்சுற்று ஆகும். பரவலாக உள்ள சில ஏற்பி அட்டைகள் பின்வருமாறு.

1) வண்ண வரைகலை ஏற்பி (சிஜிஏ) 2) விரி வரை கலை ஏற்பி (ஈ.ஜி.ஏ) 3) திசைச்சாரி வரைகலை ஏற்பி (விஜிஏ) 4) மீத்திசைச்சாரி வரைகலை ஏற்பி (எஸ்.விஜிஏ) வேறுபெயர் கண்காணிப்பி.

**vlink attribute - காட்சி இயல்பு :** இது இணைப்புகளின் நிறத்தை மாற்றவல்லது. தவறுதல் மூலம் இணைய ஆராய்வியும் நெட்ஸ்கேப் செலுத்தியும் இதற்காக ஊதா நிறத்தைப் பயன்படுத்துபவை.

**voice recognition - குரலெறிதல் :** தெளிவாகப் பேசும் சொற்களை உட்பலன் கட்டளைகளாக ஏற்றுக் கொள்ளும் தொகுதி.

**voice response - குரல் துலங்கல் :** கணிப்பொறிக் கட்டுப் பாட்டுப் பதிவுத் தொகுதி. இதில் அடிப்படை ஒலிகள், எண்கள், சொற்கள் சொற் றொடர்கள் ஆகியவை தனித் தனியே மீட்புக்குச் சேமித்து வைக்கப்படும்.

**volatile memory - அழியும் நினைவகம்** : மின்னாற்றல் நிற்கும் பொழுது நீங்கும் நினைவகம்.

**volume - பருமன்** : புறச்சேமிப் பின் தனியலகு.
உட்பல்ன் வெளிப்பலன் கருவியமைப் பினால் இதிலுள்ளவற்றை எளிதாகப் படிக்கலாம், எழுதலாம்.

**Vsnl, videsh sanchar nigam - விஎஸ்என்எல், விதேஷ் சஞ்சார் நிகம், விசதி** : உலக அளவுச் செய்தித் தொடர்புள்ள இந்திய நிறுவனம். உலகத்தை அறியும் இந்தியவாயில், தொலைத் தொடர்பு வலையமைவு.

**Vtoc, volume table of contents - உள்ளடக்கப்படும் அட்டவணை, உபஅ** : ஓர் இயங்கும் தொகுதி பயன்படுத்தும் அட்டவணை. நிகழ் நிரல் கோப்புகள் அல்லது தகவல்களை இடங் காண்பது. இயல்பாகக் கோப்புகள் வட்டில் அமைந்திருக்கும்.

**V-34 - வி-34** : 33.6 கேஎம்பிஎஸ் வரை இயங்கும் இருபண்பிகளுக்குரிய நடப்புத் திட்ட அமைப்பு. (சீரி)

**V-90 - வி-90** : 56 கேபிபிஎஸ் இருபண்பிகளுக்குரிய புதிய திட்ட அமைப்பு. அனைத்துலகத் தொலைத்தொடர்பு ஒன்றியத்தால் அறிவிக்கப்பட்டது.

**W**

**Waiting time - ஓய்வு நேரம்** : மறைநேரம். சேமிப்புக்குத் தகவலை மாற்றுவதற்குக் கட்டுப் பாட்டு அலகு எடுத்துக் கொள்ளும் நேரத்திற்கும் கணிப் பொறிச் சேமிப்பால் மாறுகை தொடங்குவதற்குரிய நேரத்திற்கும் இடையிலுள்ள நேரம்.

**Walk through - தொடர்ந்து செல்லல்** : இதில் தொடக்கத் திலிருந்து முடிவு வரை வேறு பட்ட நிறைவேற்று வழிகள்

பின்பற்றப்படுகின்றன. உட்பலனாகக் கொள்ளப்படும் மதிப்புகளுக்கேற்றவாறு இவ்வழிகள் அமையும்.

**Wall paper, changing - சுவர்த்தாள் மாற்றுதல்** : இதுமேடையின் பின்னணிக் காட்சியாகும். பல தாள்கள் இருக்கும். எதை வேண்டுமானாலும் விரும்பியவாறு பயன்படுத்தலாம்.

**Wap wireless application protocol -**
**வேப்** : கம்பியிலாப்பயன்பாட்டுத் திட்ட அமைப்பு (சிரி)

**Web - இடையம்** : வலையம், மின்தளம், இணையத்தின்மிகக்கவர்ச்சியுள்ளதும் பார்க் கக்கூடியதுமான பகுதி இடையம். இதன் விரிவு உலகளாவிய இடையம் **(www)**. இது மீப் பெருந்தகவல் திரட்டு ஆகும். இதில் இலட்சக்கணக்கான பக்கங்கள் உள்ள தகவல்கள் இருக்கும். இப்பக்கம் இணையப்பக்கம் (வெப்பேஜ்) எனப்படும். இப் பக்கத்தில் பாடம்,

Web
Web



படம், ஒலி, ஒளி ஆகியவை இருக்கும். இப்பக்கங்கள் ஏனைய பக்கங்களோடு தொ டர்பு கொண்டிருக்கும். ஒன்றுடன் மற்றொன்று தொடர்பு கொள்ளும் பக்கங்களின் தொகுதி **இடையத்தளம்** (வெப்சைட்) எனப்படும். இத்தளத்தின் முதல் பக்கம் தொடக்கப் பக்கம் (ஹோம் பேஜ்) எனப்படும். இத்தொடக்கப் பக்கம் தளம் மற்றும் பிறபக்கங் களுடன் உள்ள இணைப்புகள் பற்றிய தகவல்களைக் கொண்டிருக்கும். இந்த இணைப்புகளை அழுத்த, ஏனைய பக்கங்களைப் பார்க்கலாம். ஒவ்வொரு இடையப் பக்கத்திற்கும் ஒரு தனித்த முகவரி உண்டு. இதற்கு **ஒருசீர் மூல இடங்காணி** என்று பெயர் (யூ.ஆர் எல்). இந்த யூஆர்எல் அஞ்சல் முகவரி போன்றது. இம்முகவரியில் நகரம், குடியிருப்பு, தெரு, வீட்டு எண் முதலிய அமைந்து, நம் வீட்டின் இருப்பிடத்தைக் காட்டும். அதேபோல், யூஆர் எல்லும் இணையத்தில் பக்கம் இருக்குமிடத்தைக் காட்டும் எ-டு. Http://www.yahoo.com. இணையத்தில் தகவல் காண்பதற்கு மேய்தல் என்று பெயர். இதை மேலோட்டம் விடல் என்றுங் கூறலாம். இதைச் செய்யுங் கருவி மேய்வி. இம் மேய்வி ஒரு தனி நிகழ்நிரல் ஆகும். இடையத்திலிருந்து தகவல் பெற உதவுவது. இதற்கு எடுத்துக்காட்டுகள் இரண்டு கூறலாம். இணைய ஆராய்வி, நெட்ஸ்கேப் செலுத்தி. இவ் விரண்டில் முன்னது

விண்டோஸ் 98 இன் பகுதியாகக் கிடைக்கும். பின்னது முன்னதைப் போன்றது; பரவலாகப் பயன்படுவது. பா. **Internet**.

**web page design - இடையப்பக்க வடிவமைப்பு :** இப் பக்கத்தை வடிவமைக்கும் பொழுது பல காரணிகளை நாம் கருத்தில் கொள்ள வேண்டும். அவையாவன : தேவை, அச்சு, இடையத்தைப் படித் தல், இடையத்தை எழுதுதல், நிறம் முதலியவை ஆகும்.

**Web page editors - இடையப்பக்கப் பதிப்பியற்றிகள் :** இவை மென்பொருள் பயன்பாட்டு அடைப்பங்கள். இடைய ஆசிரியர் இடையப்பக்கங்களையும் இடையத் தளங்களையும் உருவாக்க இவற்றைப் பயன்படுத்துகின்றனர். இவற்றில் பெரும்பான்மை மேய்வியில் தோன்றும் பக்கத்தை அப்படியே பார்க்க அனு மதிப்பவை. இதனால் நேரம் மிச்சமாகும்; , எச்டிஎம்எல் ஒட்டுகளைப் பயன்படுத்த வேண்டிய தேவை இல்லை. நமக்காக இந்த ஒட்டுகளை இப்பதிப்பிப்பியற்றிகள் வழங் குகின்றன. எ.டு. நெட்ஸ்கேப் கம்போசர், எம்எஸ் பிரண்ட் பேஜ்.
web
Web



**Web page hosting - இடைய பக்கத்தை அமைத்தல் :** இடையத்தின் ஒரு பகுதியாக நம் பக்கத்தை ஆக்குதல். அப்பொழுதுதான் இணையப் பயனாளிகள் இதைப் பார்க்க இயலும். ஒரு தனிப்பக்கத் தையோ முழுத் தளத்தையே நாம் உருவாக்க இயலும் தளத்தை உருவாக்குவதைவிடப் பக்கத்தை உருவாக்குதல் எளிது. எச்டிஎம்எல் குறிமுறையை எந்திரத்திலிருந்து பணிப்பிக்கு மாற்றுவதையும் இப்பக்கம் அமைத்தல் குறிக்கும்.

**web reading - இடைய படிப்பு :** பயனாளிகளில் 79 பங்கு அலகிடுதலையே விரும்புகின்றனர்; படிப்பதில்லை. கண்பொறித் திரையிலிருந்து படிப்பது என்பது கண்களுக்கு அயர்ச்சியை உண்டாக்கும். பொதுவாக நாம் தாளைப் படிப்பதைவிட 25% மெதுவானது. இடையத்தைப் பயன் படுத்துபவர்கள் மேன் மேலும் செல்ல விரும்புவதால் பொறுமையை இழப்பர். படிக்க வேண்டிய தகவல்களோ அதிகம்.

கணிப்பொறிப் பயனாளிக்கு வசதிக்குறைவை உண்டாக்கும் காரணிகள் பின் வருமாறு.

1) பணியின் இயல்பு

2) கணிப்பொறியில் செலவிடும் கால அளவு.

3) இமைப்பளவு (12-15 தடவை கள் / நிமி).

4) பணியிட வடிவமைப்பு, பார்க்கும் கண்ணாடி வடிவ மைப்பு ஆகிய இரண்டிற்கு மிடையே ஒருங்கிணைப்பு குறைவு. இக்காரணிகள் பார்வைத் தளர்ச்சியை உண்டாக்கும். கண்கள் உலரும்; பார்வை மங்கும். ஆகவே $^{1}/_{2}$ மணி நேரத்திற்கு ஒரு தடவை இடைவேளை கொள்ளுதல் நல்லது.

**website - இடையதளம் :** மின்தளம். ஒன்றுடன் மற்றொன்று தொடர்புகொள்ளும் பக்கங்களின் தொகுதிக்கு இடையத்தளம் என்று பெயர்.

**Website creation - இடையதளத்தை உருவாக்கல் :** இதற்கு இடையப்பக்கப் பதிப்பு இயற்றியைப் பயன்படுத்த வேண்டும். பதிப்பு இயற்றிகளில் சில தனி இயல்புகளைக் கொண்டிருக்கும். இவற்றிற்கு மாயாவிகள் என்று பெயர். இம்மாயாவிகள் படிப்படியாகத் தளம் அமைக்கும் செயலைத் தொடங்குபவை. பிரண்ட்பேஜ் எக்ஸ்பிரசைப் பயன்படுத்தியும் இத்தளத்தை உருவாக்கலாம். இதற்குத் தளத்தில் சேர்க்க வேண்டிய எல்லாத் தனிப் பக்கங்களையும் உரு வாக்க வேண்டும். பின் தொடக்கப் பக்கத்துடன் அவற்றை ஒரு சேர இணைக்கவும்.





**Website design, defects of - இடையத்தள வடிவமைப்புக் குறைகள் :** இடையத் தளங் களில் 90 பங்கு அளவுக்குக் குறைகளுடன் அமைக்கப்பட் டுள்ளன. அவை பின்வருமாறு:

1) முக்கிய விற்பனையில் 50 பங்கு இழப்பு.

2) வருகை தருபவர்களில் 40 பங்கு அளவுக்குத் திரும்பு தில்லை.

3) வணிகக்குறிப் பெயர் கெடுதல்; ஏனெனில் வெறுப்புற்ற ஒவ்வொரு வாடிக்கையாளரும் தன் வெறுப்பைச் சராசரி 10 பேருக்குச் சொல்கின்றார்.

4) தவறிய வடிவமைப்புகளை மீண்டும் அமைக்க ஒவ்வோ ராண்டும். அதிகம் செலவழிகிறது. இவை பாரஸ்டர் ஆராய்ச்சி முடிவுகள் ஆகும்.

**website improvement - இடையத்தள மேம்பாடு** : இதற்குரிய முதல் வழி பயனாளிகளின் வாழ்க்கைக் குறிப்பை அறிதலாகும். இது தொடர் பாகப் பின்வரும் தகவல்கள் பயனளிக்கும்.

1) சராசரி வயது

2) பால்

3) பெருந்தொழில்

4) மணநிலை

5) காட்சித் திசை அளவு

6) கணிப்பு மேடை

7) பயன்படுத்தும் மேய்விகள்

8) திரைப் பகுப்புத்திறன்

9) திறங்கள்

10) இணைப்பு விரைவு

11) பன்ம வழக்காறுகள்

12) இடையப் பக்கங்களை மக்கள் எவ்வாறு காண்கின்றனர்.

13) மேய்தலின் முதன்மைப் பயன்கள்

14) இடையத்தைப் பயன் படுத்துவதிலுள்ள சிக்கல்கள். மேற்குறித்த நிலைகள் பற்றிப் புள்ளி விவரங்கள் அளிக்க இடையத்தளங்கள் உள்ளன. இவற்றைக் கருத்தில் கொண்டு இடையத்தளம் வடிவமைக்கப்பட வேண்டும்.இக்கால இடையம் தனிப்பட்ட வாசகர்களின் நோக்கங்கள் தேவைகள் ஆகிய வை பற்றித் துப்புகள் அளிப்பதாக இல்லை.

**web world - வெப் உலகம்** : தமிழ்த் தளங்களின் தலைமைச் செயலகம். செய்தி, திரைப் படம், தொழில், விளையாட்டு, சமயம் முதலியவை இடம் பெறுபவை. சிங்கப்பூரிலிருந்து வெளி வருவது.

**Web writing - இடைய எழுத்து :** இடைய வாசகர்களின் கருத்துகளை அறிந்தே, இடையப் பக்கங்கள் அலகிடக்கூடிய பாடத்தைப் பயன்படுத்த வேண்டும் இதற்குத் தேவைப்படுபவை.
wheel
Win


1) சிறப்புள்ள திறவுச் சொற்கள்.

2) பொருள்பொதிந்த துணைத் தலைப்புகள்.

3) தெறிப்புப் பட்டியல்கள்.

4) ஒரு கருத்தைத் தெரிவிக்கும் சிறிய பத்திகள்.

5) முடிவுடன் தொடங்குதல்; சுருக்கமான விளக்கங்கள் அளித்தல்.

6) சொற்களின் சரியான எண்ணிக்கையில் 50 பங்கு பயன் படுத்தல்.

**Wheel printer-ஆழி அச்சியற்றி** : அச்சாழி விளிம்பிலிருந்து உருக்களை அச்சியற்றும் அச்சியற்றி.

**wide area network - அகல் பகுதி வலையமைவு** : இது ஒரு வலையமைவு. நீண்ட தொலை வுகளுக்குக் கணிப்பொறிகளை இணைப்பது. இயல்பாகத் தொலைபேசி வலையமைவு பயன்படுத்தப்படும். ஒ. Local area network.

**width attribute - அகல இயல்பு**: இது, அட்டவணையின் அக லத்தைக் குறிக்கப் பயன்படு வது. இதன் மதிப்பு விழுக் காடாகத் தெரிவிக்கப்படுவது. இதனால் மேய்விச் சாளரத்தின் அளவு மாறும் பொழுது, அட்டவணையும் அதற்கேற்ப அளவில் மாறும். பா. Attribute.

**wilhelm shickard - வில் கெல்ம் ஷிக்கார்டு** : 1623-இல் முதல் எந்திர இலக்கக் கணிப் பானைப் புனைந்தவர். இது கூட்டல், கழித்தல், பெருக்கல், வகுத்தல் ஆகிய அடிப்படைச் செயல்களைச் செய்தது.

**windows - சாளரம்** : இது ஓர் இயங்கு தொகுதியாகும். எடு விண்டோஸ் 98, இத்தொகுதி ஒரு மென்பொருள் வன்பொரு

ளுக்கும் பயனாளிக்கும் இடை யே பாலமாக அமைவது. பல நடைமுறைப் பணிகளைச் செய்வதால், இதைக் கொண்டு கணிப்பொறியில் நன்கு வேலை செய்யலாம்.

**windows 98, customizing - விண்டோஸ் 98 ஐத் தேவைக் கேற்றதாக்குதல்**: இது மேடையை வேண்டியவாறு பயன்ப்டுத்த உதவுவது. பின் னணியை மாற்றியும் படங் களைச் சேர்த்தும் தகர்த்தியும் பணிப்பட்டையை நகர்த்தியும் அளவுப் படுத்தியும் மேடை யின் தோற்றத்தை மாற்ற இயலும்.

**windows dialog boxes - சாளர உரையாடல் பெட்டிகள்** : விண்டோஸ் 98 இப்பெட்டி களைப் பயன்படுத்துகிறது. நோக்கம் தகவல்களைத் திரை யில் காட்டல். இவற்றிலிருந்து வேண்டியவற்றை நாம் தெரிவு செய்யலாம். இப்பெட்டிகளில் உள்ள கட்டுப்பாடுகள் பின் வருமாறு. **1) பாடப் பெட்டிகள் :** தகவல்களைப் பதிவு செய்ய.

**2) பட்டியல் பெட்டிகள் :** தெரிவுகளைத் திரையில்காட்டுவது.

**3) கீழிறக்கப் பட்டியல்:** பெட்டிகள் தெரிவுகளைத் திரையில் காட்டுவது.

**4) வானொலிப் பொத்தான்கள்:** பன்மத் தெரிவுகளைத் திரையில் காட்டுபவை.

**5) சரிபார்ப்புப் பெட்டிகள்:** இவை தெரிவுகளைத் தள்ளவும்,கொள்ளவும் பயன்படுபவை. **6) பொத்தான்கள் :** இவை நீக்கும் அல்லது சரிசொல்லும் பொத்தான்கள். **7) தத்திகள்:** வேறுபட்ட தெரிவுகளைத் திரையில் காட்டு

**Windows, evolution of - சாளர வளர்ச்சி :** சாளரத்தின் முதல் வடிவம் விண்டோஸ் 3.0. முதல் தடவையாகச் சாளரம் கோப்பு மேலாண்மை வசதிகளோடு வந்தது. இத்துடன் பிற அமைப்புக் கருவிகளும் இருந்தன. சாளரத்துடன் பயன் படக்கூடிய பல பயன்பாடுகளும் அங்காடிக்கு விரைவில் வரலாயின. இதனால் ஒரு சில ஆண்டுகளில் சாளரம் அலுவலகங்கள், வீடுகள், தொழிலகங்கள் முதலியவற்றில் பயன்படலாயின. அடுத்து விண்டோஸ் 3.1 சிறந்த இயல்புகளுடன் வெளிவந்தது. இதில் நிகழ்நிரல் மேலாளி ஒன்று இருந்தது. அதே சமயம், மைக்ரோசாப்ஃட் தொழிலாளர்களுக்காக விண்டோஸ் 3.1- ஐ உருவாக்கிற்று.இந்நிலையில் சாளரம் பேரளவு பகுதி

அடிப்படையில் அமைந்த வலையமைவுச் சூழ்நிலையில் பயன்படலாயிற்று. இப்பொருள்களில் ஒன்றுகூட இயங்கு தொகுதியாக இல்லை. எம்.எஸ் டாஸ் உடன் வேலைசெய்த நிகழ்நிரல்களே. அடுத்த பெரும் வளர்ச்சி விண்டோஸ் 95 ஆகும். இது முழுக்க முழுக்க இயங்கு தொகுதியே. இப்பொழுது எம்.எஸ்-டிஒஎஸ் கட்டுப்பாடு நீங்கியது. இதனால் பயன்பாடுகள் அதிகமாயின. அடுத்து விண்டோஸ் 98 வரலாயிற்று. இது பல புதிய பயன்களை அளிப்பது. இணையத்துடன் தொடர்பு கொண்டு வேலை செய்ய உதவுவது.இறுதியாக இப்பொழுது மேம்பட்ட விண்டோஸ் 2000 வந்துள்ளது.

**Windows explorer - சாளர ஆராய்வி** : இது ஒரு நிகழ்நிரல்.கோப்புகளையும் மடிப்பட்டைகளையும் மேலாண்மை செய்ய உதவுவது.

**Windows, parts of - சாளர பாகங்கள் :**

**1) சொல் திண்டு** : இது சொல்முறையாக்கி
win
Word



**2) தலைப்புப் பட்டை** : இது பயன் பாட்டின் பெயர் சொல்வது.

**3) அளவுப் பொத்தான்கள் :** தலைப்புப் பட்டையில் உள் ளன. இவை மூன்று வகை

I) குறைந்த அளவுப் பொத்தான் சாளரத்தின் அளவைக் குறைப்பது. Ii) உயரளவுப் பொத்தான் : சாளரத்தின் அளவை அதிக மாக்குவது. Iii) மீட்புப் பொத்தான் சாளரம் தன் பழைய நிலைக்கு வர உதவுவது.

**4) பட்டிப்பட்டை** : தலைப்புப் பட்டைக்குக்கீழுள்ளது. வேறு பட்ட பட்டிகளைக் காட்டும்.

**5) கருவிப்பட்டை :** பட்டிப் பட்டைக்குக் கீழ் பல கருப் பட்டைகள் இருக்கும் இவை கோப்புகளைச் சேமிக்க உதவு பவை.

**Windows 98, uses of-strength 98 இன் பயன்கள்** : இது பயனாளி நட்புள்ளது. எவரும் பயன்படுத்தலாம்.

1) இதிலுள்ள வரைகலைப் பய னாளி இடைமுகம் எல்லாத் தகவல்களையும் திரையில் காட்டவல்லது.

2) இதிலுள்ள பல பயனாளி நிகழ்நிரல்களைப் பயன்படுத்த உதவுவது :

1) கணிப்பான்

Ii) வண்ணமிடல்

Iii) சொல்லட்டை

Iv) இணைய ஆராய்வி

V) படத்திரட்டு

3) இதில் மேலும் பல மென் பொருள் பயன்பாடுகள் உள் ளன : மைக்ரோ சாஃப்ட் ஆபீஸ்,

4) ஒரே சமயம் பல பயன்பாடு களை ஓடவிடலாம்.

5) மேசையை இருவழிகளில் பயன்படுத்தலாம்.

6) இதில் அருமையான இணைய இடைமுகம் உள்ளது.

7) எளிதாக இடையப் பக்கங் களை மேலோட்டமிடலாம்.

**Wml, wireless markup language - டபுள்யூஎம்எல்** கம்பியிலாக் குறிமைமொழி. கணிப் பொறி மொழிகளில் ஒருவகை.

**Word - சொல் :** தகவல் அடிப் படை அலகு. பிட்டுகளின் கோலம். 8 பிட்டுச் சொல் g. Bit, byte.

**Word format - சொல் படிவமைப்பு :** ஒரு சொல்லில் உருக்களை அமைத்தல்.

**Word length - சொல் நீளம் :** ஒரு சொல்லிலுள்ள பிட்டு களின் எண்ணிக்கை, (0க்கள் 1கள்)

**Word processing - சொல்முறையாக்கல் :** இது கணிப்பொறி வழியமைந்த முறை அச்சிட்ட செய்தியை உருவாக்கல், பதிப்பித்தல், வரிசைப்படுத்தல், அச்சிடல், செலுத்தல் ஆகிய செயல்
Word
Write



கள் இதில் அடங்கும்.

**Word processor, wp - சொல் முறையாக்கி,**
**சொமு :** கணிவயப்பட்ட தட்டச்சு எழுதி. எழுதிய பொருளை

அப்படியே உருவாக்கும் வகைப்படுத்தும், பதிப்பிக்கும், அச்சிடும், செலுத்தும். இதில் 5 பகுதிகள் உண்டு.

**1) விசைப் பலகை** : தகவலை உள்விடல்.

**2) துண்முறையாக்கி** : பதிப்புச் செயல் பற்றி முடிவு எடுப்பது.

**3) காட்சித் திரை** : பதிப்பித்த தகவலைத் திரையில் காட்டல்.

**4) நெகிழ்வட்டு** : கோப்புகள் சேமிக்கப்படுதல்.

**5) அச்சியற்றி** : பாடத்தை அச்சிட

**word rate - சொல்வீதம்** : ஒரு சொல் தொடங்குவதற்கும் அடுத்த சொல் தொடங்கு வதற்கும் கழிந்த கால அளவு. இது நிகழ் அளவு ஆகும்.

**word size - சொல் அளவு** : குறிப்பிட்ட அளவு பிட்டுகள் எ-டு 8 பிட்டுச் சொல்.

**word time - சொல் நேரம்** : நினைவகத்தில் தகவலுக்குரிய ஒரு சொல்லை முறையாக்க ஆகும் நேரம்

**work area - பணிப் பகுதி** : நினைவகப் பகுதி. இதில் தகவல் இனங்கள் முறையாக் கப்படும் பொழுது தற்காலிகமாகச் சேர்த்து வைக்கப்பட்டிருக்கும்.

**wordpad - சொல்லட்டை** : இது ஒரு எளிய சொல்முறையாக்கி; ஒரு நிகழ்நிரல் பாடத்தை அச்சிடவும் சேமிக்கவும் உதவுவது.

**working programme - செயல் படும் நிகழ்நிரல்** : செல்திறனுள்ள நிகழ்நிரல். எந்திர மொழியாக மாற்றப்பட்டுக் கணிப்பொறியால் நிறைவேற் றப்படுவது.

**workspace - பணியிடம்** : கணிப்பொறி நினைவக இடம்: சரமுறையாக்கு மொழியில் முறைப்படுத்தப்பட வேண்டிய சரத்தைக் கொண்டது.

**word computer citizen - உலகக் கணிப்பொறிக்**

**குடிமகன்** : இம்மையம் பாரிசில் அமைந்துள்ளது. கணிப்பொறி அறிவை ஒவ்வொரு உலகக் குடிமகனுக்கும் வழங்குவது.

**Worldtel - வோர்ல்டு டெல்** : இலண்டனில் அமைந்துள்ள தனியார் துறை நிறுவனம். அனைத்துலகத் தொலைத் தொடர்பு ஒன்றியத்தால் உருவாக்கப்பட்டது. வணிக அளவில் வளரும் நாடுகளில் செய்தித்தொடர்பு அகக்கட்டமைப்பை வளர்ப்பது. இதன் தலைவர் திரு. சாம் பிட்ரோடா, தமிழ் நாட்டில் இணைய நிலையங்களை அமைத்து இணைய அறிவு வளரத் தமிழக




அரசுடன் ஒப்பந்தம் செய்து கொண்டுள்ளது.

**Writable control storage - எழுதும் கட்டுப்பாட்டுச் சேமிப்பு** : நுண் நிகழ்நிரல்களைக் கொண்ட கட்டுப் பாட்டுச் சேமிப்பின் பகுதி. இதைக் கோப்பறையிலிருந்து சுமையேற்றலாம்.

**Write - எழுது** : ஒரு சேமிப்பி லிருந்து மற்றொரு சேமிப் பிற்குத் தகவல்களை மாற்றுதல்.

**Write error - எழுத்துப்பிழை** : சேமிப்புக் கருவியமைப்பில் தகவல் எழுதப்படா நிலை. தூசி, பதிவுப்பரப்புச் சேதம் முதலியவை காரணங்கள்.

**Write head - எழுது-தலை** : காந்த ஊடகத்தில் எழுதப் பயன்படும் மின்காந்தம். எ-டு காந்த நாடா.

**Write pulse - எழுதுதுடிப்பு** : இயக்கத் துடிப்பு நுண்ணறை யில் எழுதுவது.

**Write time - எழுதுநேரம்** : சேமிப்புக்குத் தகவல் செல்வ தற்கும் அது முடிவதற்கும் இடையிலுள்ள நேரம் ஓய்வு நேரம் நீங்கிய அணுக்க நேரம் இது படிக்கும் நேரத்தோடு தொடர்புள்ளது.

## X

**X-2 எக்ஸ்-2:** 56 கேபிபிஎஸ் அலகில் வேலைசெய்யும் இரு பண்பிகளுக்குரிய நடப்புத் திட்ட அமைப்பு (சீரி). அமெரிக்க ரோபட்டிக்ஸ் நிறுவனத்தால் உருவாக்கப்பட்டது. தற்போதுள்ள பெயர் வி.90.

**Xerographic printer - உலர்ச்சியற்றி** : பக்க அச்சியற்றி, இதில் உருக்கோலம் முழுப் பக்கத்திற்கும் பொருந்துமாறு அமையும். நகல் அச்சியற்றி என்றுங் கூறலாம்.

**Xml, extensible markup language - எக்ஸ்எம்எல், விரிகுறி மொழி, விகுமொ** : ஒரு புதிய இணைய மொழி. இடையத்தை அறிவார்ந்ததாக்குவது. இதற்கு எந்திரத் தகவல் பயன்படுத்தப்படும். இத்தகவல் இடையப் பக்கங்களின் உள்ளடக்கம் அமைப்பு ஆகியவை பற்றியவை. புதிய மொழிகளுக்கு வாயிலாக இருப்பது. இசைக் குறிமானம், கணித மற்றும் வேதிக்குறியீடுகள் முதலியவற்றை இடையத்தின் வழிஅனுப்ப உதவுவது. இதைப் பாட வடிவில் அனுப்பலாம். தொழில் துறையிலும் பயன் படுவது. இதற்கு நல்லவருங் காலம் உள்ளது.

**Xor - exclusive or - சிறப்பு அல்லது** : தனி, அல்லது.

**X-series - எக்ஸ் வரிசை :** தரத் தொடர்; சிசிஐடிடியினர்ல் பரித்துரைக்கப்பட்டுள்ளது.

**X - y cursor addressing - எக்ஸ்-ஒய் குறிப்பி முகவரியிடல்** : திரையில் குறிப்பியின் நிலையை இடமறிதல், இதற்குப் பார்வையாக எக்சையும் (கிடைமட்டம்) ஒய்யையும் (செங்குத்து) ஆயத்தொலை நிலையாகக் கொள்ளுதல்.

**X - y plotter - எக்ஸ் - ஒய் வரைவி** : தகவல் குறிப்பி.

## Y

**Y2k - ஒய்2கே:** ஆண்டு 2000.

**Y2k problem - ஒய்2 சிக்கல்** : 2000 ஆண்டுச் சிக்கல். வேறு பெயர் 2000 ஆண்டுப் பிழை. 1999 லிருந்து 2000க்குள் கணிப்பொறி எண் குழப்பம். 2000 என்பதற்குப் பதிலாக 1990க்குச் செல்லலாம் எனக் கருதப்பட்டது. சிக்கல் ஓர் எண்ணைப் பொறுத்ததே. அனைவரும் நினைத்தபடி அவ்வளவு கடுமையாக அமையவில்லை. பெருஞ்செலவில் உலகம் முழுதும் இச்சிக்கல் எளிதாகத் தீர்க்கப்பட்டுக் கணிப்பொறி கள் ஒழுங்காக இயங்கத் தொடங்கின. பா. **Millennium bug.**

**Y-position - ஒய் நிலை** : துளையிட்ட அட்டையின் மேல்

## Z

**Zap - சேப் :** திரையைத் தெளி வாக்கப் பல நிகழ்நிரல்களில் பயன்படும் ஆணை. அனைத் துலக அளவில் பயன்படுவது.

**Zero access storage - சுழியணுக்கச் சேமிப்பு:** தற்பொழுது இது வழக்கில் இல்லை.

**Zero balance - சுழிச் சமன்:** விவரங்களும் கூட்டுத் தொகை களும் சரியாக இருத்தல்

**Zero condition - சுழிநிலை:** காந்த துண்ணறையின் நிலை; சுழியைக் குறிப்பது.

**Zero error - சுழிப்பிழை:** செலுத்தும் பெறும் சுற்றுகளில் ஏற்படும் தாமத நேரத்தைக் குறிப்பது.

**Zero level address - சுழி மட்ட முகவரி.**

**Zero outpùt signal - சுழி வெளிப் பலன் குறிகை:** காந்த நுண்ணறையால் அளிக்கப்படு வது சுழிநிலையில் உண்மைத் துடிப்பு அளிக்கப்படும் பொழுது உண்டாவது.

**Zero suppression - சுழி ஒடுக்கம்:** சிறப்பிலாச் சுழியை அச்சியற்று முன் நீக்குதல். பதிப்பித்தலின் ஒரு பணி இது.

**Z-net-இசட் இணையம்:** உள்ளூர்ப்பகுதி வலையமைவு.

**Zone - மண்டலம்:** காந்த வட்டுப் பகுதி, முதன்மை நினைவகப் பகுதி.

**Zone digit - மண்டல இலக்கம்:** ஒரு குறிமையின் பகுதிக்குத் திறவாக உள்ள எண்.

**Zoom - மலர்ச்சி:** வரைகலை மென்பொருள் வசதி. இதில் படத்தின் அளவைக் குறைக்கலாம் அல்லது பெருக்கலாம்.